மேலும் மேற்படி வசனத்தில் அக்நிஹோத்ர பதத்துடன் சேர்த்துப்படிக்கப்பட்டிருக்கிற மற்ற தர்மங்களும் விகல்பிதமானவைகளே. அதாவது அநித்யங்களே. "கவாலம்பம்" என்ற கோமேத யாகமானது நித்யமல்ல, விகல்பிதமேயாகும், செய்தாலும் செய்யலாம் விட்டாலும் விடலாம். அதுபோல் ஸந்யாஸமும் அநித்யமானதே. பிராம்மணனுக்கு ஸந்தியாவந்தனாதிகளைப்போல் ஸன்யாஸம் நித்யமல்ல. இஷ்டமிருந்தால் ஸன்யாஸத்திற்கு போகலாம். நிர்ப்பந்தமில்லை. இப்படியே சிராத்தத்தில் மாம்ஸம் சேர்ப்பதும் நித்யமல்ல, விகல்பமே. ஆதலால் அநித்யம், அல்லது விகல்பிதமான ஸன்யாஸாதிகளுடன் சேர்ந்து படிக்கப்பட்டுள்ள அக்நிஹோத்ரபதமும் ஸஹபாட நியாயத்தால் அநித்யமான காம்ய அக்நிஹோத்ரத்தையே குறிக்கிறதென்பது மறுக்கமுடியாத விஷயம்.

## சுருதிவிதியை புராணவசனம் பாதிக்குமா ?

இங்கு மற்றொரு பிரபல நியாயமும் உள்ளது. பிரம்ஹஸூத்ரத்தில் புருஷார்த்தாதிகரணத்தில், யாவஜ்ஜீவ சுருதியால் நித்யமாக விதிக்கப்பட்ட அக்நிஹோத்ரத்தை பரித்யாகம் செய்துவிட்டு ஸந்யாஸ ஆச்ரமத்திற்குப் போகக்கூடாது என்ற சங்கை ஏற்பட்டதில், யாவஜ்ஜீவசுருதி பிரபலமென்றும், இதற்கு ஸமமான பலமுள்ள ஸன்யாஸவிதி சுருதி வாக்யமில்லாததால் ஸந்யாஸத்திற்கே போக அதிகாரம் ஸித்திக்காதென்றும் ஸன்யாஸத்தை விதிக்கும் ஸ்மிருதிவாக்யமிருந்தாலும அது துர்பலமாகையால் யாவஜ்ஜீவ சுருதியை பாதிக்கும் சக்தியுள்ளதல்லவென்றும் விவாதம் ஏற்பட்டது.

பராமர்சாதிகரணத்தில் ஸ்ரீ பகவத் பாதாசார்யார்

स्मृत्याचाराभ्यां तु तेषां प्रसिद्धिः न प्रत्यक्षश्रुतेः। अतश्च प्रत्यक्षश्रुति विरोधेसति अनादरणीयास्ते भविष्यन्ति।

என்ற வாக்யத்தால் பிரத்யக்ஷ சுருதி விஹித யக்ஞாதிகர்மாக்களுக்கு விரோதமாக ஸந்யாஸ ஆச்ரமம் ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டாலும், அந்த ஸ்மிருதிகள் யாவஜ்ஜீவ சுருதி விருத்தங்களாகையால் ஆதரிக்கத்தக்கவையல்ல என்று கூறினார்.

ஸ்ரீ ராமானுஜரும் ऊर्ध्वरेतस्सु च शब्दे हि என்ற ஸூத்ரபாஷ்யத்தில்

नन्नु ऊर्ध्वरेतस आश्रमा न सन्त्येव। यावज्जीवमग्निहोत्रंजुहोतीत्यादिना अग्निहोत्रदर्शपूर्णमासादीनां यावज्जीवाधिकाश्रुतेः। श्रुतिविरुद्धानां स्मृतीनां च अप्रामाण्यात् ॥

என்ற வாக்யத்தால் யாவஜ்ஜீவவிதி விஹித அக்நிஹோத்ராதிகர்மாக்களைப் பாதிக்கக்கூடிய ஸ்ம்ருதிகள் அப்ரமாணங்களென்று தெளிவாகக்கூறினார்.

ஸூத்ரகாரர் இந்தக் கக்ஷியை ஏற்றுக்கொண்டு யாவஜ்ஜீவ சுருதிக்கு ஸமமான பலமுள்ள ஸந்யாஸவிதி சுருதியும் இருப்பதாக

ऊर्ध्वरेतस्सु च शब्दे हि। என்ற ஸூத்ரத்தில் शब्दे हि என்பதாலும் अनुष्ठेयं बादरायणः साम्यश्रुतेः ॥ என்பதாலும் சொன்னார். இவ்வாறு யாவஜ்ஜீவ சுருதியை பாதிக்கக்கூடிய ஸந்யாஸ விதாயக சுருதியைக் காட்ட ஸூத்ரகாரர் சிரமப்படுகிறார்.

இதிலிருந்து யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரத்தை விதிக்கும் யாவஜ்ஜீவ சுருதியை அதற்கு ஸமமான பலமுள்ள மற்றொரு சுருதிதான் பாதிக்கமுடியுமென்றும் நித்ய ச்ரௌதகர்மாக்கள் பிரத்யக்ஷ சுருதி விஹிதங்களாகையால் பிரபலங்களென்றும் அவைகளை ஸ்ம்ருதிவசனங்கள்கூட பாதிக்கச் சக்தியற்றவையென்றும் நியாயம் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

அதன்படி இங்கு யாவஜ்ஜீவ சுருதி விஹிதமான நித்ய அக்நிஹோத்ரத்தை "अग्निहोत्रं गवालंभं" என்ற கலிவர்ஜ்ய பிரகரண புராண ச்லோகமானது பாதிக்கச் சக்தியற்றதே. சுருதி விதியை விட புராண விதியானது துர்பலமல்லவா? ஆகையால் இங்கு காணப்படும் அக்நிஹோத்ரமானது யாவஜ்ஜீவ சுருதியால் விதிக்கப்பட்ட நித்யாக்நிஹோத்ரத்தைத் தடுக்கவந்ததல்ல. காம்ய அக்நிஹோத்ரம் அ[illegible]மமாகையால் அதை மேற்படி புராண வசனம் தடுக்கச் சக்தியுள்ளதே. ஆதலால் நித்யாக்நிஹோத்ரத்திற்கு கலியில் தடையில்லை.

இம்மாதிரி வ்யவஸ்தை செய்யாவிடில் விரோதம் ஏற்படுவதைக் கவனிக்கவேணும். கீழே நாம் நிரூபித்தபடி अग्निहोत्र-हवन्याश्च लेहः। என்கிற வசனமானது கலியில் அக்நிஹோத்ர ஹவிஸ்சேஷத்தை உச்சிஷ்டமாய்ப் பண்ணி சாப்பிடக்கூடாதென்று தடுப்பதன்மூலம் கலியில் அக்நிஹோத்ராநுஷ்டானத்தை தெளிவாக அங்கீகரிக்கிறது. अग्निहोत्रं गवालंभं என்ற வசனமோ கலியில் அக்நிஹோத்ரத்தை நிஷேதிக்கிறது. இந்த இரண்டு வசனங்களுக்கும் பரஸ்பரம் விரோதம் ஏற்படுவதால், விரோதமின்றி வியவஸ்தை செய்யவேண்டியது அவச்யமாகிறது. கீழே காட்டிய பிரமாண ந்யாய பலங்களைக்கொண்டு கலியில் அக்நிஹோத்ர அநுமதியானது நித்யாக்நிஹோத்ர விஷயமென்றும் நிஷேத விதியான மற்றொன்று காம்யாக்நிஹோத்ர விஷயமென்றும் வியவஸ்தை செய்வதே பொருத்தமாயிருக்கிறது.

இதில் மற்றொருவிதமான வ்யவஸ்தையும் ஸ்மிருதி சந்திரிகை, நிர்ணயஸிந்து முதலியவைகளில் கூறப்பட்டுள்ளது.

## அர்த்தாதானம் உண்டு. பூர்ணாதானமே நிஷித்தம்.

ஆதானத்தில், அர்த்த (பாதி) ஆதானம், ஸர்வாதானம், என்று இரண்டுவகை ஸூத்ரகாரர்களால் கூறப்பட்டிருக்கிறது. ஆதானகாலத்தில் ஸ்மார்த்தமான ஔபாஸனாக்நியை, பூர்ணமாக ச்ரௌதாக்நியில் கலந்துவிடுவது (सर्वाधानं) ஸர்வாதானமாகும், பாதி ஔபாஸனத்தைமாத்திரம் கலந்து, பாக்கி பாதி ஔபாஸனத்தை தனியாக வைத்துக்கொள்ளுவது "அர்த்தாதானம்" (अर्धाधानं) எனப்படுகிறது. ஔபாஸனாக்நியை முழுவதும் சிரௌதாக்நியில் கலந்துவிட்டால் சிராத்தாதிகளான கிருஹ்யகர்மாக்கள் எல்லாம் தக்ஷிணாக்நியில் செய்யப்படவேண்டுமென்று ஆபஸ்தம்பர்.

औपासनश्चेदाहितः एतस्मिन्नेवास्य गार्ह्याणि कर्माणि क्रियन्ते।

என்று சொன்னார்.

மேற்படி ஸர்வாதன பக்ஷமானது கலியில் நிஷேதிக்கப் பட்டுள்ளது.

अर्धाधानं स्मृतं श्रौतस्मार्ताग्न्योस्तु पृथक्कृतिः ।
सर्वाधानं तयोरैक्यकृतिः पूर्वयुगाश्रया ॥

இந்த வசனத்தில் ஸர்வாதானம் முன்யுகங்களைச் சேர்ந்த தென்பதால் கலியில் ஸர்வாதான மாத்ரமே நிஷேதிக்கப்பட்ட தேயல்லது அர்த்தாதானத்திற்கோ, அதன் மூலமான அக்நி ஹோத்ராதிகளுக்கோ கலியில் நிஷேதமில்லையென்று ஸ்ம்ருதி சந்திரிகையில் வ்யவஸ்தை செய்யப்பட்டது. ஆதலால் अग्निहोत्रं गवालंभं என்ற கலிநிஷேதமானது ஸர்வாதான விஷயமென்று அதில் நிர்ணயம் செய்யப்பட்ட

நிர்ணயஸிந்துவில் மேற்படி अग्निहोत्रं गवालंभं என்ற நிஷேத வசனத்தை எடுத்து அங்குள்ள அக்நிஹோத்ர பதத்திற்கு ஆதானம் என்று வியாக்யானம் செய்யப்பட்டது.

अग्निहोत्रं—तदर्थमाधानम् । एतच्चसर्वाधानपरम् ।

என்று அந்த நிஷேத வசனம் ஸர்வாதான விஷயமென்று நிச்சயித்து இதற்கு ஸ்ம்ருதி சந்திரிகையையும் பிரமாணமாகக் காட்டினர்.

மேலும் चत्वार्यब्दसहस्राणि என்ற வசனத்தில் கலியில் நாலாயிரத்து நானூறு வருஷங்களுக்குப் பிறகு ஆதானமும், ஸந்யாஸமும் செய்யக்கூடாதென்ற விஷயமும் ஸர்வாதான விஷயமென்று நிர்ணயஸிந்து நிர்ணயித்ததைக் காணலாம். ஆதலால் கலியில் அர்த்தாதானமும், அதன் மூலமான அக்நிஹோத்ர யாகாதிகளும் காலநியமும் வேறு வரையறை எதுவுமின்றியும் செய்யப்படலாமென்று ஸ்ம்ருதி சந்திரிகாதிகள் ஸித்தாந்தம் செய்தன. இதையனுஸரித்து தீக்ஷிதீயத்தில் இருக்கும் வாக்யத்தையும் கீழே காட்டினோம்.

வர்ணப்பிரிவும், வேதமும் உள்ளவரையில்
ஸன்யாஸமும் அக்நிஹோத்ரமும் உண்டு.

இங்கு வேறுசில நிபந்தனகாரர்கள்.

यावद्वर्ण विभागोऽस्ति यावद्वेदः प्रवर्तते ॥
सन्यासं च अग्निहोत्रं च तावत् कुर्यात् कलौयुगे ॥

என்ற வசனமானது, "கலியில எதுவரையில் பிராம்ஹணாதி ஜாதிப்பிரிவு நிலைத்திருக்கிறதோ, எதுவரையில் வேதங்கள் பிரசாரத்திலிருக்கின்றனவோ, அதுவரையில் கலியிலும் ஸன்யாஸத்தையும், அக்நிஹோத்ரத்தையும் அநுஷ்டிக்கலாம்"

என்று விதிப்பதைக்கொண்டு கலியில் இப்போதும் அவைகளைச் செய்யலாமென்றும் நிர்ணயித்தார்கள். இந்த வசனமானது अग्निहोत्रं गवालंभं என்கிற வசனத்திற்கு அபவாத வசனமென்றும் அதாவது விலக்கு விதியென்றும் சொன்னார்கள். இங்கு வர்ண விபாகம் என்று பொதுவாயிருந்தாலும் யாகாதிகளில் அதிகாரம்பெற்ற பிராம்மண ஜாதியானது ஜாதிக்கலப்பில்லாமல் சுத்தமாயிருக்கும்வரையில் என்று அர்த்தம் கொள்வதே உசிதமாகும்

அக்நிஹோத்ரத்தை கலியில் நிஷேதிக்கும் வசனங்களில் ஸன்யாஸத்தையும் சேர்த்து நிஷேதிப்பதை, கலியில் அக்நிஹோத்ரத்தை ஆக்ஷேபிப்பவர்கள் கவனிக்கவேண்டும். கலியில் ஸந்யாஸத்தை ஒப்புக்கொண்டு அது நிர்விவாதமாக நடப்பதற்கு பிரமாணமிருந்தால், அந்த பிரமாணமே கலியில யாகம் செய்வதற்கும் பிரமாணமாய் இருக்கிறதல்லவா? ஸந்யாஸத்திற்கு நிஷேதமில்லையானால் யாகங்களுக்கும் நிஷேதமில்லையென்று நிஶ்சிதமாகிறது.

ஆகையால் கலியில்யாகாக்நிஹோத்ராதிகளும், ஸந்யாஸமும் இன்றளவும் வித்வத் ஸிரேஷ்டர்களான மஹா ஸிஷ்டர்களாலும் ஆசரிக்கப்பட்டுவருவது நியாயமாயிருக்கிறது. முன்காலத்தில் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் முதலிய மஹநீயர்களும் இப்போதும் அநேக ஸிஷ்டர்களும் வித்வான்களும் கலியில்கூட யாகாதிகள் செய்வதற்கு மேற்கண்ட வசநவ்யவஸ்தையே காரணமென்று அறியவேணும்.

## யாகநிந்தையும் பசுவிஷய நிந்தையும் பாபகரம்.

இவ்வாறு, வைதிகமத பிரமாணங்களைக் கொண்டு நன்கு பராமர்சித்தால் யக்ஞாக்னிஹோத்ராதி நித்யகர்மாக்களும், பசு ஹிம்ஸாதிதர்மங்களும் வைதிகமதத்தின் உயிர் ஸ்தானமான பரிசுத்த தர்மங்களாயிருப்பதால் இவைகளைப்பற்றி புராணாதிகளில் எங்காவது ஏதாவது நிந்தைகாணப்பட்டால் அதன் உண்மையான தாத்பர்யம் என்னவென்பதை ஜாக்ரதையாக அறிந்துகொள்ள வேணுமேயல்லது அதை யதார்த்தமாக நினைத்துவிடக்கூடாது.

யாகங்களையும், பசு ஹிம்ஸாதிதர்மங்களையும் உத்தம பிரமாணமாகிய வேதமே நேருக்கு நேராக விதிக்கிறது. வேதவிஹித மாகையால், மீமாம்ஸகர்கள், கல்பஸூத்ரகாரர்கள் முதலிய கணக்கற்ற ரிஷிகள் அதை பலமாக வற்புறுத்தி பிரயோகமும் நியாயமும் செய்து பாதுகாத்தனர். ஸாங்க்யாதிகள் சொல்லிய தோஷத்தை நிராகரித்து பிரம்மஸூத்ரகாரரும் பசுஹிம்ஸை பரிசுத்தமென்றும் வேதவிஹிததர்மமென்றும் சிக்ஷித்தார். வைதிகமதத்திற்கான சட்டதிட்டங்களை ஸ்மிருதிரூபமாகச் செய்து தர்மாதர்ம வ்யவஸ்தை செய்துகொடுத்த மனுபகவானும் யாகங்களை நித்யமென்றுகூறி பசுஹிம்ஸை வேதவிஹித தர்மமாகையால் அதை அஹிம்ஸையென்றே அறியவேண்டுமென்றும் சட்டமாக விதித்தார். யாக்ஞவல்க்யரும் வேறு ஸகல ஸ்மிருதிகாரர்களும் இப்படியே சொன்னார்கள். ஸ்ரீ சங்கர, ராமானுஜ மத்வாதிகளான மதாசாரியர்களும் யாக, பசு ஹிம்ஸாதிகளை தர்மமென்றும ரக்ஷணமென்றும் கூறி ரக்ஷித்தார்கள். வைதிக மதத்தை ஸ்தாபித்த மேற்கண்ட ஸகலப் பெரியோர்களும், தர்மமாக விதித்த யாகபசு கார்யத்தை வேறு எந்த பிரமாணங்களோ, அல்லது மனிதனோ நிந்திக்கமுடியுமா? வைதிகமதத்தில் இருந்துகொண்டே ஒருவன் யாகபசு. கார்யங்களை ஆக்ஷேபிக்கவும் நிந்திக்கவும் இடமில்லை. நிந்திப்பவர் வேத பாஹ்யர்களான ஜைனாதிகளாகவோ, ஸாங்க்யாதிகளாகவோதான் இருக்க முடியும்.

ஆதலால் புராணாதிகளில் நிந்தை காணப்பட்டால் அது வேதவிருத்தமென்று தள்ளப்படவேண்டியது. அல்லது வேத விரோதமில்லாமல் அதற்கு தாத்பர்யம் சொல்லி ஸமஞ்ஜஸப் படுத்தவேணும்.

### இதில் மஹாபாரத உபதேசம்.

நிந்தை இரண்டுவிதமாகும். வேதபாஹ்யர்கள் யாகாதி நிந்தை செய்வது நமக்கு உபாதேயமல்லவாகையால் அது தள்ளத்தக்கதே. ஆனால் வைதிகமதத்தில் இருப்பவனே வேத விருத்தமாக யாகாதி நிந்தையைப் புத்தி பூர்வமாகச் செய்வது ஒருவிதமாகும். வேததர்மத்தை நிந்திப்பது வேதத்தையே நிந்திப்பதாகையால் இது பிரபலமான தோஷமாயும், ப்ரத்யவாய ஹேதுவாயுமாகிறது. இது மஹாபாரதம் அநுசாஸன பர்வம் 111-வது அத்யாயத்தில ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்யத்தா லேயே உறுதியாகிறது. அங்கு பகவான் கூறுவதாவது:—

नावबुध्यन्ति ये विप्राः निन्दन्ति च पशोर्वधम् ।
ते यान्ति नरकं घोरं रौरवं तमसावृतम् ॥
दशवर्षसहस्राणि तत्र स्थित्वा नराधमाः ।
कृमिभिः भक्ष्यमाणाश्च तिष्ठेयुः पूयशोणिते ॥ என்பது

"யாக மஹிமையை அறியாமல் எந்த விப்ரர்கள் பசு வததகதை நிந்திக்கிறார்களோ, அவர்கள் அதமர்கள், பின்னும் பயங்கரமான ரௌரவ நரகம் அடைவார்கள், பத்தாயிரம வர்ஷங்கள் வரையில். துர்க்கந்தமுள்ள அந்த நரகத்தில் கிருமிகளால் உபத்திரவிக்கப்பட்டு துன்பப்படுவார்கள்"

என்பதால் வேத விஹித தர்மமான பசு ஹிம்ஸையை நிந்திப்பது பாபமென்றும் நரகாதிப்ரத்யவாய ஹேதுவென்றும் சொல்லப் பட்டது. அடுத்த சுலோகங்களிலும்

अहिंसा वैदिकं कर्म ब्रह्मकर्मेति तत्कृतम् ।
वेदोक्तान् ये न कुर्वन्ति हिंसाबुध्या क्रतून् द्विजाः
सद्यः शूद्रत्वमायान्ति प्रेत्य चण्डालतामपि ॥ என்பதால்

வேதோக்தமான யாக கர்மாவானது அஹிம்ஸா ரூப மான கர்மாவாகும். அது பிரம்ஹகர்மாவென்றே விதி க்கப்பட்டுள்ளது. ஆதலால் வேதோக்த யாகாதி தர்மங்களை எவர்கள் ஹிம்ஸையென்ற எண்ணத்தால் அநுஷ்டிக்கவில்லையோ, அந்த த்விஜர்கள் உடனே சூத்ரர்களாகி, இறந்தவுடன் சண்டாளத்வத்தையும் அடைகிறார்கள். (மஹா-அநு 111-வது அத்.)

என்று வைதிகமதத்திலிருப்பவனே ஹிம்ஸா புத்தியால் யாகத்தை அனுஷ்டியாமல்விட்டால் சூத்ரத்வ, சண்டாளத்வாதி ப்ரத்யவாயங்கள் ஸ்பஷ்டமாக பகவானால் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதப்ராமாண்யத்தைத் திரஸ்கரிப்பதாலேயே இவ்வளவு கடுமையான தோஷமென்று அறியவும். இப்படிச் செய்யப்படும் யாக நிந்தையானது த்வேஷத்தை ஆதாரமாகக்கொண்டதே.

## மற்றொன்றை பிரசம்ஸிக்கவே

மற்றொருவித நிந்தையும் உண்டு. அது சாஸ்திரமுறையை அநுஸரித்தது. அதாவது ஒன்றை ஸ்துதிசெய்ய முயற்சிக்கையில் மற்றொன்றைத் தாழ்த்தியோ, நிந்தித்தோ, பேசுவதாகும். இந்தவிடங்களில் காணப்படும் நிந்தைகளுக்கு உண்மையாக நிந்தையில் தாத்பர்யமில்லை. மற்றொன்றை ஸ்துதிப்பதிலேயே நோக்கமென்று "நஹி நிந்தாநியாய"த்தைக் கொண்டு அறியவேண்டுமென்பது வைதிகமதத்தின் ஸித்தாந்தமாகும். ஞானமார்க்கத்தை பிரசம்ஸை செய்வதற்காக கர்மமார்க்கத்தை வேதங்கள் நிந்திக்கும். அங்கு கர்மநிந்தையில் அதற்குத் தாத்பர்யமில்லையென்று அறிந்துகொள்ளவேணும். அதுபோல் கர்மாவை ப்ரசம்ஸிக்குமிடங்களில் ஞானமார்க்க நிந்தை இருக்கலாம். இம்மாதிரி சுருதி ஸ்மிருதி புராணாதிகளில் கணக்கற்ற நிந்தைகளும், பிரசம்ஸைகளும் காணப்படுகின்றன. அவைகளுக்கு அப்படியப்படியே அர்த்தம் செய்துகொண்டுவிட்டால் வைதிகமதமே நிலைத்திருக்காது. மனுவே, विधियज्ञात् जपयज्ञो विशिष्टो दशभिः गुणैः என்பதால் யக்ஞாதிகளைவிட ஜபயக்ஞமென்ற ஜபமானது பததுமடங்கு உயர்ந்தது என்கிறார். இது ஜபத்தை ஸ்துதி செய்யவந்ததேயல்லது மற்றொன்றைத் தாழ்த்திப் பேச வரவில்லை.

जप्येनैवतु संसिध्येत् ब्राह्मणो नात्र संशयः ।
कुर्यादन्यत् न वा कुर्यात् मैत्रो ब्राह्मण उच्यते ॥

என்பதால், ஜபயக்ஞத்தாலேயே ஸித்திபடைவான்
பிராம்மணன். ஆதலால் மற்ற கர்மாக்களை அவன்
செய்தாலும் செய்யலாம், விட்டாலும்விடலாம்"

என்று மனு ஜபயக்ஞத்தை ப்ரசம்ஸிக்கையில், மற்ற கர்மாக்களைக் கூட விட்டுவிடலாமென்று கூறுவதும் ஜபயக்ஞ ஸ்துதியேயல்லது மற்ற கர்மாக்களை நிந்திப்பதாகாது. ஔபாஸன, வைச்வதேவ, ச்ராத்தாதிகளைக் கூட விட்டுவிட்டு, ஜபம் செய்துகொண்டிருந்தால் போதுமென்று இதற்கு உண்மையான தாத்

ர்யம் கூறலாமா? வைதிகமதமே வ்யாகுலமாகிவிடாதா? இந்த மாதிரி கணக்கற்ற உதாஹரணமுண்டு.

## ஸ்ரீ பாகவதத்தில் உதாஹரணம்.

இதில் யாகத்தைப்பற்றியே உதாஹரணமொன்று காட்டுவோம். ஸ்ரீ பாகவதத்தில் நான்காவது ஸ்கந்தத்தில் நாரதர், ப்ராசீனபர்ஹிஸ் என்ற அரசன் கேவல காம்யயாகங்களையே செய்துகொண்டு ஞானமார்க்கத்தைப் லக்ஷ்யம் செய்யாமலிருப்பதைப் பார்த்து அவனுக்கு கர்ம பலன்களில் வைராக்யத்தை உண்டுபண்ணக் கருதி யாகபசு நிந்தாமூலமாக அவனைத் திருப்ப முயற்சிக்கிறார்.

भो भो प्रजापते राजन् पशून् पश्य त्वयाऽध्वरे ।

என்பதால் பசுஹிம்ஸையைக் காட்டிப் பேசினர். வைதிகமத ஸ்தாபகரான நாரதர் வேததர்மமான யாக பசுஹிம்ஸையை நிந்திக்கமாட்டாராகையால் அந்த வாக்யத்திற்கு, மற்ற சாஸ்திரங்களோடு விரோதமில்லாமல் அர்த்தம் செய்யவேண்டுமேயல்லது யதாச்ருதமாக கிரஹித்துவிடக்கூடாது. வேதவிருத்தமான இந்த நாரத வசனமோ, பாகவத வசனமோ அப்ரமாணமாக ஆகிவிடும். வேதம் பிரபலமா? அல்லது நாரத வாக்யமோ பாகவதமோ பிரபலமா? ஆகையால வேதவிரோதமின்றி மேற்படி நாரத வார்த்தைகளுக்கு நஹிநிந்தா ந்யாயப்படி யாகபசு விஷயத்தை நிந்திப்பதில் தாத்பர்யமில்லையென்றும், ப்ராசீனபர்ஹிஸ்ஸுக்கு காம்ய கர்மபலன்களில் வைராக்யமுண்டுபண்ணுவதே அந்த உபதேசத்தின் நோக்கமென்றும் ஸ்ரீதரீய வியாக்யானத்திலும், வீரராகவீயத்திலும்

कर्म फलेषु वैराग्य जननार्थत्वेन अन्य परत्वात् तदुक्तेः ।

என்ற வாக்யங்களால் நாரதவாக்யமானது வேறு நோக்கத்துடன் சொல்லப்பட்டதென்று வியவஸ்தை சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். இம்மாதிரியே எங்செங்கு காணப்படுகிறதோ அங்கெல்லாம் வியவஸ்தை செய்துகொள்ளவேண்டும். பாரத பாகவதாதி புராணங்களில் யாகபசு விஷய நிந்தை எங்கேயாவது ஒன்றிரண்டு காணப்படுவதுபோல், யாகத்தைப்பற்றி வெகு பலமாக பிரசம்ஸைகளும் கணக்கற்ற விடங்களில் புராணங்களிலேயே காணப்படுகின்றனவே? இப்படி நிந்தையும் பிரசம்ஸையும் கலந்திருக்கும் இடங்களில் வைதிக மதஸ்தர் செய்து கொள்ளவேண்டிய வியவஸ்தை இதுதான் என்று அறியவும். இதை ஸ்ரீ வேதாந்ததேசிகர் அதிகரணஸாராவளி கிரந்தத்தில்

THE KUPPUSWAMY SASTRI RESEARCH INSTITUTE.

तस्मात् यज्ञे वधोऽसाववध इति मनुः, स्तौति निन्दाविहान्यत् ॥

என்பதால் "யாகபசு வதம், வதமேயல்லவென்று மனு சொல்லுகிறார். ஆகையால் யாகபசு விஷயமாக நிந்தை எங்காவது காணப்பட்டால் அது மற்றொன்றை ஸ்துதிசெய்வதற்காக வந்ததென்றே கொள்ளவேணும்" என்று தெளிவாக நஹி நிந்தா நியாய வ்யவஸ்தைப்படி அர்த்தம் செய்யவேண்டுமென்பதைக் காட்டினார். வைதிக மதஸ்தர்களான பிராமாணிகர்களின் கடமை இதுதான் என்பது இதனால் தெளிவாகும்.

இப்படியிருக்க புராணங்களில் लोके व्यवायामिषमद्यसेवा இத்யாதிகளான, வேறுநோக்கமுள்ள சூத்ரபிரமாணங்களைக்காட்டி வேதவிஹிதங்களான நித்ய யக்ஞாதிகளை எதிர்ப்பது வைதிகமத வியவஸ்தையை அறியாததாலேயே. பிரத்யக்ஷ சுருதி விஹிதங்களான யக்ஞாக்நி ஹோத்ராதிகளை ஸ்மிருதி வசனங்கள்கூட பாதிக்கமுடியாதென்றும், அத்தகைய ஸ்மிருதிகள் பிரமாணங்களல்லவென்றும், பிரம்மஸூத்ரகாரரும், ஸ்ரீ சங்கர, ராமானுஜாதி ஆசார்யர்களும் புருஷார்த்தாதிகரணத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லிவிட்டதைக் கீழே நிரூபித்தோம். ச்ரௌத யக்ஞங்களை ஸ்மிருதிகள்கூட பாதிக்கும் சக்தியற்றவையாயிருக்கையில் புராணவசனங்கள் எம்மாத்திரம்? சுருதி விருத்தமான அத்தகைய புராணவசனங்கள் தள்ளத்தக்கவைகளே, அல்லது சுருதிக்கு விரோதமில்லாமல் அந்த புராணவசனங்களுக்கு ஸமாதானம் செய்து அவைகளின் பிராமாண்யத்தைக் காப்பாற்றவேண்டும். வைதிகமத மர்யாதை இப்படியிருக்கையில் புராணவசனங்களைக் காட்டி சுருதிவிதிகளை எதிர்ப்பது அப்ராமாணிகமாகும்.

ஆதலால் வேதப்பிரமாணவாதிகளானவைதிகர்களாகிய நாம் யாகாதிகளையும் யாகபசு விஷயங்களையும் வேதோக்த உத்தம தர்மமென்று அறிந்தும் ஆசரித்தும் ஆதரித்தும் ஸகல சிரேயஸ்களையும் அடைவோமாக.

சுபமஸ்து.

Printed at The Sri Janardana Printing Works Ltd., Town High School, Kumbakonam.

|| ஸ்ரீ: ||

# யஜ்ஞஸம்ரக்ஷிணீ

(யாகஸம்பந்தமான பல விஷயங்கள் அடங்கியது)

---

## இரண்டாவது பாகம்.

(யாகங்களைப்பற்றி ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர்களின்
அபிப்ராயம் அடங்கியது.)

---

மஹோபதேசக, வித்வான், அக்நிஹோத்ரம்
ஸ்ரீ கோபாலதேசிகாசார்யர்
இயற்றியது.

---

கும்பகோணம்
ஸ்ரீ ஜநார்தந அச்சுக்கூடத்தில்
அச்சிட்டு வெளியிடப்பட்டது.

---

பார்த்திவ-௵

1945.

# FOREWORD.

This book is the second part of the "Yagna Samrakshini" whose sole purpose is to demonstrate fully and clearly that Yagnas involving "PASU SACRIFICE" are compulsorily enjoined as *Nitya Karma* and that the sacrifice prescribed by the Vedic Sastra does not and cannot involve any sin on account of *Pasu Visasana*. The second part is devoted to an examination of the question from the standpoint of the Ramanuja school and to a demonstration of the unanimeus pronouncement by all the great writers of the school in favour of the obligatory character of the performance of Yagnas and their absolute sin-lessness. The book quotes many passages from the writings of Sri Ramanuja, Sri Sudarsana Suri and Sri Vedantha Desigar and gives Tamil renderings of the Sanskrit texts and proves the unanimity among all the authors.

The very text of the Brahma Sutras makes it quite clear that the Vedic view is that Agnihotra and Yagnas are compulsory rites; that the Vedantic mumukshu is also bound to perform them though with renunciation of fruits. This renunciation is the general rule in his case in regard to all Nitya Karma, Srouta and Smarta. The Kapila Sankhya view that there is a small proportion of sin in the performance of Vedic sacrifice on account of Pasuhimsa and that Yagas, though obligatory and substantially good and absolutely necessary and indispensable, are Asuddha in a way on account of the himsa, is refuted by Badarayana in the last adikarana of Brahmasutra, pada I of Chapter III in which it is emphatically denied that there is any Asuddhi at all and that the immolated Pasu is

blessed with a higher life. All the Bashyas are agreed about this interpretation of the Sutras. The Gita states clearly that the settled view of the Divine Singer is "that Yagnas must be performed and not omitted". The Bhashyas on the Gita justify the killing of opponents in war as involving no sin on the analogy of Pasu sacrifice in compulsorily prescribed Yagnas. Both are prescribed as Dharma and could not therefore be Asuddha.

The auther has canvassed all passages in the works of Sri Ramanuja and his followers bearing on this matter. The book is a model of lucidity and thoroughness.

*Mimamsaratna* **A. V. Gopalachariar.**
*Advocate, Trichy*



ஸ்ரீரஸ்து

# யஜ்ஞஸம்ரக்ஷிணீ

## இரண்டாவது பாகம்

## முகவுரை.

---

• யக்ஞஸம்ரக்ஷிணீ கிரந்தத்தின் இந்த இரண்டாவது பாகத்தில், அக்நிஹோத்ர தர்சபூர்ணமாஸ, ஸோமயாகாதிகளான வேதோக்த நித்யகர்மங்கள், பக்தன், பிரபந்நன், அமுமுக்ஷு ஆகிய ஸகல அதிகாரிகளாலும் அவச்யாநுஷ்டேயங்கள் என்று ஸ்ரீ பாஷ்யகார, ஸ்ரீ தேசிகாதிபரமாசார்யர்கள் வெகு உறுதியாயும், தெளிவாகவும் செய்துள்ள ஸித்தாந்தம் நிரூபிக்கப்படுகிறது.

இதைத் தனியாக எடுத்துக்காட்டவேண்டிய ஆவஶ்யகதை என்னவென்று சிலர் நினைக்கலாம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு யாகாதி வைதிககர்மானுஷ்டானம் உண்டாவென்று இதர ஸம்ப்ரதாயஸ்தர்களான ஆஸ்திகர்கள் பலர் ஸந்தேஹித்து நம்மைக் கேட்டுவருகிறார்கள். இது தவிர ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குள்ளேயே, மோக்ஷார்த்தமாக பகவானிடம் சரணாகதி செய்துகொண்ட பிரபன்னனுக்கு கர்மானுஷ்டானங்கள் ஆவச்யகங்களல்லவென்றும், யாகாதிவைதிககர்மங்கள் காம்யங்களென்றும் ஸ்வர்க்காதி அல்ப-அஸ்திரபலனைக் கொடுப்பவைகளென்றும், அவைகள் ஸாதாரண அதிகாரிகளுக்கு ஏற்பட்டவையென்றும் மிகவும் விபரீதமான அபிப்பிராயம் சிலரிடம் காணப்படுகிறது. இந்த அபிப்பிராயம் பாமரர்களிடம் மட்டுமில்லை. படித்தவர்களாக நினைக்கப்படும் சிலரிடமும் காணப்படுகிறது. சில வர்ஷங்களுக்குமுன் "வேதாந்த தீபிகை" என்ற பத்திரிகையில் வெளியான கட்டுரையே இதற்கு ஸாக்ஷ்யமாகும்.

வைதிகமத ஸித்தாந்தங்களையும், வைஷ்ணவஸம்ப்ரதாய தத்துவங்களையும், ஆசார்யர்களின் உறுதியான அபிப்பிராயத்தையும் அடியோடு அறியாததாலேயே அப்படிச் சிலர் பேசுகிறார்கள். அவர்களை வாதுக்கழைத்தாவது அந்த வ்யாமோஹத்தைத் தெளியவைக்கவேண்டியது ஸம்பிரதாயரக்ஷணமும் ஆசார்ய கைங்கர்யமு

மாகிறது. இக்கிரந்தத்தில் காட்டப்பட்டுள்ள பிரமாணங்களில் ஒவ்வொரு வாக்யமும், ஒவ்வொரு அக்ஷரமும், ஒவ்வொரு நிர்ணயமும் முற்றிலும் ஸ்ரீபாஷ்யகார-ஸ்ரீதேசிகாதி ஆசார்யர்களுடையவைகளே யல்லது வேறு யாருடையவையுமல்ல. அங்காங்கு பல கிரந்தங்களில் விளங்கும் பிரமாணங்களை ஒன்று சேர்த்து இதில் காட்டியிருப்பதால் இதை "ஆசார்ய ஸ்ரீஸூக்தி கிரந்தம்" என்றே சொல்லத்தகும். இக்கிரந்தத்தில் காட்டப்பட்டுள்ள பிரமாணங்கள் அந்யதாஸித்தங்களென்றோ, யாகாதி விஷயங்களில் ஆசார்யர்களின் அபிப்பிராயம் வேறுவிதமாயிருக்கின்றதென்றோ யாராவது ஒருவர் நினைத்தால் அந்த தீரபுருஷன் பஹிரங்கமாக முன் வந்து அதை நிரூபணம் செய்யும்படி நாம் அறைகூவி அழைக்கிறோம். ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதிகள் யாக விஷயமாக ஸந்தேஹ குதர்க்காதிகளுக்குச் சிறிதும் இடமின்றி நிர்ணயித்திருப்பதே நமக்கு அவ்வளவு தைர்யத்தைக் கொடுக்கிறது. அதை உண்மையாக அறியவேண்டுமானால் இக்கிரந்தத்தில் காட்டப்பட்டுள்ள ஆசார்ய ஸ்ரீஸூக்தி பிரமாணங்களை ஒவ்வொருவரும் அலசிப்பார்க்கட்டும். அப்படிச் செய்தால் அவர்களது பிரமம் தானாகவே நீங்கிவிடும்.

பிரபன்னாதிகள், தங்களது வர்ணாச்ரமதர்மங்களான நித்ய நைமித்திக கர்மங்களை த்யஜித்துவிட்டு ஸ்வச்சந்தமாகத்திரியலாமா? கூடாதென்றே ஸ்ரீ தேசிகன் சரம ச்லோகாதிகாரத்தில் வெகு பலமாக நிஷ்கர்ஷித்துள்ளதைப் பார்க்கவேண்டும்.

பிரபன்னனும் தனது நித்யநைமித்திகவர்ணாச்ரம கர்மங்களை பகவத் ஸமாராதன ரூபமாக யாவதாயுஷம் செய்து தீரவேணுமென்றும், இல்லையேல் பகவந்நிக்ரஹ ரூப பிரத்யவாய மேற்படுமென்றும் ஸ்ரீ தேசிகன் அங்கு ஸித்தாந்தம் செய்திருக்கவில்லையா? பிரபந்நன் ஸ்நாந, ஸந்தியாவந்தன, ஔபாஸன, வைச்வதேவ, சிராத்தாதிகளான நித்யகர்மங்களை விட்டு விடலாமா? விடக்கூடாதென்றால், அந்தக் கர்மங்களைவிட பிரபலங்களாயும் பிரத்யக்ஷ சுருதி விஹிதங்களாயுமுள்ள அக்நிஹோத்ராதி நித்யகர்மங்களை எப்படி விடமுடியும்? அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி வைதிக தர்மங்கள் நித்யங்களென்று ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதிகள்

"நித்ய" என்ற பதப்பிரயோகம் செய்து பல விடங்களில் கூறியி ருப்பதை இக்கிரந்தத்தில் காணலாம்.

வேதங்களும், வேதோக்த நித்ய கர்மங்களுமில்லாமல் ஸ்ரீவை ஷ்ணவமதம் நிலைக்காதென்பதை ஸ்ரீ தேசிகாதிகள் பல விடங்களில் உறுதியாகச் சொல்லியுள்ளார்கள். அதிலும் அக்நிஹோத்ராதி வைதிககர்மங்கள் தான் பிரபலங்களென்றும் அவைகளுக்கு விரோத மின்றித்தான் பிரபந்நன் மற்ற தர்மங்களை யனுஷ்டிக்கலாமென்றும் சரமச்லோகாதிகாரத்தில் வெகு ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறார் ஸ்ரீ தேசிகன். அஷ்டாக்ஷரஜபம், த்வயானுஸந்தானம் முதலிய வைஷ் ணவைகாந்தமான கார்யங்களைக்கூட அக்நிஹோத்ராதி வைதிக்கர்ம ங்களுக்கு இடைஞ்சலில்லாத வேறுகாலத்தில்தான் செய்யவேணு மென்று ஸ்ரீ தேசிகன் அங்கு நிஷ்கர்ஷித்து வேதங்களுக்கும், வேதோக்த அக்நிஹோத்ராதிகளுக்கும் பிராபல்யமும் முக்யத்வ மும் உண்டென்பதை ஸ்தாபித்துள்ளார். "மந்த்ரரத்ந" மென்று கொண்டாடப்படும் திருவஷ்டாக்ஷரத்தின் ஜபந்தைக்கூட அக்நி ஹோத்ராதிவைதிகர்மங்களுக்கு விரோதமின்றியே செய்யவேண்டு மென்றால்,பிரபந்நன் விஷயத்தில் அக்நிஹோத்ராதி வைதிகதர்மங் களுக்கு எவ்வளவு முக்யத்வம் நம் ஆசார்யர்களால் கொடுக்கப்பட்டி ருக்கிறதென்பது ஸந்தேஹமின்றி விசதமாகவில்லையா? ஸ்ரீ வைஷ் ணவ ஸம்பிரதாயத்தை, வைதிகமார்க்கத்திலிருந்து வழிதவறி இழு த்துக்கொண்டுபோகும் மனப்போக்குள்ள ஸம்பிரதாய ச்ரத்தா ஜாட்யத்திற்கு மேற்படி சரமச்லோகாதிகார ஸ்ரீ ஸூக்தி ஸித்தாந் தமானது ஓர் ஸித்தாஞ்ஜனம்போல் அசைக்கமுடியாத பிரமாணமா யிருக்கவில்லையா ?

அக்நிஹோத்ராதிகள் நித்யங்களாயிருப்பதனால்தான், பிரபந்ந னுக்கு ஆன்ஹிககர்மங்களைச் சொல்லவந்த ஸ்ரீவங்கிபுரத்து நம்பிகள் அக்நிஹோத்ரஹோமத்தை அவச்யகர்த்தவ்யமான நித்ய ஆன்ஹிக தர்மத்தில் விதித்தார். இதையே ஸ்ரீ தேசிகனும் பிரமாணமாகக் காட்டி ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையில் ஆன்ஹிக பிரகரணத்திலும், சர மச்லோகாதிகாரத்திலும் பிரபந்நனுக்கு அக்நிஹோத்ர ஹோமத் தைப் பிரதிதினமும் ஸாயம்-ப்ராத: காலங்களில் நியதமாக அநுஷ் டிக்கும்படி விதித்திருப்பதையும்காணவும். அக்நிஹோத்ராதிகள்

கேவலகாம்யங்களாகவோ, அவஸ்யா நுஷ்டேயங்களல்லாதவைகளா கவோ இருந்தால் நித்யங்களான ஆன்ஹிக தர்மங்களில் ஆசார்யர் கள் அவைகளைச் சேர்த்தது எப்படிப் பொருந்தும்? ஆன்ஹிகதர் மங்களில் காம்யகர்மங்களையோ, அநித்யமான கர்மங்களையோ அநு ஷ்டிக்கும்படி ஸ்ரீதேசிகாதிகள் விதிப்பார்களா ? ஸ்ரீதேசிகன் அக்நி ஹோத்ரத்தை "அவச்யகர்த்தவ்யம்" என்றும் "அஹோராத்ரக் ருத்யமான பகவத் ஸமாராதனம்" என்றும் அங்கு சொல்லுவதே ஸகல விபரீதவாதங்களையும் விலக்கக்கூடியதாயிருக்கவில்லையா ? உத்தமாதிகாரிகளுக்குக் கர்மானுஷ்டானம் வேண்டியதில்லையென் பதும் அத்யந்தம் விபரீத வாதமாகும். நம் ஸம்பிரதாயத்தில், பக்தன், பிரபந்நன் ஆகிய இருவரும் உத்தமாதிகாரிகள். இந்த இர ண்டு பேருக்கும் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி வைதிக நித்ய வர்ணாச்ரமதர்மங்கள் யாவதாயுஷம் நியதமாக அநுஷ்டேயங்களெ ன்பதை ப்ரம்ஹஸூத்ராதி ஸகல சாஸ்திரங்களும் ஆசார்யர்களும் உறுதிசெய்துவிட்டார்களன்றோ ? இந்த இரண்டு அதிகாரிகளும் நிவிருத்திதர்ம நிஷ்டர்களான முமுக்ஷுக்களாயிருந்தபோதிலும் தங்களுடைய நித்யநைமித்திக வர்ணாச்ரம தர்மங்களை த்யஜிக்க முடியாது.

இதில் பக்தன் ப்ரம்ஹவித்யா நிஷ்டனாயிருந்து உபாஸனம் செய்கையில் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களை அந்த பிரம்ஹவித்யைக்கு அங்கமாக அநுஷ்டித்துத் தீரவேண்டுமென்று तमेतं वेदानुवचनेन என்பனபோன்ற உபநிஷத் வாக்யங்களே விதித்து விட்டன. பிரம்ஹஸூத்ரகாரரும் ஸ்ரீ பாஷ்யகாராதிகளும் ஸர்வா பேக்ஷாதிகரணம், ஸஹகாரித்வேநச என்ற ஸூத்ரம், அக்நிஹோ த்ராத்யதிகரணம் போன்ற பல விடங்களில் இதை நிச்சயித்துள்ள தை எவரும் அபலபிக்கமுடியாது. मन्त्रेषु कर्माणि என்ற முண்டக உபநிஷத்தானது யக்ஞாதிகளை பிரம்ஹநிஷ்டனான உத்தமாதிகாரி யும் நியதமாக அநுஷ்டிக்கும்படி விதிப்பதை ஸ்ரீபாஷ்யகாரர் அத்ரு ஶ்யத்வாதிகுணகாதிகரணத்தில் விவரித்துள்ளதைப் பார்க்கவும். ஆகையால்பக்தனுக்கு அக்நிஹோத்ராதிகள் இல்லாமல்உபாஸனமே ஸித்திக்க வழியில்லை. அங்கு यस्याग्निहोत्र என்ற மற்றொரு உபநி ஷத் வாக்யமானது தர்சபூர்ணமாஸாதிகளை அநுஷ்டியாதவர்களு

க்குப் பிரத்யவாயம் கூறுவதையும் ஸ்ரீ பாஷ்யகாரர் விவரிக்கிறார். आचार्यकुलात् वेदमधीत्य என்ற சாந்தோக்ய உபநிஷத்தானது अहिंसन् सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः என்பதால் முமுக்ஷுவான கிரஹஸ்தனுக்கு பசுவிஶஸநயுக்தமான ஜ்யோதிஷ்டோமாதி தர்மங்களை யாவதாயுஷம் ஆச்ரம தர்மமாக விதித்து அந்த அதிகாரிக்கு அபுனராவ்ருத்தியையும் சொல்லுவது அசைக்கமுடியாத பிரமாணமல்லவா?

பிர்ம்ஹஸூத்ரத்தில் விஹிதத்வாதிகரண ஸித்தாந்தமும் அங்குள்ள ஸ்ரீ பாஷ்ய, சுருத ப்ரகாசிகா, அதிகரணஸாராவளீ முதலிய கிரந்த நிர்ணயங்களும் பிரகிருதத்தில் மிகவும் தலைசிறந்த பிரமாணங்கள். பிர்ம்ஹநிஷ்டர்கள் பிர்ம்ஹவித்யாங்கமாக யக்ஞாதிகளை அநுஷ்டிக்கவேண்டுமென்றால், பிரம்ஹநிஷ்டனல்லாத ஸாதாரண கிரஹஸ்தனுக்கு யாகாதிகள் வேண்டியதில்லையா என்ற ஸந்தேஹம் ஏற்படவே பிர்ம்ஹஸூத்ரகாரர் “விஹிதத்வாச்சாஶ்ரம கர்மாபி” என்று ஸூத்ரம் செய்து முமுக்ஷுவல்லாத ஸாதாரண கிரஹஸ்தனும் ஆச்ரமதர்மமுறையில் யக்ஞாதிகளை அநுஷ்டிக்க வேண்டியது ஆவச்யகமென்று விதித்தார். இங்கு ஸ்ரீ பாஷ்யகாரரும் “யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம்ஜுஹோதி” என்ற சுருதி பிரமாணத்தைக்காட்டி ஸகல கிரஹஸ்தர்களுக்கும் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் நித்யங்களாக சுருதிகளால் விதிக்கப்பட்டிருப்பதால் அவர்களும் அவச்யம் அநுஷ்டிக்கவேணுமென்று நிர்ணயித்தார். ஸ்ரீ தேசிகனும் அதிகரண ஸாராவளியில் இந்த அதிகரணத்தில் यज्ञादेः कर्मणोहि என்ற சுலோகத்தால் இதை ஸ்தாபித்து नित्यत्वस्यापिसिद्धेः என்று யக்ஞாதிகள் நித்யகர்மங்களாகையால் எல்லா கிரஹஸ்தர்களும் அவைகளை அநுஷ்டியாமல் ஸ்வச்சந்தமாக இருக்கக்கூடாதென்று எச்சரிக்கை செய்துள்ளார். சரமச்லோகாதிகாரத்திலும் ஸ்ரீ தேசிகன் இந்த விஹிதத்வாதிகரண ஸித்தாந்தப்படி பிரபந்நர்களுக்கும் யக்ஞாதிகள் அவச்யாநுஷ்டேயங்களென்று வெகு தெளிவாக ஸாதித்திருப்பதைப் பார்த்தாலே எல்லா ஸந்தேஹங்களும் நீங்கிவிடும். ஆகையால் இந்த விஹிதத்வாதிகரண ஸித்தாந்தமொன்றே யாகாதிவிஷயமாக சாஸ்திர நிர்ணயங்களையும், ஆசார்யர்களுடைய உறுதியான அபிப்பிராயங்களையும் அறிந்துகொள்ளப்போதுமானது.

மேலும் பிரம்ஹஸூத்ரத்தில் ஸர்வாபேக்ஷாதிகரணாதிகளில் "நித்யாநித்ய ஸம்யோக விரோத பரிஹார"மென்று சொல்லப்படுவது வெகு முக்யமானது. பிர்ம்ஹநிஷ்டனான உபாஸகனுக்குக் கூட ஆச்ரமதர்மமான நித்யாக்நிஹோத்ரமும், பிர்ம்ஹவித்யாங்கமான அநித்யாக்நி ஹோத்ரமும் இரண்டும் உண்டென்றும் ஆனால் தந்த்ரேண ஒன்று ஸித்திப்பதாயும் ஸித்தாந்தம்செய்யப்படுவதிலிருந்து நித்யாக்நிஹோத்ரத்தின் ப்ராபல்யம் நன்கு விளங்கவில்லையா? மேலும் ஜ்யோதிஷ்டோம-அக்நிஹோத்ராதிகளுக்கு நித்யத்வம், காம்யத்வம், பிர்ம்ஹ வித்யாங்கத்வம் என்ற மூன்று ஸ்வரூபங்கள் உண்டென்று "விநியோக ப்ருதக்த்வ" நியாய மூலமாக ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதிகள் கீதாபாஷ்ய, தாத்பர்ய சந்திரிகா, ஸர்வார்த்த ஸித்தி முதலிய விடங்களில் நிர்ணயித்திருப்பதைப் பார்த்தால் யாகாதிகள் நித்யங்களென்பதும், கேவலகாம்யங்களல்லவென்றும் ஆசார்யஸித்தாந்தம் நன்கு விளங்கும். சாஸ்திரீய நியமநாதிகாரத்திலும் ஸ்ரீ தேசிகன் आज्ञानुज्ञाविभागेन. नित्यकाम्यस्वरूपैक्ये என்ற காரிகைகளால் மேற்கண்ட விநியோக ப்ருதக்த்வ விஷயத்தை உபபாதனம் செய்துள்ளதைக் கவனிக்கவேணும். அங்கு ஸாராஸ்வாதிநீ முதலிய வ்யாக்யானங்களில் நித்ய ஜ்யோதிஷ்டோமம், காம்யஜ்யோதிஷ்டோமம் என்ற பிரிவினைசெய்து பிரபன்னனுக்கு நித்யஜ்யோதிஷ்டோமானுஷ்டானத்தை ஸ்திரப்படுத்தியிருப்பதை எவ்வளவு ஸாஹஸம் செய்தாலும் மறைக்க முடியுமோ ?

ஜ்யோதிஷ்டோமாக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று ஆசார்யர்கள் ஸ்திரப்படுத்தி விட்டதால் ஆக்ஞாரூபங்களான அந்த நித்யங்களை அனுஷ்டியாவிட்டால் பகவந்நிக்ஹர மேற்படுமென்று அந்த காரிகைகளால் ஸ்ரீ தேசிகனின் திருவுள்ளம் ஸ்பஷ்டமாகிறதல்லவா ? ஸ்ரீ பாஷ்யகாரரும் विधिर्वा धारणवत् என்ற ஸூத்ரபாஷ்யத்தில், யக்ஞாதிகளைச் செய்யாவிட்டால் ருணதோஷமும், வீரஹத்யாதோஷமும் ஏற்படுமென்று ஸ்பஷ்டமாக ஸாதித்துள்ளதை எவராலும் மறுக்கமுடியாது. யக்ஞாதிகள் யாவஜ்ஜீவம் அநுஷ்டிக்கப்படவேண்டிய நித்யங்களாகையால் அவைகளை த்யஜித்துவிட்டு ஸன்யாஸாச்ரமத்திற்குப்போக அநுமதி கிடையாதென்று பிர்ம்ஹஸூத்ரத்தில் ஜைமினி மஹர்ஷி கூறுகிருர். இதை வியாஸரும் ஏற்றுக்

கொண்டார். ஆனால் சில சுருதிகளில் ஸன்யாஸ ஆச்ரமம் சொல்ல ப்படுவதால், உத்கட வைராக்யம் காரணமாக ஒருவன் ஸன்யாஸத் திற்குப் போகலாமென்றும் அவனுக்கு ருணதோஷாதிகள் ஏற்படு வதில்லையென்றும், ஸன்யாஸாச்ரமத்திற்குப் போகாத கிரஹஸ்த னுக்கு யாகாதிகள் செய்யாவிட்டால் ருணதோஷாதிகள் ஏற்படு மென்றும் வியவஸ்தை கூறியதிலிருந்து ஸூத்ரகாரரும், ஸ்ரீ பாஷ் யகாரரும் யாகாதி நித்யகர்மங்களைச் செய்யாவிட்டால் ருணதோ ஷாதி ப்ரத்யவாயமேற்படுமென்று நிஷ்கர்ஷித்திருப்பது அசைக்க முடியாத விஷயமல்லவோ ?

ஸ்ரீராஹ்வதே என்ற யக்ஞகர்ம நிந்தாவாக்யமானது காம்ய யக்ஞ விஷயமென்று அத்ருஸ்யத்வாதிகுணகாதிகரணத்தில் ஸ்ரீ பாஷ்ய காரரும் தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகனும் வ்யவஸ்தை செய் துள்ளார்கள். ஜிஜ்ஞாஸாதிகரணாரம்பத்திலும் ஸ்ரீ பாஷ்யத்தில் மேற்படி சுருதி நித்யயாக விஷயமில்லை என்று ஸித்தாந்தம் காட் டப்பட்டுள்ளது. மேலும், கீதையிலும், பாஷ்யத்திலும் தாத்பர்ய சந்திரிகையிலும் அக்நிஹோத்ர-தர்ச பூர்ணமாஸாதிகர்மாக்களு க்கு இந்திராதி சரீரகபரமாத்மாவே உத்தேச்யனென்கிற தத்வஞா னத்துடனும், பலஸங்கத்யாகாதி புரஸ்ஸரமாயும் முமுக்ஷுக்களா ன பக்த பிரபந்நாதிகள் அந்த யக்ஞங்களை யனுஷ்டிக்கவேண்டு மென்று வழிகாட்டி நிர்ணயித்திருப்பதும் வெகு முக்ய அம்சமா கும். இவ்வாறு இன்னும் பலவித பிரமாணங்கள் இக்கிரந்தத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன.

மேலும் யாகபசு விசஸநதர்மமானது ஹிம்ஸையென்று ஸாங் க்யாதி மதஸ்தர்கள் சொன்ன கக்ஷியை நிராகரித்து பிரம்ஹஸூத் ரகாரர் அது ஹிம்ஸையே யல்லவென்று அங்யாதிஷ்டிதாதி காணத் தில் செய்துள்ள வைதிகமத ஸித்தாந்தத்தை ஸ்ரீ பாஷ்யகாரரும், ஸ்ரீ தேசிகனும் ஸ்திரப்படுத்தி, யாகபசு விஷயம் ஹிம்ஸையே அல் லவென்றும், அது அஹிம்ஸைதானென்றும் வியாதிஸ்தனுக்கு ஆயுத சிகித்ஸைபோல் அது பசுவுக்கு மிகவும் உயர்ந்த கதியைக் கொடுக்கக்கூடிய ரக்ஷணகார்யமென்றும் பற்பல பிரமாண நியாய யுக்திகளைக்கொண்டு நிர்ணயித்திருப்பதைப் போல் வேறு எந்த வைதிகமத ஸித்தாந்திகளும் நிர்ணயம் செய்யவில்லை. இதிருந்து

வைதிகமததத்வ ஸம்ரக்ஷண விஷயத்தில் நம் ஆசார்யர்களுக்குள்ள உறுதியை தத்கால ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹம் அறிந்துகொள்வது ஆவஶ்யகமாகும்.

இத்துடன் ஸ்ரீ தேசிகன் அதிகரணஸாராவளீ, தாத்பர்ய சந்திரிகாதிகளில் பிஷ்டபசு கல்ப பிரஸ்தாவத்தை எடுத்து விசாரித்து அந்த பிஷ்டபசு கல்பமானது த்ரயீவேத பஹிர்பூதனும், ஆகம ஸித்தாந்த நிஷ்டனுமுள்ள உபரிசரவஸுமாத்ரவிஷயமென்றும், த்ரயீவேத நிஷ்டர்களான ஸ்ரீ பாஷ்யகார சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரையிலுள்ள பரமைகாந்திகளுக்கு பிஷ்டபசு அடியோடு வர்ஜ்ஜிக்கத்தகதென்றும் ஸித்தாந்தம் செய்திருப்பது வெகு முக்ய விஷயம்.

இப்படி யக்ஞாதிகள் அவஶ்யாநுஷ்டேயங்களென்று ஆசார்யர்கள் ஸ்ரீ ஸூக்திகளால் ஸித்தித்து விட்டதுடன் அநுஷ்டானத்தாலும் ஸ்திரப்பட்டுள்ளது. பூர்வாசார்யர்களில் அநேகர் யக்ஞானுஷ்டானம் செய்துள்ளார்கள் பெரியநம்பி முதலான பரமாசாரியர்கள் யக்ஞானுஷ்டானம் செய்தார்களென்று ஸ்ரீ தேசிகனே சரமச்லோகாதிகாரத்தில் கூறியுள்ளார். ஸ்ரீ பாஷ்யகாரின் திருத்தகப்பனர் ஆஸூரிகேசவ ஸோமயாஜி என்று திருநாமம் உள்ளவர். ஸ்ரீ தேசிகனின் பிதாமஹன் புண்டரீகாக்ஷஸூரி அநேக யாகங்கள் செய்தவரென்று ஸ்ரீ தேசிகனே பல விடங்களில் பெருமை பேசிக்கொள்ளுகிறார். ஸ்ரீ தேசிகனின் குமாரரான வரத குரு என்ற ஸ்ரீ நயினாராசார்யர் காஞ்சியில் யாகங்கள் செய்ததாக குரு பரம்பரை கோசத்தில் காணப்படுகிறது. ஜகதாசார்யனென்று உபநிஷத் பாஷ்யகாரரால் அநுஸந்திக்கப்படுகிறவரும், तातार्य-परांकुशौ என்று ஆசார்ய பரம்பரையில் அநேக ஸம்பிரதாயஸ்தர்களால் அநுஸந்திக்கப்பட்டுவருகிறவரும், कांचीमंडलमंडनस्य मखिनः कर्णाटभूभृद्गुरोः तातार्यस्य என்று விச்வகுணாதர்சகாரரால் கொண்டாடப்படுகிறவருமான பஞ்சமத பஞ்ஜன ஸ்ரீ தாதாசார்யஸ்வாமி, அவரது குமாரர் லக்ஷ்மீ குமாரதாதாசாரியஸ்வாமி, இவர்களுடைய திருவம்சத்தில் இன்றுவரையில் கணக்கற்ற மஹனீய பரமைகாந்திகள், அரசாணிபாலை ஸ்ரீ வெங்கடாத்வரீ, அவருடைய முன்னோர்கள், "ஶதக்ரது" என்ற அந்வர்த்த நாமதேயம்பெற்ற நாவல்பாக்கம் அக்ரஹார பரமைகாந்தி மஹான்கள் பலர், இவர்களெல்லாம்

யக்ஞானுஷ்டானம் செய்தது ஜகத்பிரஸித்தம். இம்மாதிரி வட தேசத்திலும் தென் தேசத்திலும் கணக்கற்ற ஸ்ரீ வைஷ்ணவ பரமைகாந்திகள் யாகாநுஷ்டானம் செய்த சரித்திரமும், சின்னங்களும் இன்றைக்கும் அங்காங்கு விளங்குகின்றன ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி ஸம்பிரதாய பஞ்சஸம்ஸ்கார ஆசார்ய பரம்பரையிலும் சிலர் யாகாநுஷ்டானம் செய்தவர்களாக அநுஸந்திக்கப்படுவதைக் காண்கிறோம். ஞானநுஷ்டானுதிகளில் சிறந்து விளங்கியவரும், அநேக கிரந்தங்கள் செய்தருளியவரும் கரூர் ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்தவருமான கரூர் ஸ்ரீஉவே ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி அநேகயாகாநுஷ்டானம் செய்ததை அறியாதாரில்லை. இம்மாதிரி இன்றுவரையில் கணக்கற்ற ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களும், மஹான்களும் யாகாநுஷ்டானம் செய்திருக்கிறார்கள். உதாஹரணார்த்தமாகவே சிலருடைய பெயரைமட்டும் காட்டினோம். சென்ற 50 வருஷத்திற்கு முன் காலம்வரையில் ஸ்ரீவைஷ்ணவர்களில யாகாநுஷ்டானம் பஹுளமாயிருந்ததை மறுக்க வியலாது.

அதர்மம் அதிகரித்துள்ள கலியுகத்தில் கூட யாகாநுஷ்டானம் ஆவச்யகமென்பது சாஸ்திரபிரமாணங்களாலும், ஆசார்யாபிப்பிராயத்தாலும், ஆசார்யாதிகளுடைய யாகாநுஷ்டானத்தாலும் ஸ்திரபட்டுள்ளது. கலியில் கூடாதென நிஷேதவசனம் ஒன்றுகூடக் கிடையாதென்பது முதலான சாஸ்திர நிர்ணயங்களை இதன் பூர்வபாகத்தில் விரிவாகக்காண்க.

ஸ்தான விசேஷாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகன் கலியில் பிரபன்னன், "எங்கு வேதங்களும், யக்ஞங்களும் பிரசாரத்திலிருக்கின்றனவோ, அந்த உத்கிருஷ்ட ஸ்தலத்தில் வாஸம் செய்யவேண்டு" மென்று यत्र वेदाश्च यज्ञाश्च என்ற மஹாபாரத வசனத்தைக்காட்டி நியமனம் செய்திருப்பது முக்ய விஷயம். இங்கு ஸாராஸ்வாதினீகாரர் हिंसाद्यधर्मसंयुक्ताः என்பதற்கு வ்யாக்யானம் செய்கையில் "கர்மஸம்யுக்த அக்நீஷோமீயாதி பசுஹிம்ஸா ஸாத்யமான ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் எங்கு நடக்கின்றனவோ" அங்கு பிரபன்னன் ஸ்திரவாஸம் செய்யவேண்டுமென்று தெளிவாகக் கூறியிருப்பது விபரீதவாதம் செய்கிறவர்களின் கக்ஷியைத்தகர்ப்பதாயிருக்கவில்லையா ?

இத்துடன் பெரிய நம்பிகள் முதலான பரமாசாரியர்களும், ஸ்ரீ தேசிகனின் பிதாமஹரும் திருக்குமாரரும் இன்னும் கணக்கற்ற சிஷ்டபரமைகாந்திகளும் கலியில் யாகம் செய்திருக்கவில்லையா? இதற்கு என்ன பதில் கூறமுடியும்?

नेदं सं जातखेदे என்றபடி ஸ்ரீ தேசிகன்காலத்திலும், அதற்கு முன்பும் தேசத்தில் வர்ணாச்ரமாசாரங்கள் குலைந்து மிகுந்த அதர்மம் மேலிட்டிருந்ததாகவே தெரிகிறதல்லவா? அவ்வளவு துஷ்காலத்தில்கூட ஆசார்யர்கள் எப்படி அநுஷ்டித்தார்கள்? சாஸ்திர விதிப்படி யதாவத்தாக இக் கலியில் அநுஷ்டிப்பது ஸாத்யமில்லையெனகிற குதாக்கமும் இதனால் நிராகரிக்கப்பட்டதாகிறது. யாகாதிகளில் மந்திரங்களோ, பிரயோகங்களோ மற்ற எந்த ஸாதனங்களும் சாஸ்திர விதிப்படி யதாவத்தாக இக்காலத்திலும் அநுஷ்டிக்கமுடியும், அநுஷ்டிக்கப்பட்டும் வருகின்றனவென்பதை ஒருவரும் மறுக்கமுடியாது.

மேலும் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதிகள் நித்யகர்மங்களாகையால் அவைகளைக் கலியுகத்தில்கூட த்யஜிக்கமுடியாதென்பதும், நித்யகர்மங்களில் ஸகலாங்கபூர்த்தியில்லாமல் யதாசக்தி அநுஷ்டித்தாலும் போதுமென்பதும் மீமாம்ஸாதி பிரமாணங்களால் நிஷ்கரிஷிக்கப்பட்டிருக்கிறதை அறியவேண்டாமா? ஸந்த்யாவந்தன, ஔபாஸன, ச்ராத்த வைச்வதேவாதிகளான நித்யங்களை கலியில் எவராவது யதாவத்தாக சாஸ்திர விதிப்படி அநுஷ்டிக்க முடிகிறதா? அதற்காக அவைகளை விட்டுவிடலாமா? பிரம்ஹசாரிதர்மும், கிரஹஸ்ததர்மங்களும் எவ்வளவு சாஸ்திரவஸ்யர்களாலும் யதாவத்தாக அநுஷ்டிக்கப்படுகின்றனவா? ஸந்யாஸாச்ரமம் நித்யமல்ல. ஸன்யாஸம் செய்துகொள்ளாவிட்டால் பிரத்யவாயமில்லை. மஹா கடினமான ஸந்யாஸதர்மத்தில் ஒன்றைக்கூட இக்காலத்தில் யதாவத்தாக அநுஷ்டிக்கமுடியாதென்பதை பிரமாண ஶரணர்கள் எவராவது மறுக்க முன்வருவாரா? அப்படியிருந்தும் யதாகதஞ்சித் அது அநுஷ்டிக்கப்பட்டும் ஆதரிக்கப்பட்டும் வரவில்லையா? தேவாலயங்களில் ஆகம மந்திர, தந்திராதிகள் இக்காலத்தில் யதாவத்தாக நடக்கின்றனவா? ஆயினும் அவைகளை ஆதரிக்கிறோமே? இப்படியிருக்க நித்யங்களான யாகாதிகளைப்பற்றி மட்டும் துர்வாதம் பேசுவது நிலைக்குமோ? ஆதலால்தான் ஆசார்யர்களும் வேறு பல சிஷ்டர்களும் கலியிலும் யாகாநுஷ்டானம் செய்தார்களென்பதைஅறியவும். இந்த விஷயங்கள் இக்கிரந்தத்தில் இரண்டு பாகங்களிலும் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளன.

இப்படி பூர்வாசார்யர்களின் ஸ்ரீ ஸூக்தி பிரமாணங்களும் அவர்களுடைய யாகாநுஷ்டானங்களும் கர்ஜ்ஜித்துக்கொண்டிருக்கையில் வைஷ்ணவனுக்கு யாகம் வேண்டாம், அது காம்யம் என்ற துர்வாதமானது தலைக்கிளப்ப வழியுண்டா? பெரியநம்பி முதலான ஆசார்யர்கள் ஸ்வர்க்கம் போகிறதற்காகவா யாகம் செய்தார்கள் ? ஸ்ரீ தேசிகனும் தமது பிதாமஹன் யாகம் செய்து ஸ்வர்க்கம்போனதையா பெருமையாகப் பேசுகிறார் ? யாகம் செய்த பரமைகாந்திகள் பலரும் அநித்யமாயும் காம்யமுமான யாகங்களைச் செய்ததாகப்பேசுவது அடுக்குமோ ? ஆசார்ய ஸூக்தி பிரமாணங்களுக்கும் அவர்களுடைய அநுஷ்டானங்களுக்கும் விபரீதமாகப் பேசுவது அஸஹ்யமான ஆசார்யாபசாரத்திலும் ஸம்பிரதாயத்தை வ்யாகுலம் செய்யும் குற்றத்திலும் சேருமென்பது திண்ணம். இம்மாதிரி விபரீதவாதம் சிலரிடம் தோன்றியதற்கு தத்காலமுள்ள சில வித்வான்களுடைய அப்ஸரத்தையும் காரணமாகும். அவர்கள் தங்களுடைய உபந்யாஸங்களில், "ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்கள் அல்ப-அஸ்திர பலன்கள்" என்று பொறுப்பற்ற முறையில் பேசி பாமரர் மனதில் விபரீத அபிப்பிராயத்தைப் பதிய வைக்கிறார்கள். தங்களுடைய விபரீத அபிப்பிராயங்களை ஆசார்யர்களின் அபிப்பிராயமாகக் காட்டவும் முயற்சிக்கிறார்கள்.

யக்ஞாதிகள் நித்யங்களென்ற ஆசார்ய ஸித்தாந்தங்களை வெளியிடக் கூச்சமடைந்து மறைத்துவிடுகிறார்கள். யக்ஞாதிகளை அநுஷ்டிக்கமுடிந்தாலும் முடியாவிட்டாலும் சாஸ்திர தத்வங்களையும் ஆசார்யஸித்தாந்தங்களையும் பிரசாரம் செய்து விபரீதவாதத்தைப் போக்குவது இவர்களுடைய கடமையல்லவா? ஸர்வாபேக்ஷாதிகரணம் விஹிதத்வாதிகரணம், ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதி ஸ்ரீ ஸூக்திகள் ஆகியவைகளுக்கு விருத்தமாக ஒருவர் யாகங்கள் கேவல காம்யங்களென்றும் அநித்யங்களென்றும் துர்வாதம் செய்தால் அதை நிராகரிக்கவேண்டியது பண்டிதர்களின் கடமையல்லவா ? யாகபசு விஸஸநம் உத்தமதர்மமென்றும், அஹிம்ஸையென்றும், ரக்ஷணரூபமென்றும் பிர்ம்ஹஸூத்ரகாரரும், ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதிகளும் செய்துள்ள வைதிகமத ஸித்தாந்தத்திற்கு விருத்தமாக ஒருவர் யாகபசு விஷயத்தை நிந்தித்தால் அதை நிரஸநம் செய்து வைதிகமதத்தையும் ஆசார்ய ஸித்தாந்தத்தையும் ஸம்ரக்ஷிக்கவேண்டியது வைஷ்ணவ பண்டிதர்களின் முக்ய கைங்கர்யமல்லவா ?

இந்த முக்ய நோக்கத்துடனேயே இக்கிரந்தம் எழுதப்பட்டிருக்கிறது. இக்கிரந்தமூலமாக வைஷ்ணவர்களில் யக்ஞாநுஷ்டானம் அதிகரிக்குமா, அதிகரிக்காதா என்பது நமக்கு விஷய

மல்ல. சாஸ்திர தத்வங்களை வ்யாகுலப்படுத்த இடம் கொடுக்கக் கூடாதென்பதே நமது முக்ய நோக்கம். ஆயினும் இப்போதுகூட இக்கிரந்தம்காரணமாக யாராவது சில மஹான்கள் யக்ஞாநுஷ்டானம் செய்ய முன்வந்தால் அதனால் எம்பெருமான் திருவுள்ளமும் ஆசார்யர்களின் திருவுள்ளமும் அத்யந்தம் உகக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. உலகக்ஷேமமும் உண்டாகும்.

ஆகையால் இக்கிரந்தமானது தத்காலம் அநுஷ்டானோபயோகியாயில்லாத விஷயத்தைச் சொல்லவரவில்லை. ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் பரம லக்ஷ்யமான ப்ரபத்தி உபாயம் ஏற்பட்டபிறகு, உயரிய உபநிஷத்மதமானது அடியோடு மறைந்துவிட்டதால், பக்திமார்க்கத்தையும் அதற்கான நாநாவித உபாஸநாதிகர்மங்களையும் சொல்லவந்த உபநிஷத்துக்களும், ப்ரம்ஹஸூத்ரங்களும் ஸ்ரீபாஷ்யாதிகளும் இப்போது எதற்காக? அவைகளால் இப்போது என்ன பிரயோஜனம் ? வேதாந்த சாஸ்திர விஷயமாக கணக்கற்ற சுஷ்க வாக்யார்த்தங்களும், கணக்கில்லாத வாதப் பிரவாத ஸஞ்சிகைகளும் வெளிவரவில்லையா ? அநுஷ்டானோபயோகமில்லாத அந்த சர்ச்சைகள் வேண்டாமென்று நினைத்தவருண்டோ? சாஸ்திர தத்வங்களை நிலைநிறுத்தப் பாடுபடுவதாகச் சொல்லவில்லையா ? அது போல இக்கிரந்தத்தையும் ஏன் அவர்கள் நினைக்கலாகாது? ஆயினும் உண்மையில் யாக விஷயம் அப்படியன்று. நேற்றுவரையில் பல மஹான்கள் அதை அநுஷ்டித்துவந்தார்கள். இப்போதும் சிறிதாவது அநுஷ்டானமிருந்துவருகிறது. எதிர்காலத்திலும் எவராவது சிஷ்டர் அநுஷ்டிக்க முன்வரலாம். ஆகையால் யக்ஞ விஷயமான ஆக்ஷேபங்களோ விபரீத பிரசாரங்களோ உபேக்ஷிக்கத்தக்கவையல்ல.

ஆகையால் நிர்மத்ஸரர்களாயும் பிரமாணபரர்களாயுமுள்ள ஆஸ்திக மஹான்கள் இக்கிரந்தத்தை ஆதரித்தும், ஆலஸ்யமின்றி பூர்ணமாகக் கடாக்ஷித்தும், இது ஆசார்ய ஸித்தாந்த ஸம்ரக்ஷண கைங்கர்யத்தைச் செய்துகொண்டு ஸர்வதா பிரகாசிக்கும்படியும் அநுக்ரஹிக்கப் பிரார்த்திக்கிறேன்.

अनुतिष्ठन्तु मा वा कलौ यज्ञक्रियां द्विजाः ॥
तथापि शास्त्रतत्वेषु न सह्या व्याकुलीकृतिः ॥

கும்பகோணம், பார்த்திவ-ஹூ கார்த்திகை-மீ
1—12—45.

அக்நிஹோத்ரம்,
கோபாலதேசிகாசாரியர்,

ஸ்ரீ:

# யஜ்ஞஸம்ரக்ஷிணீ

## இரண்டாவது பாகம்

## விஷயஸூசிகை.

---


1. ப்ரபந்நனுக்கு நித்யநைமித்திக கர்மாக்கள் 2

2 ச்ரௌதகர்மங்கள் ப்ரபலங்கள்— ஸ்ரீரஹஸ்யத்ரய ஸாரப் ப்ரமாணம் 3

3 ப்ரபந்நனுக்கு ஸாயம்-ப்ராதர்ஹோமம்— ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷாவாக்யம் 4

4 ஔபாஸனத்தைவி— அக்நிஹோத்ரம் ப்ரபலம் 5

5 ப்ரபந்நனுக்கு அக்நிஹோத்ராநுஷ்டானவிதி— ஸ்ரீவங்கிபுரத்து நம்பி காரிகை 5

6 ப்ரபந்நனுக்கு அக்நிஹோத்ரம் ஆவச்யகம்— ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையில் ஸ்ரீ தேசிகன் ஸூக்தி 6

7 ப்ரபந்நனுக்கு அக்நிஹோத்ரம் வர்ணாச்ரம ஆன்ஹிகதர்மம் சரமச்லோகாதிகார ஸூக்தி 6–7

8 அக்நிஹோத்ரத்திற்கு விரோதமன்றியே அஷ்டாக்ஷர ஜபம்—சரமச்லோகாதிகார ஸூக்தி 7–8

9 ப்ரஹ்ம ஸூத்ரத்தில் யக்ஞானுஷ்டான நிர்ணயம் 9

10 யக்ஞாக்நிஹோத்ராதிகள் ஆச்ரமதர்மங்கள் — விஹிதத்வாதிகரண ஸூத்ர ஸ்ரீ பாஷ்யவாக்யங்கள் 10

11 யக்ஞாக்நிஹோத்ராதிகள் எல்லா க்ரஹஸ்தர்களுக்கும் நித்யங்களான ஆச்ரமதர்மங்கள்—அதிகரணஸாராவளியில் ஸ்ரீ தேசிகன் நிர்ணயம் 11-12

12 நித்யாநித்யஸம்யோக விரோத பரிஹாரம்— ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகாதி வாக்யங்கள் 13

13 விநியோகப்ருதக்த்வ நிரூபணம் 14

14 ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு, நித்யத்வ, காம்யத்வ வித்யாங்கத்வாதி மூன்று ஸ்வரூப நிரூபணம் 15

15 நித்ய-காம்ய-வித்யாங்க யாகாதிகள் ஏகரூபங்களே— ப்ரம்ஹஸூத்ர-ஸ்ரீபாஷ்யம் 16

16 அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு, நித்யத்வாதி நிரூபணம்— கீதாபாஷ்யஸூக்தி 17

17 ப்ரபந்நனுக்கு ஆச்ரமாங்கமாக யக்ஞாதிகள் ஆவச்யகங்களே—சரமச்லோகாதிகாரத்தில் ஸ்ரீதேசிகன் நியமனம் 18

18 ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு நித்யத்வ-காம்யத்வவிஷயமாக சாஸ்திரீய நியமனாதிகார நிர்ணயம் 19

19 பிரபந்நனுக்கு நித்ய ஜ்யோதிஷ்டோமமுண்டு—ஸாராஸ்வாதினீ வாக்யங்கள் 20-21

20 ஆக்ஞாரூப நித்யஜ்யோதிஷ்டோமாதிகளைச் செய்யாவிட்டால்ப்ரத்யவாயம —சாஸ்திரீய நியமனாதிகார நிர்ணயம் 21

21 செய்யாவிட்டால் ருணதோஷாதிகள் — ஸ்ரீபாஷ்யகார வாக்யம் 23

22 அக்நிஹோத்ராத்யதிகரண ஸ்ரீபாஷ்யம் 24

23 ஜ்யோதிஷ்டோமாக்நிஹோத்ராதிகளுக்கு நித்யத்வமும், காம்யத்வமும்— ஸர்வார்த்தஸித்திஸூக்தி 25

24 யக்ஞாதிகள் அச்யானுஷ்டேயங்கள்— கீதா-பாஷ்ய தாத்பர்ய சந்திரிகாதிகள் 26

25 ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு காலநியமமின்றி அனுஷ்டானம்— தாத்பர்யசந்திரிகா ஸூக்தி 27

26 யக்ஞாதிகள் கேவலகாம்யங்களல்ல 28

27 கீதையில் காம்ய யக்ஞநிந்தை— ஆசார்யர்களின் நிர்ணயம் 29

28 முண்டகசுருதியிலும் காம்ய யக்ஞநிந்தையே— ஸ்ரீ பாஷ்யகார-ஸ்ரீதேசிக வாக்யங்கள் 31

29 யக்ஞாதிகள் நித்யங்கள்— முண்டக சுருதி பிரமாணம் — ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம் 32

30 முண்டக சுருதியில் மற்றொரு பிரமாணம் 33

31 முமுக்ஷுக்களுக்கு பலாபிஸந்தியின்றி நித்ய நைமித்திக யாகாதி அநுஷ்டானக்ரமம்— கீதா-பாஷ்ய-சந்திரிகா-வாக்யங்கள் 33–39

32 பாதுகா ஸஹஸ்ரத்தில் ஸ்ரீதேசிகன் திருவுள்ளம் 40

33 பசு ஆலம்பநதர்மம்— பசுவுக்கு உத்தமகதி— ஹோதாத்ரிவசனங்கள் 41

பசு ஆலம்பநம் ஹிம்ஸையல்ல—பிரம்ஹஸூத்ரஸித்தாந்தம் 42

ஹிம்ஸையல்ல ரக்ஷணமே— ஸ்ரீ பாஷ்யகாரஸூக்தி 43

கீதாபாஷ்யத்திலும் ஸ்ரீ பாஷ்யகாரர் நிர்ணயம் 45

ஸர்வார்த்த ஸித்தியில் ஸ்ரீதேசிகஸூக்திகள் 47

யாகபசு விஷயத்தில் உத்ஸர்க்காபவாத நியாயம் கிடையாது— விசிஷ்டாத்வைதஸித்தாந்தம் 49

39 ஸர்வார்த்தஸித்தி-தாத்பர்ய சந்திரிகாதிகளில் ஸ்ரீ தேசிகன் நிர்ணயங்கள் 50-52
40 யாகபசு விஷயத்தில் ஹிம்ஸாலக்ஷணம் ஒவ்வாது—ஸ்ரீதேசிகனின் நிரூபணம் 53
41 சாந்தோக்ய உபநிஷத்வாக்யத்தில் ஹிம்ஸை ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஸ்ரீ தேசிகவாக்யம் 55
42 ஹிம்ஸையென்று நினைப்பவர் பாமரரே — ஸ்ரீதேசிகன் திருவுள்ளம் 56
43 முமுக்ஷுக்களுக்குப் பசுயாகம்—சாந்தோக்ய உபநிஷத் பிரமாணம் 57
44 கீதா-தாத்பர்யசந்திரிகையில் யாகபசு விஷயம் 59
45 பாதுகாஸஹஸ்ரத்திலும் பசுவிஷயம்-ஸ்ரீதேசிகன்திருவுள்ளம் 60
46 யஜமானனுடன் சேர்ந்தே பசுவுக்கும் உத்தமகதி— நியாயஸித்தாஞ்ஜனத்தில் ஸ்ரீ தேசிகன் நிர்ணயம் 61
47 அதிகரணஸாராவளியிலும் யாகபசு விஷயம்— ஹிம்ஸையல்லவென்ற நிரூபணம் 62
48 அங்கு ஸ்ரீநயினாராசாரியர் வாக்யம் 63
49 அதிகரணஸாராவளியில் பிஷ்டபசு பிரஸ்தாவம் 64
50 பிஷ்டபசு யுகாந்தர-ஆகமாதிகாரி விஷயம் — ஸ்ரீ தேசிகன் நிர்ணயம் 65
51 தாத்பர்ய சந்திரிகையிலும் ஸ்ரீ தேசிகனின் நிரூபணம் 66
52 உபரிசரவஸு த்ரயீவேதநிஷ்டனல்ல ஏகாயந ஆகமசாகா நிஷ்டனே 68
53 உபரிசரன் செய்த அச்வமேதம் தாந்திரிகம்—வைதிகமல்ல மந்தரம்-பிரயோகம்-வேறு 69
54 இதற்கு பாரமேச்வர ஸம்ஹிதா பிரமாணம் 69
55 இதற்கு மஹாபாரத பிரமாணம் 71
56 உபரிசரவ்ருத்தாந்தம் ஆகமநிஷ்ட விஷயமே — பரமதபங்கத்தில் ஸ்ரீ தேசிகன் 72
57 ஆகமஸித்தாந்தம் வேதவிருத்தம்—உபரிசரன் ஆகமஸித்தாந்தி 72
58 ஆகமஸித்தாந்திகளுக்கு த்ரயீவேததர்ம த்யாகமுண்டு 73
59 ஸ்ரீபாஷ்யகார சிஷ்யர்கள் ஆகமஸித்தாந்தத்தை அநுஷ்டிக்கக்கூடாது— ஸ்ரீதேசிகன் நிர்ணயம் 74
60 ஹிம்ஸாயக்ஞ, அஹிம்ஸாயக்ஞ அதிகாரிபேத நிரூபணம் ஸ்ரீ தேசிகன் நிர்ணயம் 7

61 உபரிசரனுக்குப் பிறகு பிஷ்டபசு மந்திர-ப்ரயோகங்கள் மறைந்தன-மஹாபாரதவசனம் 78

62 ஜபயஜ்ஞ பிரஸம்ஸை, இதர யக்ஞநிந்தையல்ல 79

63 யாகபசுஹிம்ஸாநிந்தை இதரஸ்துதியில் நோக்கமுள்ளது அதிகரண ஸாராவளியில் ஸ்ரீ தேசிகன் 80

64 ஜபயக்ஞம் உத்க்ருஷ்டமென்பதின் தத்வார்த்தம் 81

65 யாஸ்கநிருக்தியிலும் நித்யயாக நிந்தையில்லை 83

66 புராணங்களில் யாகபசு நிந்தையிருந்தால் அது வேறு நோக்கமுள்ளதே. வாஸ்தவநிந்தையல்ல 84

67 இதற்கு ஸ்ரீபாகவத உதாஹரணம் —பசுஹிம்ஸை தோஷ மற்றதென்று வீரராகவீய வாக்யம் 85

68 யாகபசுஹிம்ஸாதி நிந்தை நகராதிதோஷஹேது—ஸ்ரீமஹா பாரதத்தில் பகவான் வசனங்கள் 87

69 அவர்ஜநீய ஹிம்ஸைகள்— ஆசார்யாபிப்ராயம் 88

70 சங்க சக்ர தப்தமுத்ரை அவர்ஜநீய ஹிம்ஸை—ஸ்ரீதேசிகனின் ஸூக்தி 89

71 ஸந்தியாவந்தனத்திலும் ஹிம்ஸையுண்டு—ஸ்ரீ தேசிகனின் திருவுள்ளம் 91

72 பஞ்சஸூநாஹிம்ஸாதோஷம்—ஸ்ரீநயினாராசாரியர் வாக்யம் 93

73 துளஸீக்ரஹணத்திலும் ஹிம்ஸை—உபநிஷத் பாஷ்யகாரர் அபிப்பிராயம் 95

74 க்ருஷி முதலிய அவர்ஜநீய ஹிம்ஸைகள் 96

75 பசுவுக்கு ஆநுகூல்யாசரணமே-சராசராணி பூதாநி ச்லோக தத்வம் 97

76 ஸுபாஷிதநீவியிலும் யாகபசு விஷயம் 98

77 பூர்வாசார்யர்களின் யாகாநுஷ்டானம்— ஸ்ரீதேசிகன் வாக்யம் 99

78 ஸ்ரீ தேசிகனின் பிதாமஹன், குமாரர் இவர்கள் யாகாநுஷ்டானம் செய்தார்கள் 100

79 ஸ்ரீ தேசிகனும் அனுஷ்டித்தார் 101

80 கலியிலும் யாகாநுஷ்டானமுண்டு— ஸ்ரீ தேசிகன்-ஸாராஸ்வாதிநீ ஸூக்திகள் 103

19591

ஸ்ரீ:

# யஜ்ஞஸம்ரக்ஷிணீ

## இரண்டாம் பாகம்.

'वपा परिमलोल्लास वासिताधर पल्लवम् ।
मुखं वरदराजस्य मन्दस्मितमुपास्महे' ॥
तस्य यज्ञवराहस्य विष्णोरमिततेजसः ।
प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमो नमः ॥

### யாகங்களைப் பற்றி ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களின் அபிப்ராயம்.

யாவஜ்ஜீவாதி சுருதி விஹிதங்களான அக்நிஹோத்ர-தர்ச பூர்ணமாஸ - ஜ்யோதிஷ்டோமாதிகளாகிய நித்ய ச்ரௌதகர்மாக்கள் அவச்யானுஷ்டேயங்களென்பதைப் பற்றி ஸ்ரீ பாஷ்யகார, ஸ்ரீதேசிகாதி பூர்வாசார்யர்கள் ஸித்தாந்தம் செய்திருப்பதை இங்கு தனியாக எடுத்து வெளியிடுகிறோம்.

ஸ்ரீ பாஷ்யகாரரும், ஸ்ரீ தேசிகனும், ஸ்ரீ பாஷ்ய, கீதா பாஷ்ய தாத்பர்ய சந்திரிகாதி கிரந்தங்களில், யாவஜ்ஜீவவாக்ய விஹிதங்களான அக்நிஹோத்ராதி ச்ரௌத கர்மாக்கள் நித்யங்களென்றும், வர்ணாச்ரம தர்மங்களென்றும், அகரணே ப்ரத்யவாயகரங்களென்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதுடன், யாக பசு ஆலம்பன தர்மமானது மிகப் பரிசுத்தமென்றும், உத்தம தர்மமென்றும், அது ஹிம்ஸையே அல்லவென்றும், அது பசுவுக்கு ரக்ஷணமென்றும், ஸந்தேஹத்திற்குச் சிறிதும் இடமில்லாமல் ஸித்தாந்தம் செய்துள்ளார்கள். சுருதிகளும், கல்ப ஸூத்ரங்களும், மன்வாதி ஸ்ம்ருதிகளும், மீமாம்ஸையும், ப்ரம்ஹ ஸூத்ரமும், யக்ஞாக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று செய்துள்ள நிர்ணயங்களையே இவ்வாசார்யர்களும் ஸ்திரப்படுத்தி, முமுக்ஷுக்களான பக்தர்களோ, ப்ரபந்நர்களோ, யாவஜ்ஜீவம் ப்ரத்யவாயபரிஹாரார்த்தமாக பகவத்ஸமாராதன ரூபமான வர்ணாச்ரம தர்ம முறையில் அக்நிஹோத்ராதிகளை அனுஷ்டிக்க வேண்டுமென்று சொல்லியுள்ளார்கள்.

## பிரபன்னனுக்கு நித்யநைமித்திக கர்மாக்கள்

ப்ரபன்னன், பரபத்திக்கு அங்கமாக ஒரு கர்மாவையும் செய்யவேண்டியதில்லையென்று சாஸ்திரமானாலும், வர்ணாச்ரம தர்ம முறையில், சுருதி ஸ்மிருதி விஹிதங்களான ஸகல நித்ய நைமித்திக கர்மாக்களையும் பகவத் ஸமாராதன ரூபமாக ஆப்ரயாணம், அதாவது யாவஜ்ஜீவம் அனுஷ்டித்துத் தீரவேண்டுமென்பதும், இல்லையேல் பகவந்நிக்ரஹமும், பிரத்யவாயமும் ஏற்படுமென்பதும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸ்ரீ சரம ச்லோகாதிகாராதிகளில் விஸ்தாரமாக ஸ்ரீ தேசிகனால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

மேலும் பிரபன்னன், அந்த வர்ணாச்ரம நித்ய நைமித்திக தர்மங்களை ஸ்வசாகா ஸூத்ர விதிகளை அநுஸரித்தே செய்ய வேணுமென்பதும், அந்த நித்ய நைமித்திகங்களில் அக்நி, இந்திராதி பதங்கள் ஸாக்ஷாத் பகவத் வாசகங்களாகையால் பிரபன்னனுக்கு பரமைகாந்தித்வ விரோதம் சிறிதும் ஏற்படாதென்றும் ஸ்ரீ தேசிகன் அங்கு வெகு தெளிவாக ஸாதித்திருக்கிறார். அந்த விஷயங்களை நாம மறுபடி இங்கு எடுத்து எழுதுவது

ஆதலால் ப்ரபன்னர்கள் ரிக், யஜுஸ், ஸாமாதிகளான தங்கள் வேத சாகைகளிலும், ஆபஸ்தம்ப போதாயனாதி தங்கள் ஸூத்ரங்களிலும் நியமங்களாக விதித்த அக்நிஹோத்ராதி தர்மங்களை அவச்யம் அனுஷ்டிக்கவேண்டியதாயிற்று. இதில் வைதிக மதஸ்தர்களுக்கு ஸர்வோத்தம பிரமாணமாக விளங்கும் சுருதிகளில் பிரத்யக்ஷமாக விதிக்கப்பட்ட அக்நிஹோத்ராதி சிரௌதகர்மாக்களே பிரபன்னனுக்கு முக்யானுஷ்டேயங்களாகின்றனவென்பது நிர்விவாதமானது.

## ச்ரௌத தர்மங்களே பிரபலம்

श्रुतिस्स्मृतिस्सदाचारः என்று மன்வாதிகள் விதித்த வைதிகமத பிரமாணங்களில் சுருதியே முதல்தர பிரமாணமாகவும், பிரபலமாயுமிருக்கிறதென்கிற ஸித்தாந்தத்தை நம் ஆசாரியர்களும் பலவிடங்களில் காட்டியுள்ளார்கள். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

சாஸ்திரீய நியமாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகன் श्रुतिस्मृत्याचारैः என்கிற சுலோகத்தில் பிரபன்னன் எம்பெருமானுடைய திருவுள்ளத்தை சுருதி முதலிய பிரமாணங்கள் மூலம் அறிந்து அதை அனுஷ்டிக்கவேணுமென்று ஸாதிக்கையில் சுருதியை முதல் பிரமாணமாகக் குறிப்பிட்டார்.

இங்கு ஸாராஸ்வாதிநீகாரர் செய்துள்ள வ்யாக்யானம் முக்யமானது. இந்த சுலோகத்திலுள்ள சுருதி பதத்திற்கு வ்யாக்யானம் கூறுகையில்,

श्रुतिः—"यावज्जीवं अग्निहोत्रं जुहोति" इत्यादि श्रुतिः। एतादृशश्रुत्या अग्निहोत्रादिकं भगवदभिमतमिति प्रथमं धर्मप्रतिपत्तिः। तदभावे तदविरुद्धया, "अष्टकाः कर्तव्याः" इति स्मृत्या भगवदभिमतं जानाति" ॥

என்ற வாக்யங்களால் பிரபன்னன், யாவஜ்ஜீவ சுருதியால் அக்நிஹோத்ராதி ச்ரௌதகர்மாக்கள் பகவானுக்கு அபிமதங்களென்று முதலில் சுருதி விஹித கர்மத்தை அறிந்துகொள்ள வேணும். அத்தகைய ஸ்பஷ்டமான சுருதி பிரமாணம் கிடைக்காத தர்ம விஷயங்களில், சுருதி விருத்தமில்லாத ஸ்மிருதிகளைக் கொண்டு எம்பெருமான் திருவுள்ளத்தை அறிந்துகொள்ள வேணுமென்று சொல்லியிருப்பதில், பிரத்யக்ஷ சுருதி விஹிதங்களான அக்நிஹோத்ராதி தர்மங்களுக்கு முதல் ஸ்தானமும் முக்யத்வமும் ஸ்பஷ்டமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதை பிராமாணிகர்கள் காணலாம்.

ஆகையால் சுருதி விஹித அக்நிஹோத்ர தர்மமே பிரபன்னனுக்கு முக்யானுஷ்டேயமென்பது ஸித்தித்தது. ஸ்ரீ சரமச்லோகாதிகாரத்தில் श्रौतस्मार्तविरुद्धेषु कालेषु जपमाचरेत् இத்யாதி பிரமாணங்களைக் காட்டி, ஸ்ரீமதஷ்டாக்ஷரமந்திர ஜபம்கூட, சுருதி, ஸ்மிருதி விஹிதகர்மாக்களுக்கு விரோதமில்லாத காலத்தில் தான் செய்யப்படவேண்டுமென்று ஸ்ரீதேசிகன் நிஷ்கர்ஷித்தது ச்ரௌதகர்மாக்களுக்கு பிராபல்யத்தை ஸ்தாபிக்கிறது. श्रुतिःस्मृतिर्ममैवाज्ञा இத்யாதி பிரமாணங்களைக்கொண்டு ஸ்ரீதேசிகன் அங்கு நிரூபிக்கும் விஷயங்களும் இங்கு பிரமாணமாகின்றன.

ஆதலால்தான் ச்ரௌதகர்மாக்களை அநாதரித்து, ஸ்மார்த்தகர்மாக்களை அனுஷ்டிப்பது நிஷ்பலமென்றும் தோஷாவஹமென்றும் ஸ்மிருதிசந்திரிகையில்—

प्रधानं वैदिकं कर्म गुणभूतं तथेतरत् ।
गुणनिष्ठः प्रधानं तु हित्वा गच्छति अधोगतिम् । என்றும்,

यो वैदिकमनादृत्य कर्म स्मार्तैतिहासिकम् ।
मोहात् समाचरेत् विप्रः न स पुण्येन युज्यते ॥

என்றும் கார்க்ய வசனங்களைக் காட்டி நிரூபித்திருப்பதை இக்கிரந்த ஆரம்பத்தில் விஸ்தாரமாகக் காணலாம்

### பிரபன்னனுக்கு ஸாயம் ப்ராதர் ஹோமம்

பிரபன்னனுக்கு பஞ்சகால ப்ரக்ரியா நியமப்படி அனுஷ்டிக்க வேண்டிய ஆன்ஹிக தர்மங்களில், ஸந்த்யாவந்தனாதிகளைப் போல் நித்யமாக ஸாயம் ப்ராத: காலங்களில் ஹோமமும் விதிக்கப்பட்டிருப்பதை பிராமாணிகர்கள் மறுக்கமுடியாது. ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷையில் ஸ்ரீதேசிகன் நித்ய வ்யாக்யானமான ஆன்ஹிக பிரகரணத்தில் பிரபன்னனுக்கு ஸ்நாந, ஸந்த்யா, பிர்ம்ஹ யக்ஞாதிகளை விதித்துவிட்டு, பிறகு —

ततः स्वसूत्र विधिना स्वाग्नि भगवदात्मकं हुत्वा

என்று பகவத் ஸ்ரூபியான தனது அக்நியில் ஸ்வஸூத்ர விதிப்படி ஹோமம் செய்யவேணுமென்று ஸாதித்தார்.

இந்த ஹோமமானது பிரத்யக்ஷ சுருதி விஹிதமான அதாவது யாவஜ்ஜீவாதி சுருதியால் நித்யமாக விதிக்கப்பட்டதான அக்நிஹோத்ர ஹோமம்தான் என்பதை பிரமாண ந்யாயவேதிகள் மறுக்கவியலாது. ஸ்மார்த்தமான ஔபாஸன ஹோமமும் நித்யமானாலும் சுருதி விஹித அக்நி ஹோத்ரத்தைவிட அது துர்பலமானதே. ஔபாஸனத்திற்கு பிரத்யக்ஷ சுருதிகளில் விதி கிடையாது. ஔபாஸனமானது சிஷ்டர்களுடைய ஆசாரத்தினால் ஏற்பட்ட ஒரு கர்மாதான். இதை ஆபஸ்தம்பர்.

अथ कर्माणि आचाराद्यानि गृह्यन्ते ।

என்ற ஸூத்ரத்தால் ஔபாஸநாதிகர்மாக்கள் ஆசார ப்ராப்த தர்மங்களென்பதை ஸ்பஷ்டப்படுத்தினார். சிஷ்டாசாரத்திற்கு மூலமாக ஒரு சுருதியை அனுமானத்தினால் கல்பித்துக்கொண்டு அந்த அநுமித சுருதி மூலகமாகவே ஔபாஸனாதிகளுக்கு பிராமாண்யமென்பது வைதிக மத ஸித்தாந்தமாயிருக்கிறது. ஆதலால் அநுமித சுருதி மூலகமாயும், ஆசாரப்ராப்தமாயுமுள்ள ஔபாஸனத்தைவிட பிரத்யக்ஷ சுருதியில் ஸ்பஷ்டமாக விதிக்கப்பட்ட அக்நிஹோத்ரம் ப்ரபலமானதே. மேலும் க்ருஹ்ய ஸூத்ர விஹிதங்களான, ஔபாஸன, ஸ்தாலீபாகாதிகள் பெரும்பாலும் ச்ரௌதமான அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸாதி பிரயோக விதிகளையே உபஜீவித்து நிற்பதாலும், அந்த ச்ரௌதகர்மாக்கள் பிரபலங்களென்பதை மறுக்கமுடியாது.

இத்தகைய பிரமாண - ந்யாயாதிகளைக் கொண்டுதான் நம் பூர்வாசார்யர்கள் பிரபன்னனுக்கு ச்ரௌதமான அக்நிஹோத்ரத்தை அவச்யமாக அனுஷ்டிக்கும்படி நியமனம் செய்துள்ளார்கள்.

### பிரபன்னனுக்கு அக்நிஹோத்ரவிதி
### ஸ்ரீ வங்கிபுர நம்பிகாரிகை

ஸ்ரீ பாஷ்யகார சிஷ்யரும், அவருடைய நியமனத்தாலேயே பிரபன்னர்களுக்கு ஆன்ஹிக தர்மங்களைச் சொல்லியவரென்று ச்ரமச்லோகாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகனால் பிரசம்ஸிக்கப்பட்டவருமான ஸ்ரீ வங்கிபுரத்து நம்பிகளென்ற ஸ்ரீ வங்கிவம்சேச்வரர் தமது ஆன்ஹிக காரிகையில் அபிகமன காலத்தில் ஸந்த்யாதிகளை விதித்துவிட்டு, பிறகு ஹோம பிரகரணத்தில்

समिदाज्यादिभिः द्रव्यैः मन्त्रैरपि यथोदितैः ।
हुत्वाग्नीन् अग्निहोत्रादौ उक्त कालमविक्षिपन् ॥

"சுருதி கல்ப ஸூத்ராதிகளில் விதிக்கப்பட்டுள்ள மந்திரங்கள், ஸமித், ஆஜ்யம் முதலிய த்ரவ்யங்கள் இவைகளைக்கொண்டு அக்நிஹோத்ராதி ஹோமங்களை, அவைகளுக்குச் சொல்லப்பட்டுள்ள காலத்தை அதிக்ரமிக்காமல் செய்யவேணும்"

என்று பிரபன்னனுக்கு அக்நிஹோத்ரஹோமத்தைச்சொன்னர்.

ஸ்ரீபாஞ்சராத்ர ரக்ஷையில்
ஸ்ரீ தேசிகன் வாக்யம்.

இதை ஸ்ரீ தேசிகனும், ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷையில் பிரபன்னனுக்கு ஆன்ஹிக தர்மங்களைச் சொல்லுமிடத்தில்,

ततः स्वसूत्र विधिना स्वाग्नि भगवदात्मकं हुत्वा

என்பதால் ஸ்வஸூத்ர விதிப்படி ப்ராத:காலஹோமத்தைப் பொதுவாக விதித்துவிட்டு மேற்கண்ட வங்கிபுரத்து நம்பிகளின் அக்நிஹோத்ர விதாயக காரிகையை பிரமாணமாகக்காட்டுகிறர். அந்த வாக்யமாவது:—

"अत्रचैवं वंगिवंशेश्वरैः दर्शितम् ....
ततः प्रक्षाल्य चरणौ स्वाचान्तः सुसमाहितः ।
समिदाज्यादिभिः द्रव्यैः मन्त्रैरपि यथोदितैः ।
हुत्वाग्नीन् अग्निहोत्रादौ उक्तं कालमविक्षिपन् ।
पराराधनरूपेण कृतेनैव स्वकर्मणा" ।

என்பது. மேற்கண்ட வாக்யங்களால் ஸ்ரீ தேசிகன் வங்கிபுரத்து நம்பி காரிகா பிரமாணத்தைக் காட்டி பிரபன்னனுக்கு அக்நிஹோத்ரம் அவஶ்யமென்று காட்டியருளினர்.

ஸ்ரீ சரமஶ்லோகாதிகாரத்திலும்
ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம்.

ஸ்ரீ சரமஶ்லோகாதிகாரத்திலும் ஸ்ரீ தேசிகன் இவ்விஷயத்தை வெகு ஸ்பஷ்டமான வாக்யங்களால் ஸாதிப்பதைக் காண்க.

"வங்கிபுரத்து நம்பியும் பிரபன்னனுக்கு அஹோராத்ர க்ருத்யமான பகவத்ஸமாராதனத்தைச் சொல்ல விழிந்து

गायत्रीजपपर्यन्तं मन्त्राचमनपूर्वकम् ।
सांध्यं कर्माखिलं साधु समाप्यच यथाविधि ।

समिदाज्यादिभिः द्रव्यैः मन्त्रैरपि यथोदितैः ।
हुत्वाग्नीनग्निहोत्रादौ उक्तं कालमविक्षिपन् ।

என்றும், ......... இப்பிரகாரங்களிலே தத்தந்மந்திர பூர்வகங்களான வர்ணாச்ரம தர்மங்களையருளிச்செய்தார்"

மேற்கண்ட வாக்யங்களால ஸ்ரீ தேசிகன் பற்பல ஸந்தேஹங்களையும் நன்றாகத தெளியவைத்து விட்டார் அந்த வாக்யத்தில் "பிரபன்னனுக்கு" என்று தேசிகன் குறிப்பாக பிரபன்னனை அதிகாரியாக நிர்த்தேசித்து அவனுக்கு அக்னிஹோத்ராதிகளை விதிப்பது ஓர் முக்ய விஷயம். "அஹோராத்ர•க்ருத்யமான" என்ற வார்த்தையால் அக்னிஹோத்ரமானது, ஸந்த்யாவந்தனாதிகளைப்போல் நித்யங்களான ஆன்ஹிகதர்மங்களில் சேர்ந்ததென்பதையும், அக்னிஹோத்ரம் வர்ணாச்ரம தர்மமென்றும் பகவத் ஸமாராதன ரூபமாக அதை அநுஷ்டிக்கவேண்டுமென்பதையும் மேற்படி வாக்யங்களால் ஸ்ரீ தேசிகன் விளக்கியுள்ளார்.

### அஷ்டாக்ஷர ஜபத்தைவிட அக்னிஹோத்ரம் பிரபலம்

ஸ்ரீ தேசிகன் சரமச்லோகாதிகாரத்திலேயே மற்றொரு இடத்திலும் இவ்விஷயத்தைப் பிரஸ்தாவித்துள்ளார். பிரபன்னனுக்கு சுருதிஸ்ம்ருதிவிஹிதகர்மாக்கள் பிரபலங்களென்றும் பிரபன்னன் அவைகளை அதிக்ரமிக்கக்கூடாதென்றும் உபபாதனம் செய்து வருகையில், ஸ்ரீ மதஷ்டாக்ஷர ஜபம் ஆவச்யகமானாலும் சுருதி, ஸ்ம்ருதி விஹித கர்மாக்களுக்கு விரோதமில்லாத காலத்தில்தான் அஷ்டாக்ஷர மந்த்ர ஜபத்தைச் செய்யவேண்டுமென்று ஆசார்யர்கள் திருவுள்ளமென்றும் காட்டுகிறார். இந்த இடத்திலும் மேற்கண்ட வங்கிபுரத்து நம்பிகாரிகையை ஸ்ரீ தேசிகன் பிரமாணமாக எடுத்துள்ளார்.

அந்த வாக்யமாவது :—

"तस्मात्•अष्टाक्षरं मन्त्रं मद्भक्तैः वीतकल्मषैः ।
सन्ध्या कालेषु जप्तव्यं सततं चात्मशुद्धये ॥

என்று ஸ்ரீ வைஷ்ணவ தர்ம சாஸ்திரங்களில் சொன்னதுவும் .........த்யத்தில் அருளிச் செய்தது

வும், மற்றுமிப் புடையிலுள்ளவைகளெல்லாம், அவச்யகர்த்தவ்யங்களான நித்ய, நைமித்திகங்களுக்கு விரோதம் வாராதபடி அவற்றுக்குப் போக்கி, மிக்க காலத்திலேயாகக்கடவது.

श्रौतस्मार्ताविरुद्धेषु कालेषु जपमाचरेत् । என்று நாரதாதிகளும் சொன்னார்கள்.

हुत्वाग्नीनग्निहोत्रादौ उक्तं कालमविक्षिपन् ।
என்று வங்கிபுரத்து நம்பியுமருளிச் செய்தார்'' என்பது.

இந்த வாக்யங்களில் ஸ்ரீ தேசிகன், சுருதி விஹிதமான அக்நிஹோத்ர ஹோமம் பலீயஸ்ஸாகையால் அதற்கு விரோதம் வாராதபடி வேறு காலத்தில்தான் அஷ்டாக்ஷர ஜபம் செய்யவேண்டுமென்று வங்கிபுரத்து நம்பிகாரிகையை பிரமாணமாகக் காட்டி நிர்ணயித்தார். उक्तकालमविक्षिपन् என்பதால் அக்நிஹோத்ரத்திற்கு சுருதி விஹிதமான முக்ய காலத்தை விக்ஷேபம் அதாவது அதிக்ரமிக்கக்கூடாது என்று விதிக்கப்படுகிறது. ஆதலால் பிரபலமான சுருதி விதிக்கு விரோதம் ஏற்படாமல் அந்த ஜபத்தை வேறு காலத்தில் செய்யவேணுமென்று ஸ்ரீ தேசிகன் ஸாதித்துள்ளார். இதில் ச்ரௌததர்மங்கள் பிரபலங்களென்ற ஸித்தாந்தம் வெளிப்பட்டது. மேலும் இந்த வாக்யங்களில் ஸ்ரீதேசிகன் ''அவச்யகர்த்தவ்யங்களான நித்ய நைமித்திகங்களுக்கு'' என்று ஸாதித்து அதற்கு அக்நிஹோத்ரத்தை உதாஹரணமாகக் காட்டுவதால், அக்நிஹோத்ரமானது நித்யமென்பதும், ''அவச்யகர்த்தவ்யம்'' என்பதும் ஸ்ரீதேசிகன் திருவுள்ளமாயிருக்கிறதென்பது ஸ்பஷ்டம்.

இவ்வாறு ஸ்ரீ தேசிகன் மூன்று பிரகரணங்களில், பிரபன்னனுக்கு அக்நி ஹோத்ரத்தை விதிக்கும் வங்கிபுரத்து நம்பிகாரிகையை பிரமாணமாகக்காட்டி, அக்நிஹோத்ரம் நித்யமென்றும், வர்ணாச்ரம தர்மமென்றும், பகவத் ஸமாராதன ரூபமென்றும், அவச்யகர்த்தவ்யமென்றும் ஸந்தேஹத்திற்கு இடமின்றி அருளிச்செய்தார்.

## அக்நிஹோத்ராதிகள் நித்யங்கள்.
## ஸ்ரீபாஷ்யாதி பிரமாணம்

இனி ஸ்ரீ பாஷ்யகாரர், ஸ்ரீ தேசிகாதி ஆசார்யர்கள் ஸ்ரீ பாஷ்ய, கீதாபாஷ்ய, தாத்பர்யசந்திரிகாதி பல கிரந்தங்களிலும் யக்ஞாக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று ஸித்தாந்தம் செய்திருப்பதையும் நிரூபிப்போம்.

यावज्जीवमग्निहोत्रं जुहोति ।
यावज्जीवं दर्शपूर्णमासाभ्यां यजेत ।
वसन्ते वसन्ते ज्योतिषा यजेत ।

இத்யாதி அநேக சுருதிகளாலும், மனு, யாக்ஞவல்க்யாதி ஸ்மிருதி வசனங்களாலும், ஆபஸ்தம்ப, போதாயன, காத்யாயனாதி கல்ப ஸூத்ரங்களாலும், கீதை, பிரம்மஸூத்ரம், பூர்வ மீமாம்ஸை முதலிய பிரமாணக்ரந்தங்களாலும், பிராம்ஹணனுக்கு யக்ஞாக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்பதும், வர்ணாச்ரமதர்மங்களில் சேர்ந்தவையென்பதும், செய்யாவிட்டால் ருணதோஷம், உபபாதக தோஷம் முதலியப் பிரத்யவாயங்கள் ஏற்படுமென்பதும் இக்கிரந்தத்தில் பூர்வ பாகத்தில் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த அம்சங்களை ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதி ஆசார்யர்களும் அங்கீகரித்திருப்பதைக் காட்டுகிறோம்.

முதலில் பிர்ம்மஸூத்ரத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலுமுள்ள விஷயத்தைக் கவனிக்கவேணும்.

பிர்ம்ஹவித்யா நிஷ்டனான முமுக்ஷுவுக்கு. பிர்ம்ஹவித்யாங்கமாக, அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸாதி சிரௌத யக்ஞங்கள் அவ்சியானுஷ்டேயங்களென்று ஸர்வாபேக்ஷாதிகரணத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டது. இதற்கு பிரமாணமாக

तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन........

என்ற சுருதி காட்டப்பட்டிருக்கிறது. இந்த சுருதியிலுள்ள யக்ஞபதமானது சிரௌதங்களான அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களையே குறிக்கிறதென்பதை ஸூத்ரகாரரும் ஸ்ரீபாஷ்யகாராதி ஆசார்யர்களும் அங்கீகரித்து

ஸித்தாந்தம் செய்திருப்பது நிர்விவாதமான விஷயம். மேழே அக்னீந்தனாதிகரணத்தில், ஊர்த்வரேதஸ் என்று சொல்லப்படும் ஸந்யாஸிபோன்ற அதிகாரிகளுக்கு யாகத்தில் அதிகாரமில்லை யாகையால், அவர்கள் பிரம்ஹவித்யாங்கமாக யாகம் அநுஷ்டிக்க வேண்டியதில்லையென்பது

अत एव च अग्नीन्धनाद्यनपेक्षा । (3—4—25)

என்ற ஸூத்ரத்தால் சொல்லப்பட்டது. இங்கு ஸ்ரீபாஷ்யகாரர் अग्नीन्धनं என்பதற்கு அர்த்தம் செய்திருப்பது கவனிக்கத்தக்கது

अग्नीन्धनं—अग्न्याधानम् । आधानपूर्वक अग्निहोत्र दर्श-पूर्णमासादि कर्म ।

என்பதால் ஆதானபூர்வகமான அக்னிஹோத்ர, தர்சபூர்ணமாஸாதி யாகங்களென்று ஸ்ரீ பாஷ்யகாரர் ஸாதிக்கிறார். ஸ்ரீதேசிகனும் புருஷார்த்தாதிகரணாதிகளில் क्रतुषु என்றும் खादेः என்னும் பதங்களால் யக்ஞபதமானது ச்ரௌதயாகங்களையே சொல்லுகிறதென்பதை அதிகரணஸாராவளியில் விளக்கியுள்ளார்.

மேலும் புருஷார்த்தாதிகரணம், ஸர்வாபேக்ஷாதிகரணம், விஹிதத்வாதிகரணம் முதலியவிடங்களில் ஸூத்ரத்திலும் ஸ்ரீ பாஷ்யாதிகளிலும் செய்யப்பட்டுள்ள விசாரங்களும், ஸித்தாந்தங்களும், ச்ரௌதயாக விஷயமாகவே இருப்பதையும் கவனிக்க வேணும். அவ்விடங்களிலெல்லாம் யாவஜ்ஜீவாதி ச்ரௌத கர்மவிதி வாக்யங்களையே உதாஹரித்திருப்பதும் முக்ய விஷயம். ஆகையால் முமுக்ஷு, பிரம்ஹவித்யாங்கமாக அக்னிஹோத்ரமும் யாகங்களும் அவச்யம் அனுஷ்டிக்கவேண்டுமென்று ஸூத்ரகாரரும் ஸ்ரீபாஷ்யகாரரும் ஸித்தாந்தம் செய்தார்கள்.

### யக்ஞாக்நிஹோத்ராதிகள் ஆச்ரமதர்மங்கள். பிரம்ஹ ஸூத்ர— ஸ்ரீ பாஷ்ய நிர்ணயம்

இதன்மேல் ஓர் சங்கை ஏற்பட்டது — முமுக்ஷுவுக்கு பிரம்ஹவித்யாங்கமாக யாகாதிகள் அவச்யாநுஷ்டேயங்களானால், முமுக்ஷுவல்லாத கேவல கிரஹஸ்தனுக்கு அந்த அக்நிஹோத்ரயக்ஞாதிகள் ஸ்வதந்திரமாக (அதாவது ஒன்றுக்கு அங்க

மாயில்லாமல்) அநுஷ்டேயங்களா—வேண்டாமா என்று. இதற்காக ஸூத்ரகாரர்

विहितत्वाच्च आश्रमकर्मापि (3-4-32)

என்ற ஸூத்ரத்தால் யக்ஞாக்நிஹோத்ராதிகள் நித்யங்களாயும், ஆச்ரம தர்மங்களாயும் சுருதிகளில் விஹிதங்களாயுமிருப்பதால் அவைகளைக் கேவல கிருஹஸ்தர்களும் பிரம்மவித்யாங்கமாயில்லாமல் ஸ்வதந்திரமாயும் அநுஷ்டிக்கவேண்டுமென்று விதித்தார். இந்த ஸூத்ரபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் இதை வெகு ஸ்பஷ்டமாக சொல்லுவதாவது

यज्ञादि कर्माङ्गिका ब्रह्मविद्येति उक्तम्। तानि च यज्ञादीनि कर्माणि अमुमुक्षुणा केवलाश्रमिणापि अनुष्ठेयानि, उत न इति चिन्तायाम्

என்று அவதாரிகையிட்டு

आश्रमस्य कर्मापि भवति। केवलाश्रमिणापि अनुष्ठेयानि इत्यर्थः। कुतः? "यावज्जीवमग्निहोत्रं जुहोति" इत्यादिना विहितत्वात्, जीवन निमित्ततया नित्यवद्विहितत्वादित्यर्थः॥

இந்த வாக்யங்களால் ஸ்ரீபாஷ்யகாரர், முமுக்ஷுவல்லாத கிரஹஸ்தர்கள் எல்லோரும் யாவஜ்ஜீவாதி சுருதி விஹித அக்நிஹோத்ராதி நித்யகர்மாக்களை ஆச்ரமதர்மமாக அநுஷ்டித்துத் தீரவேணுமென்று நிச்சயித்தார். இதனால் ஸ்ரீபாஷ்யகாரர் அக்நிஹோத்ராதி ச்ரௌதகர்மாக்கள் நித்யங்களென்பதை ஸ்தாபித்தார்.

அதிகரணஸாராவளியிலும் ஸ்ரீதேசிகன் ஸாதிப்பது.

இந்த விஹிதத்வாதிகரணத்திய அதிகரணஸாராவளியில் ஸ்ரீதேசிகனும் அக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்பதைக் கூறுகிறார்.

यज्ञादेः कर्मणो हि श्रुतिभिरभिदधे ब्रह्मविद्यांगभावः
तस्माद्ब्रह्मनिष्ठे तदनुसरणात् स्वैरितैवास्तु मैवम्।
नित्यत्वस्यापि सिद्धेः तदुचितविनियुक्त्यन्यभावानुसारात्
तन्त्रं काम्याग्निहोत्रादिवदिह परविन्नित्यवर्गेऽपि योज्यम्॥

"அக்நிஹோத்ராதி கர்மாக்கள் பிரம்ஹவித்யைக்கு அங்கமென்று ச்ருதி கூறுவதால், பிர்ம்ஹநிஷ்டனல்லாத கிரஹஸ்தன் அக்நிஹோத்ராதிகளை அநுஷ்டியாமல் ஸ்வச்சந்தமாக இருக்கலாமென்று பூர்வபக்ஷம் ஏற்பட்டது. ஆனால் அக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று வேறு விநியோகவாக்யத்தால் ஸித்திப்பதால், அவைகளை எல்லா கிரஹஸ்தர்களும் ஆச்ரமதர்மமாக அநுஷ்டிக்க வேண்டியதே. அப்படியானல் பிரம்ஹவித்யாங்கமாக அக்நிஹோத்ரம் அநுஷ்டிக்கும் முமுக்ஷுவுக்கும் இந்த ஆச்ரமதர்மமான நித்யாக்நிஹோத்ராநுஷ்டானம் உண்டாகையால் அவன் இரண்டு அக்நிஹோத்ரம் செய்ய நேரிடும். ஆயினும், காம்யாக்நிஹோத்ரத்தால் நித்யாக்நிஹோத்ர ஸித்தி ஏற்படுவதாக மீமாம்ஸாநியாயாதிகள் கூறும் வியவஸ்தையை அநுஸரித்து பிரம்ஹவித்தாயிருப்பவன் வித்யாங்கமாக அநுஷ்டிக்கும்" அக்நிஹோத்ரத்தாலேயே, ஆச்ரமதர்மமான நித்யாக்நிஹோத்ரமும் தந்த்ரேண அநுஷ்டிதமாகிறதாகையால் தனியாக அவன் நித்யாக்நிஹோத்ரம் செய்யவேண்டியதில்லை"

இவ்வாறு ஸ்ரீதேசிகன் மேற்கண்ட அதிகரணஸாராவளி ச்லோகத்தால் நிஷ்கரித்து அக்நிஹோத்ராதிகள் ஸ்வதந்திர நித்யங்களென்றும் எல்லா கிரஹஸ்தனும் அவைகளை அநுஷ்டியாமல் ஸ்வச்சந்தமாக இருக்கமுடியாதென்றும் ஸ்பஷ்டமாக கூறுகிறார்.

பிரபன்னனுக்கும் இந்த ஸூத்ரவிதிப்படி யக்ஞாதிகள் ஆச்ரமதர்மங்களாக அவச்யாநுஷ்டேயங்களென்று ஸ்ரீதேசிகன் சரமச்லோகாதிகாரத்தில் நிரூபிப்பதை மேலேகாட்டுவோம்.

## நித்யாநித்திய ஸம்யோக விரோத விசாரம்

இங்கு நம் ஆசார்யர்கள் "நித்யாநித்யஸம்யோக விரோதம்" (नित्यानित्यसंयोग विरोधः) என்ற ஒரு கக்ஷியை பிரஸ்தாபித்து ஸமாதானம் சொல்லியிருப்பதும் முக்யமாகும். முமுக்ஷுவுக்கு

ஆச்ரமதர்மமான, நித்யாக்நிஹோத்ரமும், ப்ரம்மவித்யாங்க மான அக்நிஹோத்ரமும் ஆகிய இரண்டும் அநுஷ்டேயமாகச் சேருகிறபடியால் மேற்கண்ட நித்யா நித்யஸம்யோக விரோதம் ஏற்படுகிறது.

ஒரே கர்மாவானது ஆச்ரமதர்மமாகவும், வித்யாங்கமாக வும் இரண்டு ஆகாரம் உள்ளதென்று சொன்னால் நித்யாநித்ய ஸம்யோக விரோதம் ஏற்படுமென்று விஹிதத்வாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில்

विद्यांगानां सतां, केवलाश्रम शेषत्वे नित्यानित्यसंयोग विरोधः प्रसज्यते ।

என்ற வாக்யத்தால் ஸ்ரீபாஷ்யகாரர் விவரிக்கிறார். சுருதப் பிர காசிகையில் இந்த ஸ்ரீபாஷ்யவாக்யத்திற்கு விவரணம் செய் கையில்

यावज्जीवमनुष्ठानं, मोक्षेच्छानुगुणमनुष्ठानं च विरुद्धमित्यर्थः ।

என்பதால் யாவஜ்ஜீவாநுஷ்டானம், நித்யமென்றும், மோக்ஷே ச்சையை அநுஸரித்துச் செய்யப்படுவது அநித்யமென்றும் கூறி நித்யாநித்ய ஸம்யோகவிரோதத்தை விளக்கினார்.

இந்த நித்யா நித்யஸம்யோகவிரோதத்தைப் பரிஹரிப்பதற் காகவே அடுத்த ஸூத்ரமாகிய सहकारित्वेन च என்ற ஸூத்ரம் பிர வர்த்தித்தது. அக்நிஹோத்ராதிகள் ப்ரம்ஹவித்யைக்கு ஸஹ காரிகளாயிருப்பதாகவும் சுருதி விதியிருப்பதால், விநியோக வாக்யபேதமிருக்கிறது, ஆகையால் நித்யாநித்ய ஸம்யோக விரோதம் ஏற்படாதென்றும் இந்த ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில்

अग्निहोत्रादीनामिव जीवनाधिकार, स्वर्गाधिकारवत् विनियोग पृथक्त्वेन उभयार्थत्वं न विरुद्ध्यत इत्यर्थः ॥

என்ற வாக்யத்தால் இவ்விஷயம் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. இங்கு சுருத பிரகாசிகையிலும்

विनियोगपृथक्त्वदर्शनेन नित्यानित्यसंयोगविरोध परिहारः सूत्रद्वयफलम् ।

என்பதால் இந்த விஷயம் விவரணம் செய்யப்பட்டது. ஆகை யால் பிரம்ஹவித்யா நிஷ்டனுக்கு யாவஜ்ஜீவ சுருதிவிஹித நித்யாக்நிஹோத்ரமும், பிர்ம்ஹவித்யாங்கமான அநித்யாக்நி ஹோத்ரமும் ஆக இரண்டும் தனித்தனி விநியோக வாக்யத்தால் அநுஷ்டேயங்கள்தானென்று நிச்சயிக்கப்பட்டது. ஆயினும் அநித்யமான மோக்ஷாக்நி ஹோத்ரா நுஷ்டானத்தினாலேயே நித்ய மான யாவஜ்ஜீவாக்நிஹோத்ரா நுஷ்டானம் தந்த்ரேண ஸித்திப் பதால் தனியாக நித்ய அக்நிஹோத்ரம், பிர்ம்ஹவித்யா நிஷ்டன் அனுஷ்டிக்கவேண்டியதில்லையென்று மேற்படி அதிகரணஸாரா வளியில் ஸ்ரீ தேசிகன் तन्त्रं काम्याग्निहोत्रादिवदिह परविन्नित्यवर्गेऽपि योज्यम् என்பதால் ஸ்பஷ்டமாக்கினார். இந்த நித்யா நித்யஸம் யோக விரோத பரிஹார சர்ச்சா நிர்ணயங்கள் பிரகிருதத்தில் மிகவும் முக்யங்கள். யாவஜ்ஜீவ சுருதி விஹிதமான நித்யமான ஆச்ரம தர்மமான அக்நிஹோத்ராதி கர்மாவானது கேவலாச்ரம மிக்குப்போல் பிரம்ஹவித்யாநிஷ்டனை முமுக்ஷுவுக்கும் ஆச்ரமதர்ம முறையில் ஜீவனாதிகாரமாக அவச்யாநுஷ்டேயங்க ளென்று, ஸ்ரீபாஷ்ய ஸ்ரீதேசிகாதி ஆசார்யர்களின் திருவுள்ள மிருப்பது இங்கு ஸந்தேஹத்திற்கு இடமன்றி ஊர்ஜிதமாகிறது.

ஆகையால் ப்ர்ம்ஹநிஷ்டனை உத்கிருஷ்டாதிகாரிக்குக் கூட ஆச்ரமதர்மமாக யாவஜ்ஜீவாக்நிஹோத்ராதிகள் அவச்யா நுஷ்டேயங்களாயிருக்கையில் பிரபன்னனுக்கும் மற்ற கிரஹஸ் தர்களுக்கு அவை ஆவச்யகமென்பதில் ஸந்தேஹமில்லை

## விநியோக பிருதக்த்வ நிரூபணம்.

இனி "விநியோக பிருதக்த்வம்" (विनियोग पृथक्त्वं) என்ப தைப்பற்றி ஆசார்யர்கள் விஸ்தாரமாகப் பலவிடங்களில் ஸாதிப் பதாலும், அது பிரகிருதத்திற்கு ஆவச்யகமாயிருப்பதாலும் அதைச் சிறிது விவரிப்போம். "விநியோக பிருதக்த்வம்" என்றால் என்ன? தனித் தனியான விதிவாக்யம் என்று அர்த்தம்.

அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதி சிரௌ தகர்மங்கள், தனித்தனியாக மூன்று அதிகாரிகளைக் குறித்து

மூன்று விநியோக வாக்யங்களால், அதாவது விதிவாக்யங்களால், விதிக்கப்படுகின்றன.

यावज्जीवमग्निहोत्रं जुहोति ।
यावज्जीवं दर्शपूर्णमासाभ्यां यजेत ॥

என்ற விநியோகவாக்யம் அல்லது விதிவாக்யமானது, நித்யமான ஆச்ரமதர்மமான அக்நிஹோத்ர தர்சபூர்ணமாஸாதிகளை விதிக்கிறது இந்த விநியோகவாக்யத்திற்கு "ஜீவனாதிகார விநியோகம்" என்று சாஸ்திரங்களில் வ்யவஹாரம்.

இந்த அக்நிஹோத்ராதிகளையே ஸ்வர்க்காதி அல்பபுருஷார்த்தங்களை யுத்தேசித்தும் ஒருவன் செய்யலாம்.
இதை

अग्निहोत्रं जुहुयात् स्वर्गकामः ।
दर्शपूर्णमासाभ्यां स्वर्गकामो यजेत ॥

என்கிற விநியோக வாக்யங்கள் தனியாக விதிக்கின்றன. இது காம்யாக்நிஹோத்ரமெனப்படும். இந்த விநியோக வாக்யத்தை "காமனாதிகாரவிநியோகம்" என்று சாஸ்திரங்களில் வ்யவஹரிக்கப்படுகிறது.

இனி இந்த அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸாதி யக்ஞங்களையே ப்ரம்ஹவித்யாநிஷ்டனான முமுக்ஷு பிரம்ஹவித்யாங்கமாக அவச்யம் அனுஷ்டிக்கவேண்டுமென்று பிரம்மஸூத்ராதிகள் விதிக்கின்றன. இதை "तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन—" என்ற சுருதி வாக்யம் விதிக்கிறது. இந்த விநியோகம் அல்லது விதிக்கு "மோக்ஷாதிகார விநியோகம்" என்று வ்யவஹாரம்.

ஆகையால் அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸாதியாகங்கள் ஒரே ரூபங்களாக இருந்தபோதிலும் மேற்கண்ட மூன்று அதிகாரிகளால் தனித்தனியான காரணங்களைக் கொண்டு அனுஷ்டிக்கப்படலாம். ஏனெனில் ஜீவனாதிகாரம், காமனாதிகாரம், மோக்ஷாதிகாரமென்கிற மேற்கண்ட மூன்றுவித விநியோக வாக்யங்களால் விதிக்கப்படுவதால்.

### நித்ய, காம்ய, வித்யாங்க அக்நிஹோத்ராதிகள் ஏகரூபங்களே.

இவ்வாறு ஒரே அக்நிஹோத்ர கர்மாவானது, நித்யாக்நி ஹோத்ரம், காம்யாக்நி ஹோத்ரம், பிரம்ஹவித்யாங்காக்நி ஹோத்ரமென்று மூன்று விதமாயிருந்தபோதிலும் அது ஒரே கர்மாதான், பிரயோகபேதம் கிடையாது. தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதிகளும், நித்யம், காம்யம், வித்யாங்கமென்று பிரிந்தபோதிலும் பிரயோகத்தால் ஒரே ரூபங்கள்தான். அதாவது, நித்யமாக அனுஷ்டித்தாலும், ஒருவன் ஸ்வர்க்காதி காமனையால் இவைகளையனுஷ்டித்தாலும், பிரம்மவித்யாங்கமாகச் செய்தாலும், அந்த அக்நிஹோத்ராதி கர்மம் ஒன்றுதான். அபிஸந்தி அல்லது ஸங்கல்ப பல பேதமேயன்றி, கர்மபிரயோகபேதமில்லை.

இதை பிரம்ஹஸூத்ரகாரரே தெளிவாக்கியுள்ளார். விஹிதத்வாதிகரணத்தில் அக்நிஹோத்ராதிகள் ஆச்ரமதர்மங்களென்றும், "ஸஹகாரித்வேந" என்ற ஸூத்ரத்தால் அந்த அக்நிஹோத்ராதிகளே பிரம்மவித்யாங்கமென்றும் நிர்ணயித்த பிறகு அடுத்த ஸூத்ரத்தால்

सर्वथापि त एव उभयलिंगात् (3—4—34)

என்று நித்யமாகவோ, காம்யமாகவோ பிரம்மவித்யாஸஹகாரியாகவோ யக்ஞாதிகளைச் செய்தாலும் அந்த அக்நிஹோத்ராதி கர்மாக்கள் ஒன்றுதான் என்பது விளக்கப்பட்டது. இங்கு ஸ்ரீ பாஷ்யத்தில்

सर्वथा, विद्यार्थत्वे, आश्रमार्थत्वेऽपि तएव यज्ञादय इति प्रतिपत्तव्यम् । न कर्मस्वरूपभेद इत्यर्थः ॥

என்ற வாக்யத்தால் அக்நிஹோத்ராதிகள் பிரம்ஹவித்யார்த்தமாக அநுஷ்டிக்கப்பட்டாலும் ஸரி, ஆச்ரமதர்மமாக அனுஷ்டிக்கப்பட்டாலும் ஸரி கர்ம ஸ்வரூபபேதமில்லையென்றும் ஒரே கர்மாதான் என்றும் சொல்லப்பட்டது.

அக்நிஹோத்ராதி ச்ரௌதகர்மாக்களுக்கு நேர்கண்டபடி விநியோக பிருதக்த்வம் இருப்பதை ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்ரீ தேசிகாதிகள் இன்னும் பலவிடங்களில் பிரஸ்தாவித்திருப்பதையும் இங்கு காட்டுகிறோம்.

கீதையில்

अनिष्टमिष्टं मिश्रंच त्रिविधं कर्मणः फलम् । (18—12)

என்ற சுலோக பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் சொல்லுவதாவது:-

ननु कर्माणि अग्निहोत्र दर्शपूर्णमास ज्योतिष्टोमादीनि, महा-
यज्ञादीनिच स्वर्गादि फलसंबंधितया शास्त्रैः विधीयन्ते............
अतः मोक्षविरोधिफलत्वेन मुमुक्षुणा न कर्म अनुष्ठेयम् ।........

என்ற, அவதாரிகையில், "அக்நிஹோத்ர தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதி கர்மாக்கள் ஸ்வர்க்காதி பல ஸம்பந்தமுள்ளவையாக சாஸ்திரங்களில் விதிக்கப்படுவதால், முமுக்ஷுவுக்கும் அந்த அநபேக்ஷிதமான ஸ்வர்க்காதி அநிஷ்ட பலம் வரக்கூடுமாகையால் அவன் அந்த கர்மாக்களைச் செய்யவேண்டியதில்லையே" என்று பூர்வபக்ஷம் செய்துகொண்டு ஸித்தாந்தம் கூறுகையில்,

यद्यपि अग्निहोत्र महायज्ञादीनि नित्यान्येव,तथापि जीवनाधि-
कार कामाधिकारयोरिव मोक्षाधिकारेऽपि विनियोग पृथक्त्वेन
परिहृियते ॥

என்பதால் விநியோக ப்ருக்த்வ ஹேதுவைக் காட்டி ஸமாதானம் கூறப்பட்டிருக்கிறது. அதாவது அக்நிஹோத்ராதிகளுக்கு ஜீவநாதிகாரம், காமாதிகாரம், மோக்ஷாதிகாரம் என்ற தனித் தனியான மூன்று விநியோக வாக்யங்களிருப்பதால் முமுக்ஷுவானவன் तमेतं वेदानुवचनेन என்கிற மோக்ஷாதிகார விநியோக வாக்யப்படியே அக்நிஹோத்ராதிகளை அநுஷ்டிக்கிறானேயல்லது अग्निहोत्रं जुहुयात् स्वर्गकामः என்கிற காமாதிகார விநியோக வாக்ய ப்படி செய்யவில்லையாகையால் முமுக்ஷுவுக்கு காம்யஸ்வர்க்காதி பலன்கள் ஸம்பந்திக்கக் காரணமில்லையென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது மேற்படி கீதாபாஷ்யத்தில் பாஷ்யகாரர், அக்நிஹோத்ர, ஜ்யோதிஷ்டோமாதிகள் நித்யங்களென்று ஸ்பஷ்டமாக சொல்லுவதும் கவனிக்கத்தக்கது.

## பிரபன்னனுக்கு யக்ஞாதிகள் ஆச்ரமதர்மங்களாக அநுஷ்டேயங்கள்.

## ஸ்ரீதேசிகன் வாக்யம்.

ஆகையால் முமுக்ஷுவான பிரம்ஹவித்யாநிஷ்ட அதிகாரிக்கு வித்யாங்கத்வ ஆகாரத்தினுல் யக்ஞாதிகள் அவச்யாநுஷ்டேயங்களாகின்றன. பிரபந்நனுக்கோவென்றால் வித்யாங்கத்வாகாரமில்லாவிடினும், ஜீவநாதிகாரமென்கிற ஆகாரத்தினுல் அக்நிஹோத்ராதிகள் அவச்யானுஷ்டேயங்களாகின்றன. அதாவது "யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹோதி" என்ற நித்யத்வ விதாயக விநியோக வாக்யப்படி வர்ணாச்ரம தர்மமுறையில் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதிகள் அவச்யானுஷ்டேயங்களென்பதை ஸ்ரீதேசிகனே சரமச்லோகாதிகாரத்தில் வெகு ஸ்பஷ்டமாகக் கூறுகிறார். அந்த வாக்யமாவது:—

> "இத்தர்மங்களுக்கு सहकारित्वेन என்ற ஸூத்திரத்தில் சொன்ன வித்யாஸஹகாரித்வ வேஷம் தவிர்ந்தாலும் विहितत्वाच्च आश्रमकर्मापि என்ற ஸூத்ராந்தரத்தில் சொன்ன விநியோகாந்தரத்திற்கு பிரபந்நன்பக்கலில் நிவாரகரில்லை"

என்று. இந்த வாக்யத்தில் ஸ்ரீதேசிகன் பிரபந்நர்கள் பிரபத்திக்கு ஸஹகாரியாக அக்நிஹோத்ராதிகள் செய்யவேண்டியதில்லையாயினும் அவர்கள் "விஹிதத்வாத்" என்ற விதிப்படி ஆச்ரமதர்மமுறையில் நித்யங்களான அக்நிஹோத்ராதிகளைச் செய்யவேணுமென்பதை ஸ்திரப்படுத்தியுள்ளார். மோக்ஷாதிகார விநியோக வாக்யம் பிரபந்நனைக் கட்டுப்படுத்தாதாயினும் யாவஜ்ஜீவ விநியோக வாக்யம் பிரபந்நனையும் கட்டுப்படுத்துமென்பது மேற்படி வாக்யத்தின் நிஷ்கர்ஷமாகும்.

இங்கு ஸ்ரீதேசிகன் ப்ரபந்நனுக்கு विहितत्वाच्च आश्रमकर्मापि என்ற ஸூத்ரவிதிப்படி அக்நிஹோத்ராதிகள் அவச்யாநுஷ்டேயங்களென்று கூறுவதால் அந்த ஸூத்ரத்தின் அர்த்தத்தை ஞாபகப்படுத்திக்கொள்வது அவச்யமாகும்.

இந்த ஸூத்ர பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் ஸாதித்திருப்பதாவது—

(यज्ञादीनिकर्माणि) केवलाश्रमिणापि अनुष्ठेयानीत्यर्थः । कुतः ! "यावज्जीवमग्निहोत्रं जुहोति ' इत्यादिना विहितत्वात् । जीवननिमित्ततया नित्यवद्विहितत्वादित्यर्थः॥ என்பது

ஆகவே विहितत्वाच्च என்ற ஸூத்ரமானது வர்ணாச்ரமதர்மமான நித்யமான, யாவஜ்ஜீவம் அநுஷ்டேயமான அக்நிஹோத்ராதி கர்மாவை விதிக்கும் பிரமாணமாயிருப்பதால், ஸ்ரீதேசிகன், மேற்படி சரமச்லோகாதிகார வாக்யத்தில் இந்த ஸூத்ரத்தையே பிரமாணமாகக்காட்டி பிரபந்நர்களுக்கும் அக்நிஹோத்ராதிகளை ஸ்திரப்படுத்தியிருப்பது அசைக்கமுடியாத விஷயமாகும்.

இதுபோல ஸ்ரீ தேசிகன், அக்நிஹோத்ர, ஜ்யோதிஷ்டோமாதிகள் நித்யங்களென்பதை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம், தாத்பர்ய சந்திரிகை முதலிய வேறு பலவிடங்களில் சொல்லியிருப்பதையும் காட்டுவோம்.

### ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு நித்யத்வமும் காம்யத்வமும்.

### சாஸ்த்ரீயநியமநாதிகார நிர்ணயம்

சாஸ்த்ரீய நியமநாதிகாரத்தில், ஸ்ரீதேசிகன் आज्ञानुज्ञाविभागेन, प्रत्यवाय परीहारे, नित्यकाम्यस्वरूपैक्ये" இத்யாதிகளான காரிகைகளால் செய்துள்ள நிர்ணயங்களும், ச்ரௌதங்களான அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதிகளைப் பற்றியவைகளாயிருப்பது கவனிக்கத் தக்கது. आज्ञानुज्ञाविभागेन என்ற காரிகையில் பிரபந்நனுக்கு ஆக்ஞா ரூபங்களான நித்யகர்மாக்கள் பிரத்யவாய பரிஹாரார்த்தமாக அவச்யாநுஷ்டேயங்களென்று ஸாதிக்கிறார். அப்படி அநுஷ்டிக்காவிடில் பகவந்நிக்ரஹரூபதோஷம் ஏற்படுமென்று காட்டினார். இந்தக் காரிகைகளில் ஸம்வலிதாதிகாரம், விநியோக பிருதக்த்வம், காம்யாத் நித்யஸித்தி இத்யாதிகளான நிர்ணயங்கள்யாவும் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி விஷயங்களாயிருப்பதைக் கவனி

### பிரபன்னனுக்கு ஜ்யோதிஷ்டோமம்.

### ஸாராஸ்வாதிநீ வாக்யம்.

இவ்விஷயம் ஸாராஸ்வாதினி முதலிய வ்யாக்யானங்களில் தெளிவாயிருக்கிறது. आज्ञानुज्ञा என்ற காரிகாவதாரிகையில் ஸாராஸ்வாதிநீ வாக்யமாவது :—

"ஒரு ப்ரயோகத்தில் அநேக பலன் ஸித்தித்தால் ஸக்ருத் நித்ய ஜ்யோதிஷ்டோமானுஷ்டானத்தாலே "सर्वेभ्यः कामेभ्यः ज्योतिष्टोमः என்ற ஸர்வ பல ப்ராஸக்த்யா ப்ரபந்நனுக்கு பஹு அனர்த்தம் ப்ரஸங்கியாதோ வென்ன, சாஸ்த்ரீய தர்ம பேதங்களையும், பல பேதங்களையும் விபஜித்தருளிச் செய்கிறார்"

இந்த ஸாராஸ்வாதிநீ வாக்யமானது ப்ரபன்னனுக்கு நித்ய ஜ்யோதிஷ்டோமானுஷ்டானத்தை ஒப்புக்கொள்ளுவது தெளிவாயிருக்கிறது. ப்ரபந்நன் நித்யமான ஜ்யோதிஷ்டோமத்தை அனுஷ்டிக்கையில், ஜ்யோதிஷ்டோமத்திற்கு அநேக காம்யபலனும் உண்டென்று சாஸ்திரம் சொல்வதை அநுஸரித்து ப்ரபந்நன் அபேக்ஷியாமலிருந்தாலும் அந்த காம்யபலனும் ப்ரபந்நனுக்கு வந்துவிடுமோவென்று ஆசங்கைசெய்து கொண்டு अनिष्टमिष्टं-मिश्रं च என்ற கீதாபாஷ்யத்தில் நிர்ணயித்ததுபோல் விநியோக ப்ருதக்த்வ காரணத்தால் நித்யஜ்யோதிஷ்டோமத்தை அநுஷ்டிக்கும் ப்ரபந்நனுக்கு காம்யஜ்யோதிஷ்டோம பலன் வர ப்ரஸக்தியில்லையென்று ஸ்ரீ தேசிகன் திருவுள்ளமென்பதை ஸாராஸ்வாதிநீகாரர் மேற்கண்ட வாக்யத்தால் நிர்வாஹம் செய்திருக்கிறார். ப்ரபந்நன் ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत என்ற காம்ய விநியோக வாக்யப்படி ஜ்யோதிஷ்டோமம் செய்யவில்லை. ஆனால் वसन्ते वसन्ते ज्योतिषा यजेत என்ற நித்ய விநியோகவாக்யப்படியே ஜ்யோதிஷ்டோமம் செய்கிறான். ஆகையால் காம்ய ஜ்யோதிஷ்டோம பலன் ப்ரபன்னனுக்கு வாராது என்று இங்கு ஸ்பஷ்டமாக்கப்பட்டது. ப்ரபந்நனுக்கு நித்ய ஜ்யோதிஷ்டோமம் அவச்யானுஷ்டேயமென்பதற்கு இதைவிட நிஸ்ஸந்தேஹமான ப்ராமாணம் வேறு வேண்டுமா ?

प्रत्यवायपरीहारे என்ற காரிகையின் அவதாரிகையிலும் ஸாராஸ்வாதிநீதியில்—

"விநியோக ப்ருதக்த்வத்தாலே, நித்ய, காம்யாத்மக ஜ்யோதிஷ்டோமாதிகளில், நித்யப்ரயோகத்தில் காம்யாஸித்தயா, நித்ய காம்ய ப்ரயோகபேதவத்"—

என்ற வாக்யத்தில் ஜ்யோதிஷ்டோமத்திற்கு நித்யத்வம் காம்யத்வம் என்ற இரண்டு ஆகாரங்களை ஒப்புக்கொண்டு அவைகளையே உதாஹரணமாகக் குறிப்பிடுவதும் முக்யமாகும்.

नित्यकाम्यस्वरूपैक्ये என்ற காரிகை அவதாரிகையிலும் ஸாரஸ்வாதிநீயில் ஜ்யோதிஷ்டோமத்தையே லக்ஷ்யமாகக் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

"விநியோக பேதேந, நித்ய—காம்யாத்மக ஜ்யோதிஷ்டோமாதிகளிலும் நித்ய பிரயோகத்தில் காம்ய ஸித்தி பிரஸங்கியாதோ—"

இத்யாதி வாக்யங்களையும் அவைகளின் அர்த்தங்களையும் நன்கு பராமர்சிப்பது ஆவச்யகமாகும்.

அகரணே பகவந்நிக்ரஹ ரூப ப்ரத்யவாயம்.

இங்கு நித்ய ஜ்யோதிஷ்டோமம் காம்ய ஜ்யோதிஷ்டோமமென்று பிரித்துக் கூறி பிரபந்நனுக்கு நித்ய ஜ்யோதிஷ்டோமானுஷ்டானம் உண்டென்று சொல்லிவிட்டபடியால், நித்ய ஜ்யோதிஷ்டோமம் ஆக்ஞாரூபமென்றும் ஆசார்யாள் நிச்சயிக்கிறபடியால் அந்த ஆக்ஞாரூபமான நித்ய ஜ்யோதிஷ்டோமத்தைச் செய்யாவிடில் निग्रहानुदयायाचा என்றபடி பகவந்நிக்ரஹ ரூப ப்ரத்யவாயமேற்படுமென்றும் ஆசார்யர்களின் திருவுள்ளமாயிருப்பது விசதமாகும். இந்த சாஸ்திரீய நியமநாதிகாரத்திலேயே கடைசியில் ஸ்ரீதேசிகன், பிரபந்நன் சுருதி ஸ்மிருதி முதலியவைகளைக் கொண்டு எம்பெருமானுடைய அபிமதங்களை அறிந்து ஆசரிக்கவேணுமென்று श्रुतिस्मृत्याचारैः என்கிற சுலோகத்தால் ஸாதிக்கிறார், அங்கு ஸாராஸ்வாதிநீயில்

श्रुतिः—"यावज्जीवमग्निहोत्रं जुहोति" इत्यादि श्रुतिः। एतादृश. श्रुत्या अग्निहोत्रादिकं भगवदभिमतमिति प्रथमं धर्म प्रतिपत्तिः॥

என்பதால் யாவஜ்ஜீவ சுருதி விஹித அக்நிஹோத்ராதி தர்மங்கள் பகவானுக்கு அபிமதங்களென்று பிரபந்நன் அறிந்து

கொள்ளவேணுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. பகவானின் ஆக்ஞாரூபங்களான தர்மங்களை அதிக்ரமிக்காமலிருப்பதற்காகவே பகவதபிதங்களை அறிந்துகொள்ளும்படி இது விதிக்கப்படுகிறது. ஆகையால் அக்னிஹோத்ராதிகள் பகவதபிமதங்களென்று பிரபந்நன் சுருதியால் அறிந்தும், அதை அதிக்ரமித்தால் பகவதாக்ஞாதிலங்கன ரூபப்ரத்யவாயமானது. श्रुतिस्मृतेर्ममैवाज्ञा என்றபடி ஏற்படுமென்பதையே ஸ்ரீதேசிகனும், ஸாராஸ்வாதினீகாரரும் விசேஷித்துக் காட்டினார்களென்று அறியவும்.

व्यवसायात्मिका என்ற கீதா ச்லோக தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீதேசிகன

सिद्धं च नित्यकाम्य ज्योतिष्टोमादिष्वपि विनियोग पृथक्त्व-मितिभावः ।

என்ற வாக்யத்தால் ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு நித்யத்வம் உண்டென்பதை நிச்சயித்தார். அடுத்த வரியிலும்:—

यथा नित्यकाम्य ज्योतिष्टोमादौ

என்ற வாக்யத்திலும் ஜ்யோதிஷ்டோமம் நித்யமென்பதைக் காட்டினார். ஆதலால் आज्ञानुज्ञाविभागेन என்ற காரிகையில் ஆக்ஞா பதத்தால் நித்ய ஜ்யோதிஷ்டோமத்திற்கும் க்ரஹணம் உண்டென்பதும், அகரணே பகவந்நிக்ரஹ ரூபப்ரத்யவாயமுண்டென்று ஸ்ரீதேசிகன் திருவுள்ளமென்பதும் மறுக்கமுடியாததாகிறது.

### அகரணே ருண தோஷாதிகள்.
### ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம்.

பிர்ம்ஹஸூத்ரத்தில் புருஷார்த்தாதிகரணாதிகளில் யக்ஞாக்நிஹோத்ராதி விஷயமாகச் செய்யப்பட்டுள்ள சர்ச்சைகளும் அங்கு ஸ்ரீபாஷ்யகாரர் கூறியுள்ள விஷயங்களும். இங்கு அவச்யம் நிரூபிக்கப்படவேண்டியவைகள்.

புருஷார்த்தாதிகரணத்தில், ஸன்யாஸ ஆச்ரமம் உண்டா, இல்லையா என்ற சர்ச்சை ஏற்பட்டது. க்ருஹஸ்தனுக்கு.

யாவஜ்ஜீவம் அதாவது உயிருள்ளவரை அக்நிஹோத்ரம் நித்ய மென்று யாவஜ்ஜீவ சுருதி விதிக்கிறது. மேலும், जायमानो वै ब्राह्मणः त्रिभिर्ऋणवा जायते என்கிற சுருதியானது ஜ்யோதிஷ்டோமாதி யக்ஞங்களைச் செய்யாவிட்டால் ருணதோஷம் ஏற்படுவதாகப் ப்ரத்யவாயத்தை சொல்லுவதாலும்,

वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते

என்கிற மற்றொரு சுருதியானது அக்நிஹோத்ராதிகளை பரித்யாகம் செய்தால், வீரஹத்யா தோஷம் ஏற்படுமென்று கூறுவதாலும் கிருஹஸ்தன் யக்ஞாக்நிஹோத்ராதிநித்யங்களை விட்டு விட்டு, ஸன்யாஸத்திற்குப் போகக்கூடாது என்று ஜைமினி மஹர்ஷி ஆக்ஷேபித்தார். ஸன்யாஸ ஆச்ரமமே சுருதியில் விதிக்கப்படவில்லையாகையால் அந்த ஆச்ரமமே கிடையாதென்றும் வாதித்தார். இது परामर्शं जैमिनिरचोदनाच्चापवदति हि இத்யாதி ஸூத்ரங்களில் ஸ்பஷ்டம்.

### ருணதோஷம். ஸ்ரீபாஷ்யகாரர் வாக்யம்

ஆயினும் பிரம்ஹஸூத்ரகாரர் ஸித்தாந்தம் கூறுகையில் ஸந்யாஸ ஆச்ரமத்தை சுருதியே விதிப்பதாயும், பிரபலமான வைராக்யம் ஏற்பட்டு ஒருவன் ஸ்ந்யாஸ ஆச்ரமத்திக்குப் போக விரும்பினால் யாவஜ்ஜீவம அக்நிஹோத்ர விதியும், வீரஹத்யா தோஷமும், ருண தோஷமும் வசன பலத்தால் அவனுக்கு ஏற்படுவதில்லையென்றும் ஸன்யாஸத்திற்குப் போகாத கிரஹஸ்தனையே மேற்படி தோஷங்கள் கட்டுப்படுத்துமென்றும் ஸித்தாந்தம் செய்தார். அங்குள்ள विधिर्वा धारणवत् இத்யாதி ஸூத்ரங்களிலும் ஸ்ரீபாஷ்ய சுருத பிரகாசிகாதிகளிலும் இது ஸ்பஷ்டம்.

இந்த ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் ஸித்தாந்தம் கூறுகையில்

एवं आश्रमान्तरविधानात्, ऋणश्रुतिः यावज्जीवश्रुतिः, अपवादश्रुतिश्च अविरक्त विषया एवेति वेदितव्याः ॥

என்பதால் மிகுந்த வைராக்யம் காரணமாக ஒருவன் ஸன்யாஸ ஆச்ரமத்திற்குப் போக விரும்பினால், அவன் போகலாமென்றும்

அவனை யாவஜ்ஜீவ அக்நிஹோத்ர விதியோ, ருணதோஷமோ வீரஹத்யா தோஷமோ பாதிக்காதென்றும், ருண தோஷமும் வீரஹத்யா தோஷமும், யாவஜ்ஜீவ சுருதியும் வைராக்யமற்ற வனை, அதாவது ஸன்யாஸத்திற்குப் போகாத கிரஹஸ்தனைக் கட்டுப்படுத்துமென்றும் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்பஷ்டமாகச் சொன்னார். இங்கு ऋणश्रुतिः என்பதற்கு சுருதப்ரகாசிகையில் त्रिभिर्ऋणवा जायते इति श्रुतिः என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. மனுஸ்மிருதியும் இந்த சுருதி விஹிதமான ருண தோஷத்தையே உபபாதக தோஷம் என்று கூறுகிறது. இதிலிருந்து வைராக்யம் காரணமாக ஸன்யாஸத்திற்குப் போகாத கிருஹஸ்தர்கள் எல்லோரும் யக்ஞாநுஷ்டானம் அவச்யம் செய்ய வேணுமென்றும் இல்லாவிட்டால் ருணதோஷம் ஏற்படுமென்றும் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்பஷ்டமாகக் கூறுவது விளங்கும். அவிரக்தனுக்கு யாவஜ்ஜீவ சுருதி நிர்ப்பந்தம் உண்டென்றும், அக்நிஹோத்ராதிகளை அவன் அவச்யம் அநுஷ்டிக்கவேண்டியதென்பதும் ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளமாயிருப்பதும் ஸ்பஷ்டம். இந்த புருஷார்த்தாதிகரண சர்ச்சையும் ஸித்தாந்தமும் முக்யமாக கவனிக்கப்படவேண்டியவை.

### அக்நிஹோத்ராதி அதிகரணத்திலும்

அக்நிஹோத்ராதி அதிகரணத்திலும் அக்நிஹோத்ராதிகள் நித்ய கர்மாக்களென்பதும், வர்ணாச்ரம தர்மங்களென்பதும் ஸ்பஷ்டமாகக் கூறப்படுகின்றன.

ஸுக்ருதபல அச்லேஷம் சொல்லப்பட்ட காரணத்தால் அக்நிஹோத்ராதி ஸுக்ருத பலங்களை இச்சியாதவர்கள் அவைகளை அநுஷ்டிக்க வேண்டியதில்லையென்று

अग्निहोत्रादीनां नित्यनैमित्तिकानां वर्णाश्रमधर्माणामपि सुकृतत्व सामान्येन तत्फलस्याश्लेषात् अनिच्छतः अननुष्ठाने प्राप्ते—

என்பதால் பூர்வ பக்ஷம் செய்துகொண்டு,

आग्निहोत्राद्याश्रमधर्माः फलाश्लेषासंभवात् अनुष्ठेया एव

என்பதால் அக்நிஹோத்ராதி ஆச்ரம தர்மங்கள் அநுஷ்டேயங்களே என்று கூறியிருப்பதைக்காணவும்.

ஸ்ரீதேசிகன், தத்வமுக்தாகலாபம், ஸர்வார்த்தஸித்தி ஆகிய கிரந்தங்களிலும் ஜ்யோதிஷ்டோம அக்நிஹோத்ராதிகளுக்கு விநியோக ப்ருதக்த்வத்தால், நித்யத்வம், காம்யத்வம் என்ற இரண்டு ஸ்வரூபமுமுண்டென்று

यन्नित्यं तन्नकाम्यं (ஜீவஸரம் 38)

என்ற சுலோகத்தில் சொல்லி, ப்ர்ம்ஹ நிஷ்டனுக்கு ப்ர்ம்ஹ வித்யாங்கமான அநித்ய அக்நிஹோத்ரத்தாலேயே, நித்யாக்நி ஹோத்ரமும் தந்த்ரேண ஸித்திக்கிறதென்கிற ஸித்தாந்தத்தையும் கூறியிருக்கிறார். அங்கு ஸர்வார்த்த ஸித்தியில் ஸ்ரீதேசிகன்

ज्योतिष्टोमाग्निहोत्रादौ विनियोग पृथक्त्वतः ।
नित्यकाम्य स्वरूपत्वं दृष्टं तद्वदिहास्तु नः ॥

என்கிற காரிகையால் ஜ்யோதிஷ்டோமாக்நிஹோத்ராதிகளுக்கு நித்யத்வம், காம்யத்வம் என்ற இரண்டு ஆகாரமுமுண்டென்று கண்டோக்தியாகச் சொல்லியுள்ளார். மேலும் அங்கு

एवं त्रिरूपत्वमपि क्वचित् ग्राह्यं

என்ற வாக்யத்தால் ஜ்யோதிஷ்டோமாதிகளுக்குக் கீழே நிரூபித்தபடி மூன்று ஸ்வரூபமுண்டென்பதையும் எடுத்துக்காட்டினார்.

### யக்ஞாதிகள் நித்யங்கள். கீதா பாஷ்ய-தாத்பர்ய சந்திரிகா வாக்யங்கள்

இனி, கீதாபாஷ்ய, தாத்பர்ய சந்திரிகாதிகளிலும் ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீதேசிகாதிகள் யக்ஞாக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்பதைப் பலவிடங்களில் சொல்லியிருப்பதை நிரூபிப்போம்.

கீதை 18வது அத்யாயத்தில்

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुः मनीषिणः ।
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥

என்கிற சுலோகத்திறைல் முமுக்ஷுக்கள் யக்ஞாதிகர்மாக்களைச் செய்யவேண்டியதில்லையென்று காபிலாதிமதஸ்தர் சிலர் சொல்லுவதாயும், வேறு சிலர் யக்ஞாதிகளை விடக்கூடாதென்று கூறுவதாயும் இரண்டு கக்ஷி அபிப்பிராயங்களையும் வெளியிட்டார். பசுஹிம்ஸாதி தோஷமிருப்பதால் யக்ஞம் கூடாதென்று காபிலர் சொல்லுவதாக ஸ்ரீபூ ..சிகன் தாத்பர்யசந்திரிகையில் விவரித்தார்.

ஆதலால் பகவான் அடுத்த சுலோகங்களால் தனது ஸித்தாந்தத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறார்.

यज्ञ दान तपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।

என்பதால் யக்ஞாதிகளைவிடக் கூடாதென்றும் செய்யவேண்டியதுதானென்றும் சொல்லி ஸ்திரப்படுத்துகிறார். மேலும், यज्ञोदानं तपश्चैति पावनानि मनीषिणां என்பதாலும் एतान्यपितु कर्माणि என்பதாலும் வெகு உறுதியாக பகவான் தமது ஸித்தாந்தத்தை வெளியிட்டிருக்கிறார்.

இந்த பிரகரணத்தில் பகவான் निश्चयं शृणु मे என்றும் निश्चितं मत मुत्तमं என்றும் ஆரம்பத்திலும் முடிவிலும், நிஸ்சய பதத்தைப் போட்டுப்பேசுவதும், मे उत्तमं मतं என்ற பதங்களால் யக்ஞாதிகளைச் செய்யவேண்டியதென்பது தமது நிஸ்சயமான உத்தமமான மதமென்றும் அழுத்தமாகக் கூறுவதும் முக்யமாகும். மேலும் न त्याज्यं, कार्यमेव என்ற பதங்களால் யக்ஞாதிகளை விடக்கூடாது, செய்தே தீரவேணும் என்று நிர்பந்த தோரணையில் வற்புறுத்திச் சொல்வதும்விசேஷமாகக் கவனிக்கத்தக்கது.

இங்கு கீதாபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர்—

यज्ञदान तपः प्रभृति वैदिकं कर्म मुमुक्षुणा न कदाचिदपि त्याज्यम् । अपि तु आप्रयाणात् अहरहः अनुष्ठेयमेव ॥

என்ற வாக்யங்களால் முமுக்ஷுவானவன் யக்ஞாதி வைதிக கர்மாக்களை ஒருக்காலும் விடக்கூடாதென்றும் யாவஜ்ஜீவம் செய்ய வேண்டியதுதானென்றும் தெளிவாகக் கூறியுள்ளார். இங்கு கீதையில் உள்ள யக்ஞ, தானதபஸ் சப்தங்களால் तमेतं वेदानुवचनेन

என்ற சுருதியை மூலமாகக் கொண்ட ஸர்வாபேக்ஷாதிகரணாதி ஸித்தாந்தங்கள் சொல்லப்படுகின்றனவென்பது வ்யக்தமாகும். இந்த கீதா ப்ரகரண ஸித்தாந்தமும் ஸர்வாபேக்ஷாதிகரணாதி ஸித்தாந்தமும் ஒன்றுதான் என்பது ஸ்ரீபாஷ்யகாரரும் ஸர்வாபேக்ஷாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில்

''तदिदमाह भगवान् स्वयमेव-
यज्ञ दान तपः कर्म न त्यज्यं + मनीषिणाम् । इति''

என்ற வாக்யத்தினால் இந்த கீதா சுலோகத்தையே பிரமாணமாக எடுத்துக் காட்டியிருப்பதால் விளங்கும். இந்த கீதாப்ரகரணம் பிரம்ஹவித்யாங்கமான யக்ஞாதிகளை விதிப்பதாக இருந்தாலும், ஸர்வாபேக்ஷாதிகரண சேஷமான விஹிதத்வாதிகரண ஸித்தாந்தமும், நித்யாநித்ய ஸம்யோக விரோத பரிஹாராதி விஷயங்களும் பரஸ்பரம் கலந்திருப்பதால் கேவலாச்ரமிகளுக்கும் யக்ஞாதிகள் நித்யங்களென்ற விஷயமும் பகவானின் திருவுள்ளமென்பது நிச்சயமாகத் தடையில்லை.

ஜ்யோதிஷ்டோமாதி நித்யங்களைக்
காலநியமமின்றி அநுஷ்டிக்கலாம்.
ஸ்ரீதேசிகன் திருவுள்ளம்

கீதை 17-வது அத்யாயத்தில்

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपः क्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥

என்ற சுலோகத்தில், பிரம்ஹநிஷ்டர்கள் செய்யும் யாகாதிகளில் எல்லாக் கார்யங்களும் பிரணவபூர்வகமாகவே செய்யப்படவேண்டுமென்று பகவான் சொல்லியிருப்பதைப் கீதா தாத்பர்யசந்திரிகையில் ஸ்ரீதேசிகன் விவரணம் செய்கையில் கூறுவதாவது:—

यद्यपि ''वसन्ते वसन्ते ज्योतिषा यजेत'' ''शरदि वाजपेयेन यजेत'' इत्यादिभिः कालविशेषनियताः क्रियाः विधीयन्ते, तथापि सर्वासां क्रियाणां प्रणवपूर्वकत्वे तु न कालविशेषनियमः इति 'सतत' शब्द तात्पर्यमित्यभिप्रायेण आह सततेति

பிரம்ஹவாதிகள் அநுஷ்டிக்கும் ஜ்யோதிஷ்டோம, வாஜபேயாதி

யாகங்களில் எல்லாக் கார்யங்களும் பிரணவ பூர்வமாகச் செய்யப் பட்டால், அந்த யாகங்களுக்காக விதிக்கப்பட்ட வஸந்தம், சரத் முதலிய முக்ய காலங்கள்கூட ஆவச்யகமில்லையென்றும், எல்லாக் காலத்திலும் அந்த யாகங்களைச் செய்யலாமென்றும் பகவானின் அபிப்பிராயமென்று மேற்கண்ட சுலோகத்தினால் தெரிவதாக ஸ்ரீதேசிகன் மேற்படி வாக்யங்களால் சொல்லுகிறார். இந்த வாக்யத்திலிருந்து ஸ்ரீதேசிகன் பிர்ம்ஹவாதிகளெனப்படுகிற முமுக்ஷுக்களுக்கும் ஜ்யோதிஷ்டோம, வாஜபேயாதி யாகங்களை அநுஷ்டேயங்களாகத் திருவுள்ளம் பற்றியிருப்பது முக்ய விஷயம். மேற்படி தாதபர்ய சந்திரிகையிலேயே அடுத்த வரியில் ஸ்ரீதேசிகன்,

स्वर्ग साधनत्वेन अनुष्ठाने, अपवर्ग साधनत्वेन
अनुष्ठानेच प्रणवान्वयः साधारण इति भावः ।

என்பதால் ஜ்யோதிஷ்டோம, வாஜபேயாதி யாகங்களை ஸ்வர்க் கார்த்தமாக காம்யமாக ஒருவன் அநுஷ்டித்தாலும், அவை களையே ஒருவன் நித்யமாக மோக்ஷார்த்தமாக அநுஷ்டித்தாலும் இரண்டிலும் பிரணவ ஸம்பந்தம் ஆவச்யகமென்று ஸாதிப்பதி ப்பதிலிருந்து ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு, நித்யத்வம் காம்யத் வம் என்ற இரண்டு ஆகாரங்களும் உண்டென்று காட்டியுள்ளார்.

### யக்ஞாதிகள் கேவலகாம்யங்களல்ல.

இவ்வாறு பிர்ம்ஹவித்யாநிஷ்டன், ப்ரபன்னன், கேவல கிரஹஸ்தாச்ரமி ஆகிய ஸகல அதிகாரிகளுக்கும், அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸ ஜ்யோதிஷ்டோமாதிகளான சிரௌதகர்மங்கள் ஆச்ரம தர்மமுறையில் அவச்யானுஷ்டேயங்களென்று ஸ்ரீ பாஷ்யகார, ஸ்ரீதேசிகாதி ஸித்தாந்தமிருக்கையில், அக்நிஹோத் ராதிகள் கேவலகாம்யங்களென்றும், ஸ்வர்க்காதி அல்ப பலனைக் கொடுப்பவையென்றும், பிரபந்நாதிகளுக்கு அவை அநுஷ்டே யங்களல்லவென்றும் சிலர் ப்ரமித்துப் பேசுவதற்கும் ஸமா தானம் கூறப்பட்டதாயிற்று. நமது ஆசாரியர்கள் கண்டோக்தி யாக அக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று பலவிடங்களில் கூறியிருப்பதை நாம் காட்டிய பிறகும் இந்த பிரமம் நிலைத்திருக்க நியாயமில்லை. 'முக்யமாக விநியோக ப்ருதக்த்வ நிரூபண மூல

மாக நம் ஆசாரியர்கள் அக்நிஹோத்ராதிகளுக்கு நித்யத்வம், காம்யத்வம், பிரம்ஹ வித்யாங்கத்வம் என்று மூன்று ஆகாரங்களு முண்டென்பதை ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீதேசிகாதிகள் ஸ்பஷ்டமாக நிர்ணயித்திருப்பதை அறிந்த சாஸ்திரக்ஞர் எவரும் கேவல காம்யமென்ற அக்ஞவாதத்தைச் சொல்லவும், அங்கீகரிக்கவும் மாட்டார்கள்.

## கீதையில் காம்ய யஜ்ஞ நிந்தை. ஆசார்யர்களின் நிர்ணயம்.

ஆகையால் கீதையில் त्रैविद्या मां सोमपा धूतपापाः என்கிற சுலோகத்தில் பகவான் கூறுவது கேவல காம்யபலமான ஸ்வர்க்கத்தை அபேக்ஷித்து காம்ய ஸோமயாகம் செய்யும் காமிகளைபற்றியதே யல்லது நித்ய ஸோமயாக விஷயமல்லவென்று அறியவேணும். இந்த சுலோக அவதாரிகையில் ஸ்ரீ பாஷ்யகாரர்

अज्ञानां कामकामानां वृत्तमाह ।

என்கிற வாக்யத்தால் இந்த சுலோகம் கேவல காம்ய யாகம் செய்யும் அதிகாரியைப்பற்றியதென்பதை விளக்கியுள்ளார். இந்த சுலோகம் பொதுவாக எல்லா யாகங்களேயும் காம்யமென்று நிந்திப்பதல்லவென அறியவேணும். இதுபோல் கீதையில் 2-வது அத்யாயத்திலும்

यामिमां पुष्पितां वाचम्

என்ற சில சுலோகங்களால் பகவான் கூறுவதும் கேவல காம்ய கர்மாக்களைப்பற்றியதே என்று ஆசார்யர்கள் நிர்ணயித்தார்கள். இங்கும் அவதாரிகையில் ஸ்ரீபாஷ்யகாரர்

अथ काम्यकर्माधिकृतान् निन्दति ।

என்ற வாக்யத்தால் இதை ஸ்பஷ்டமாக்கினார். மேற்படி சுலோகத்தில் वेद वादरताः என்பதற்கும் ஸ்ரீபாஷ்யகாரர் வியாக்யானம் செய்கையில் वेदेषु ये स्वर्ग फलवादाः, तेषुसक्ताः என்பதால் "வேதத்திலுள்ள காம்ய யாகவிதிகளில் ருசியுள்ளவர்கள்" என்று அர்த்தம் கூறி பொதுவாக வேதநிந்தை தோன்றுவதற்கு அவகாசமில்லாமல் செய்தார்.

மேலும்,மேற்படி சுலோகத்தில் क्रियाविशेषबहुलां என்பதற்கும் ஸ்ரீபாஷ்யகாரரும், ஸ்ரீதேசிகனும் வ்யாக்யானம் செய்கையில் வைதிகமார்க்க வ்யவஸ்தையை ஸம்ரக்ஷித்திருப்பது முக்யமாகும். இங்கு ஸ்வர்க்க காமிகள், "கிரியாவிசேஷங்கள் நிறைந்த கர்மாக்களைச் செய்கிறார்க"ளென்று பகவான் கூறிய தோஷமானது ஞானிகள் செய்யும் நித்யஜ்யோதிஷ்டோமாதிகளிலும் இருக்கிறதே என்ற ஆக்ஷேபம் வரவே, இதற்கு ஸமாதானமாக ஸ்ரீ பாஷ்யகாரர் நித்ய யக்ஞம், காம்ய யக்ஞம் இரண்டிலும் கிரியா விசேஷங்கள் ஸமமாயிருந்தபோதிலும், காமிகள் அந்த கிரியா விசேஷங்களை தத்வஞானமில்லாமல் செய்கிறார்கள்,ஞானிகளோ வென்றால் அதே கிரியா விசேஷங்களைத் தத்வஞானத்துடன் செய்கிறார்கள்; இதுதான் வித்யாஸமென்று ஸமாதானம் கூறினார் तत्वज्ञान रहिततया என்ற வாக்யத்தால்.

இந்த வாக்யத்திற்கு ஸ்ரீதேசிகன் தாத்பர்ய சந்திரிகையில் அவதாரிகை கூறுகையில் மேற்கண்ட விஷயத்தை ஸ்பஷ்டமாக்கியிருப்பதைக் காணவும். அங்கு தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகன் வாக்யமாவது :—

ननु ज्योतिष्टोमादि क्रियाविशेष स्वरूपमात्रं कामिनः ज्ञानिनश्च समानम्। तत् कथं "क्रियाविशेषबहुलां" इति कामिनः परं विशिष्य अभिधीयते?
तत्रोक्तं—"तत्वज्ञानरहिततया" इति ॥ என்று.

ஆகையால் கீதையில் மேற்கண்டவிடத்திலும், மற்றவிடத்திலும் எங்கேயாவது கர்மநிந்தை காணப்பட்டால் அது தத்வஞான மில்லாமலும் ஸ்வர்க்காதி க்ஷுத்ர பலாபிஸந்தியுடனும் யாகம் செய்யும் காமிகளான நிக்ருஷ்டாதிகாரிகளைப் பற்றியதென்று நம் ஆசார்யர்களின் நிர்ணயமாகும்.

**முண்டக சுருதியிலும் காம்ய யக்ஞநிந்தையே.**
**ஸ்ரீபாஷ்யகார—ஸ்ரீதேசிக நிர்ணயம்.**

இங்கிருந்து முண்டக சுருதியில் காணப்படும் நிந்தையும் ஸமாதானம் சொல்லப்பட்டதாகிறது. முண்டக சுருதியில்

प्लवाह्येते अदृढाः यज्ञरूपाः—

என்பதால் காம்ய யக்ஞநிந்தை செய்யப்படுவதைக் காட்டிச் சிலர் பொதுவாக யாகங்களைக் கேவலகாம்யமென்று ஸாதிக்க சிரமப் படுவதைப் பார்க்கிறோம் ஆனால் இந்த சுருதியின் உண்மை யான அர்த்தத்தை ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீதேசிகாதி ஆசார்யர்கள் நிர்ணயித்திருப்பதை அறிந்தால் அந்த பிரமம் நீங்கிவிடும்.

யக்ஞங்கள், வலிமையற்ற ஒரு ஓடத்திற்கு ஸமானமென்று இந்த சுருதி நிந்திப்பதானது அல்ப பலனை யுத்தேசித்து செய்யப் படும் காம்யயாக விஷயமென்று ஸ்ரீபாஷ்யகாரர் ஆத்ருச்யத்வாதி குணக அதிகரண பாஷ்யத்தில் வெகு ஸ்பஷ்டமாக கூறியிருக் கிறார். அங்கு

"प्लवाह्येते अदृढाः यज्ञरूपाः" इत्यादिना फलाभिसन्धि पूर्वकत्वेन, ज्ञान विधुरतया च अपरं कर्म कुर्वतां पुनरावृत्तिमुक्त्वा" (பிர் 1—2-5)

என்கிற வாக்யத்தால், தத்வக்ஞானமில்லாமலும், ஸ்வர்க்காதி பலாபிஸந்தியுடனும் செய்யப்படும் காம்ய யாகங்களால் புனரா வ்ருத்தியுண்டு என்று விவரித்து, மேற்படி சுருதி காம்ய யக்ஞ நிந்தா விஷயமென்று வெகு ஸ்பஷ்டமாக நிர்ணயித்தார்.

ஸ்ரீதேசிகனும் व्यवसायात्मिका बुद्धिः என்ற கீதா சுலோக தாத்பர்ய சந்திரிகையில் இந்த சுருதியானது காம்யயக்ஞ விஷய மென்பதைச் சொல்லுகிறார். அஙகு

आत्मतत्वानभिज्ञानां स्वर्गादिफलं प्रतिपादयन्ति "प्लवाह्येते अदृढाः" इत्यादि श्रुतयः ॥

என்ற வாக்யத்தால் ஆத்மதத்வத்தை அறியாமல் ஸ்வர்க்காதி பலனை உத்தேசித்து யக்ஞம் செய்கிறவர்களைப்பற்றியே மேற்படி சுருதி சொல்லுகிறதாகக் காட்டினார்.

இந்த முணடக சுருதிக்கு இவ்வாறு காம்ய யக்ஞ விஷய மாக வ்யவஸ்தை செய்யாவிடில் பூர்வோத்தர விரோதம் ஏற்படு வதையும் ஆசார்யர்கள் கவனித்தே இப்படி வ்யவஸ்தை செய் தார்கள்.

யக்ஞாதிகள் நித்யங்கள். முண்டகசுருதி பிரமாணம்.
ஸ்ரீபாஷ்ய நிர்ணயம்

ஏனெனில் இந்த முண்டக சுருதியின் அத்யாய ஆரம்பத்தில்

मन्त्रेषु कर्माणि कवयो यान्यपश्यन् तानि त्रेतायां बहुधा संततानि तान्याचरथ नियतं सत्यकामाः ॥

என்று சுருதி வாக்யமொன்று காணப்படுகிறது. இந்த சுருதியானது பராசரமாதவீயத்தில், யக்ஞாநுஷ்டானத்திற்கு பிரமாணமாக எடுத்துக் காட்டிருப்பது முதலான விஷயத்தை பூர்வபாகத்தில் விவரித்துள்ளோம். ஸ்ரீபாஷ்யகாரர் அத்ருச்யத்வாதி குணக அதிகரண பாஷ்யத்தில் இந்த சுருதியை வ்யாக்யானம் செய்கையில், கார்ஹபத்ய, ஆஹவநீய, தக்ஷிணாக்நி என்கிற த்ரேதாக்நியில் ஸம்பந்தப்பட்ட கர்மாக்களை, பிரம்ஹ ப்ராப்தி காமர்களான முமுக்ஷுக்கள் நியதமாக ஆசரிக்க வேணுமென்று சொல்லுகிறார். அந்த வாக்யமாவது:—

सार्वज्ञ्य सत्यसंकल्पादि कल्याण गुणाकरं अक्षरं पुरुषं स्वतस्सत्यं कामयमानाः, तत्प्राप्तये फलान्तरेभ्यो विरक्ताः, ऋग्यजुस्सामाथर्वसु कविभिः दृष्टानि वर्णाश्रमोचितानि त्रेताग्निषु बहुधा संततानि कर्माणि आचरथेति ॥

இவ்வாறு ஸ்ரீபாஷ்யகாரர் மேற்படி சுருதிக்கு வ்யாக்யானம் செய்து முமுக்ஷுக்களுக்கும் ச்ரௌதகர்மாக்கள் நியதமாக ஆசரிக்கப்பட வேண்டுமென்பதை நிஷ்கரித்துள்ளார். இங்கு तान्याचरत नियतं என்பதால் அக்நிஹோத்ராதிகள் நியதமாக (நித்யமாக) ஆசரிக்கப்படவேண்டுமென்று சுருதி கூறுவதுடன், सत्यकामाः என்பதில் ஸத்யபதத்திற்கு பரப்ரம்ஹம் என்று ஸ்ரீபாஷ்யகாரர் விவரணம் செய்திருப்பதும் முமுக்ஷுக்களுக்கும் அக்நி ஹோத்ராதிகள் நித்யமென்பதை ஸ்திரப்படுத்துகிறது. இப்படிச் சொன்ன சுருதியே அடுத்த வாக்யத்தில் இதற்கு விரோதமாக प्लवाह्येते என்பதால் அந்த யக்ஞங்களையே நிந்திப்பதாக அர்த்தம் செய்வது ஸமஞ்ஜஸமாகுமா? ஆதலால்தான் ஸ்ரீ பாஷ்யகாரரும், ஸ்ரீதேசிகனும் இந்த சுருதி காம்ய யக்ஞத்தை நிந்திப்பதாக வ்யவஸ்தை செய்தார்கள்.

## முண்டக சுருதியில் மற்றொரு பிரமாணம்.

மேலும் இந்த முண்டக சுருதியிலேயே

यस्याग्निहोत्रमदर्शपूर्णमासमनाग्रयणं....

என்ற மற்றொரு வாக்யமானது அக்நிஹோத்ரியாயிருப்பவன் தர்சபூர்ணமாஸ ஆக்ரயணாதி கர்மாக்களைச் செய்யாவிட்டால் ப்ரத்யவாயத்தைச் சொல்லுகிறது. அங்கு ஸ்ரீபாஷ்ய காரரும் இப்படியே அர்த்தம் செய்தார். இப்படி அகரணே தோஷத்தைக் கூறிய சுருதியே அடுத்த வாக்யத்தில் அந்த கர்மாக்களையே நிந்திப்பதாக அர்த்தம் செய்வதும் அஸங்கத மாகும். ஆகையால் प्लवाह्येते என்பது பொதுவாக யாகநிந்தை செய்கிறதாகச் சிலர் பிரமிப்பது ஆசார்ய அபிப்ராயத்தை அறியாததாலேயே.

முக்யமாக இங்கு मन्त्रेषु कर्माणि । यस्याग्निहोत्रं ஆகிய சுருதிகளு க்கு ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்பஷ்டமாக வ்யாக்யானம் செய்வதன் மூலம் முமுக்ஷுக்களுக்குக் கூட ச்ரௌத யக்ஞாதிகள் நியதமாக ஆச ரிக்கப்படவேண்டியவையென்று நிர்ணயித்திருப்பது கவனிக்கத் தக்கது.

## முமுக்ஷுக்களுக்கு பலாபிஸந்தியில்லாமல் நித்ய யாகாதி அனுஷ்டானம்.

### கீதா, பாஷ்ய தாத்பர்ய சந்திரிகாதி வாக்யங்கள்.

பக்த ப்ரபன்னாதி முமுக்ஷுக்களுக்கும், வர்ணாச்ரமதர்மங் களான நித்ய, நைமித்திக யக்ஞாதி கர்மாக்கள் அவசயானுஷ்டே யங்களென்பதை ஆசார்யர்கள் ஸந்தேஹத்திற்கு இடமின்றி ஆங்காங்கு நிர்ணயித்துள்ளார்கள். ஆயினும், அந்த கர்மாக் களில் பிரதான பலமோ, அவாந்தர பலமோ ஏதாவதிருந்தால் அவைகளை அபேக்ஷியாமல், அதாவது பலாபிஸந்தியின்றி; அந்த கர்மாக்களால் ஆராத்யனாயிருப்பவன் ஸாக்ஷாத் பரம புருஷன் தானென்றும், மற்ற தேவதைகள் அங்கங்கள் தானென் றும், தத்வஞானம்பெற்று பகவத்பர்யந்தமாக அநுஸந்தித்து கர் மாக்களைச் செய்யவேண்டுமென்பதுதான் கீதாதி சாஸ்திரங்

களுடையவும் ஆசார்யர்களுடையவும் அபிப்ராயமேயல்லது கர்மாவே வேண்டாமென்பதல்ல. இந்த விஷயத்தைச் சிறிது நிரூபிப்பது பிரக்ருதத்தில் ஆவச்யகமாகிறது. व्यवसायात्मिका बुद्धिः என்ற கீதா சுலோக பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர்

"एतदुक्तं भवति। नित्येषु नैमित्तिकेषु च कर्मसु प्रधान-फलानि अवान्तर फलानिच यानि श्रूयमाणानि, तानि सर्वाणि परित्यज्य, मोक्षैकफलतया सर्वाणि कर्माणि एकशास्त्रतय अनुष्ठेयानि ॥" என்று சொல்லுகிறார்.

இந்த வாக்யத்தில், "நித்ய, நைமித்திக கர்மாக்களில் சொல்லப் பட்டுள்ள பிரதான பலன், அவாந்தர பலன் ஆகியவற்றை த்ய ஜித்துவிட்டு மோக்ஷமொன்றையே முக்யமாக நினைத்து எல்லா கர்மாக்களையும் செய்யவேணும்" என்பதால் முமுக்ஷுவுக்கும் பலாபிஸந்தியில்லாமல் ஸகல நித்ய நைமித்திக கர்மாக்களும் அநுஷ்டேயங்களென்பதை ஸ்ரீ பாஷ்யகாரர் நியமித்தார்.

यान्ति देवव्रता देवान् என்கிற கீதா ச்லோக பாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் கூறுவதாவது:—

अहो! महदिदं वैचित्र्यं! यत् एकस्मिन्नेव कर्मणि वर्तमानाः, संकल्पमात्र भेदेन केचित् अत्यल्पफलभागिनः च्यवन धर्माणश्च भवन्ति। केचन अनवधिकातिशयानन्दपरमपुरुषप्राप्ति-रूपफलभागिनः अपुनरावृत्तिनश्च भवन्ति॥

இந்த அவதாரிகா வாக்யத்தில், "ஜ்யோதிஷ்டோமாதி கர்மா ஒரே ரூபமாயிருந்தபோதிலும் அநுஷ்டிப்பவனுடைய ஸங்கல்ப மாத்ர பேதத்தால் சிலர் அல்ப பலனைக் கோரி அடைந்து புனரா விருத்தியை அடைகிறார்கள். வேறு சிலரோவென்றால் அந்த ஜ்யோதிஷ்டோமாதிகளாலேயே, பரம புருஷப்ராப்தி ரூபபலனை அடைந்து புனராவ்ருத்தியற்றவர்களாக ஆகிறார்கள்" என்று சொல்லுகிறார்.

அதாவது ஒருவன் ஸ்வர்க்க பலன் வேண்டுமென்கிற ஸங்கல்பத்தால் ஜ்யோதிஷ்டோமாதிகளைச் செய்தால் அவனுக்கு அந்த அல்ப பலனும், புனராவ்ருத்தியும் கிடைக்கும். அந்த ஜ்யோதிஷ்டோமாதிகளையே பகவத் ப்ரீதியைக் கருதி பலாபிஸந்தியில்லாமல் ஒருவன் ஸங்கல்பித்துச் செய்தால் அவனுக்கு பகவத் ப்ராப்தியும் அபுனராவ்ருத்தியும் ஸித்திக்கின்றன என்று ஸ்ரீபாஷ்யகாரர் கூறுகிறார்.

இந்த கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீதேசிகன் இந்த விஷயத்தை ஸங்கிரஹித்துக் கூறுகிறார்—

संकल्पमात्र भेदात् विचित्रफल साधनत्वं ज्योतिष्टोमादिष्वपि दृष्टम् ॥ என்று

"ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு, அந்தந்த யஜமானனுடைய ஸங்கல்பத்தை அதாவது அபேக்ஷையை அநுஸரித்து அந்தந்த பலனைக் கொடுக்கும் சக்தி காணப்படுகிறது" என்று பாஷ்ய வாக்யத்தைப் போஷித்து ஸ்ரீதேசிகன் விவரணம் செய்திருப்பது முக்யமாகும். இங்கும் நம் ஆசார்யர்கள் முமுக்ஷு முதலிய உத்தமாதிகாரிகளுக்கும் பகவத் ஸமாராதன ரூபமாக ஜ்யோதிஷ்டோமாதிகள் அநுஷ்டேயங்களென்பதை நிஷ்கர்ஷித்தார்கள்.

### பகவானையே உத்தேசித்து யக்ஞாதிகள் செய்தால் பகவத் ப்ராப்தியேதான் பலன்.

மேலும், यान्ति देवव्रता देवान् என்கிற சுலோகத்தில் பகவான் यान्ति मद्याजिनोऽपि मां என்று சொல்லுவதும் ப்ரக்ருதத்தில் முக்ய மாகும்.

தர்சபூர்ணமாஸாதி கர்மாக்களுக்கு, தேவ, பித்ரு, பூதாதி தேவர்களே உத்தேச்யர்களென்ற அபிஸந்தியுடன் அவைகளை அநுஷ்டிப்பவர்கள் அந்தந்த தேவர்களை அடைகிறார்களென்று பகவான் சொல்லிவிட்டு, "எவர்கள் அந்த தர்சபூர்ணமாஸாதி கர்மாக்களாலேயே என்னையே உத்தேச்யமாக நினைத்து யஜிக்கிறார்களோ அவர்கள் என்னையே அடைகிறார்கள்" என்று பகவான் கூறுகிறார். இங்கு கீதாபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் இதைத்

தெளிவாக்கியுள்ளார். அதாவது:—

ये तु तैरेव यज्ञैः (दर्शपूर्णमासादिभिः) देव पितृ शरीरकं भगवन्तं वासुदेवं यजामहे इति मां यजन्ते, ते मद्याजिनः मामेव यान्ति । मद्याजिनः मां अनादि निधनं सर्वज्ञं अनवधिकातिशयानन्दं प्राप्य पुनर्नावर्तन्ते इत्यर्थः ॥ என்று.

இங்கு, கீதாசார்யனும், ஸ்ரீபாஷ்யகாரரும், தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதி கர்மாக்களை, கேவல அக்நீந்திராதி தேவர்களையே உத்தேச்யமாக நினைத்துச் செய்யாமல், இந்திராதி சரீரகனான பரமாத்மாவே ஸர்வ கர்ம ஸமாராத்யன் என்கிற தத்வஞானத்துடன் பகவத் பர்யந்தமாக அநுஸந்தித்துச் செய்யவேணுமென்று சிக்ஷித்ததுடன், அப்படியநுஷ்டிப்பவர்கள், புனராவிருத்தியற்று பரமபுருஷனான பகவானையே அடைகிறார்களென்றும் கூறி உத்க்ருஷ்டாதிகாரிகளும் ச்ரௌத கர்மாநுஷ்டானம் செய்யவேண்டியமுறையை நிஷ்கர்ஷித்தார்கள்.

**யாகங்களுக்கு இந்திராதி சரீரக பரமாத்மாவே உத்தேஸ்யன்**

மேலும், येत्वन्यदेवता भक्ताः என்ற கீதா ச்லோகபாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் இந்த தத்வத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறார். வேதாந்த வாக்யங்கள், பரம புருஷனின் சரீர ஸ்தானங்களாயுள்ள இந்திராதி தேவதைகளை உத்தேசித்துக் கர்மாக்களை விதிக்கையில், அந்த கர்மாக்களால் ஸாக்ஷாத்தாக ஆராத்யன் பரமபுருஷனான பகவான்தான் என்பதை அந்த வாக்யங்களே சொல்லுகின்றன. இதை ஸ்ரீபாஷ்யகாரர் மேற்படி சுலோக பாஷ்யத்தில் சொல்லுகிறார்—

वेदांत वाक्य जातं हि परमपुरुष शरीरतयावास्थितानां इन्द्रादीनां आराध्यत्वं विदधत्, आत्मभूतस्य परमपुरुषस्यैव साक्षात् आराध्यत्वं विदधाति । என்று

இதற்கு பிரமாணமாக ஸ்ரீபாஷ்யகாரர் चतुर्होतारो' यत्र संपदं गच्छन्ति देवैः என்ற சுருதியை எடுத்துக் காட்டியுள்ளார்.

சதுர்ஹோதா என்று சொல்லப்படும் அக்நிஹோத்ர, தர்சபூர்ண மாஸாதி கர்மாக்கள், இந்திராதி தேவர்கள் மூலமாக, பரமாத்மா வாய் அந்தர்யாமியான ஸாக்ஷாத் பகவானிடமே போய்ச்சேருகின்றனவென்று இந்தச் சுருதியின் அர்த்தத்தை ஸ்ரீபாஷ்யகாரர் விவரணம் செய்துவிட்டு, चतुर्होतारः என்பதால் अग्निहोत्र दर्शपूर्ण-मासादीनि कर्माणि என்று ஸ்பஷ்டமாக அர்த்தம் செய்திருப்பதையும் காணலாம்.

स एतांश्चतुर्होतॄन् आत्मस्परणानपश्यत्

என்ற சுருதியிலுள்ள சதுர்ஹோத்ருபதத்திற்கு, அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸ, பசுபந்த ஜ்யோதிஷ்டோமம் என்கிற நான்கு கர்மாக்களென்று அர்த்தம் செய்யப்பட்டிருப்பதையே ஸ்ரீபாஷ்ய காரரும் இங்கு ஸ்திரப்படுத்தியுள்ளார்.

ஆகவே இந்த கீதாபாஷ்ய வாக்யங்களால் ஸ்ரீபாஷ்யகாரர் குறிப்பாக அக்நிஹோத்ராதி ஸ்ரௌதகர்மாக்களையே லக்ஷ்யமாக எடுத்து அவைகளுக்கு இந்திராதி சரீரகனான பரமாத்மா அந்தர் யாமியே ஸாக்ஷாத் ஆராத்யன், உத்தேச்யன் என்பதையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

ஆகையால்தான் கீதையில் பகவான், பிரம்ஹநிஷ்டர்கள் செய்யும் யக்ஞாதிகர்மாக்களில், அக்நி, ஹவிஸ், ஸ்ருக், ஸ்ருவம் முதலிய யக்ஞபாத்ரங்கள் ஆகிய எல்லாம் பிரம்ஹாத்மகங்களென்றும், இந்த மாதிரி தத்வக்ஞானம்பெற்று கர்மானுஷ்டானம் செய்யும் முமுக்ஷுவானவன் "பிரம்ஹகர்மஸமாதி" எனப்படுவதாயும், அவன் அந்த கர்மாவால் பிரம்ஹத்தையே அடைகிறானென்றும்,

ब्रह्मार्पणं ब्रह्महविः ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥

என்பதால் சொல்லியிருப்பது பிரக்ருதத்தில் முக்யம். இங்கு கீதா பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர், सर्वं कर्म ब्रह्मात्मकतया ब्रह्ममय-मिति यः समाधत्ते, सः ब्रह्मकर्म समाधिः । तेन ब्रह्मकर्मसमाधिना ब्रह्मैव गन्तव्यम् ॥ என்பதால் மேற்கண்ட அர்த்தத்தை விவரித்துவிட்டு,

मुमुक्षुणा क्रियमाणं कर्म परब्रह्मात्मकमेवेति अनुसन्धान युक्ततया ज्ञानाकारम् ।
என்பதால் முமுக்ஷுக்கள் செய்யும் கர்மாவானது பரப்ரம்ஹாத்மகமென்று அனுஸந்திக்கும்படி கூறினார்.

மேலும் இங்கு பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் अर्पणं (அர்ப்பணம்) என்பதற்கு விவரணம் கூறுகையில் अर्प्यते अनेनेति-अर्पणम्, स्रुगादि என்பதால் ஸ்ருக், ஸ்ருவம் முதலிய யாக பாத்ரங்களையே லக்ஷ்யமாகக் குறிப்பிடுவதும் முக்யம்.

ஸ்ரீதேசிகனும் இங்கு தாத்பர்ய சந்திரிகையில்:—
सर्वस्य नित्यनैमित्तिकादि रूपस्य सपरिकरस्य स्रुक्, स्रुव, हविरादि विशिष्टस्येत्यर्थः ।
என்ற வாக்யத்தால், ஸ்ருக், ஸ்ருவாதி நிர்த்தேசமூலமாக ச்ரௌதயக்ஞாதி கர்மாவையே உதாஹரணமாகக் குறிப்பிட்டுள்ளதும் கவனிக்கத்தக்கது. கர்மயோகநிஷ்டனுக்குச் சொன்ன இந்த அபிஸந்தி முமுக்ஷுக்கள் யாவருக்கும் பொதுவானதே.

ஆகையால் பிரம்ஹநிஷ்டர்களான உத்க்ருஷ்டாதிகாரிகளுக்கும் நித்ய, நைமித்திக ஸகல வர்ணாச்ரம கர்மானுஷ்டானமும், ஆவச்யகமென்பதே கீதையும், ஆசார்யர்களும் ஸந்தேஹமின்றிச் செய்துள்ள ஸித்தாந்தம். ஆனால் அந்த வர்ணாச்ரம கர்மாக்களை பிரம்ஹநிஷ்டன் பல ஸங்கத்யாக புரஸ்ஸரமாக தத்வஞானத்துடன் பரம புருஷாராதனரூபமாக அநுஸந்தித்துச் செய்யவேண்டுமென்பதே கீதாசார்யனும் ஆசார்யர்களும சிக்ஷித்துக் கொடுத்த வழியென்பதை இதுவரை நிரூபித்தோம்.

பிரம்ஹநிஷ்டனுக்கு வர்ணாச்ரம தர்மானுஷ்டானம் வேண்டியதில்லையென்பது வைதிகமத ஸித்தாந்த விருத்தமானதே. அவர்களுக்கு கர்மாநுஷ்டானம் வேண்டியதில்லையென்பது மோக்ஷ விரோதியான காம்யகர்மாநுஷ்டானம் வேண்டியதில்லையென்பதையே குறிக்கிறதேயல்லது நித்யமான ஆச்ரம தர்மமான கர்மாவைத்தடுப்பதில்லை. இந்த விஷயத்தை तुल्यं तु दर्शनं என்ற

பிர்ம்ஹஸூத்ரபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் தெளிவுபடுத்தி யிருப்பதைக் காணலாம். அங்கு:

कथमिदं उपपद्यते ? ब्रह्मविदां कर्मानुष्टानं, अननुष्टानं च ।

என்பதால் "பிரம்ஹவித்துக்களுக்கு கர்மானுஷ்டானமுண்டென்றும், இல்லையென்றும் இரண்டு விதமாகக் காணப்படுவது எப்படிப் பொருந்தும்" என்று ஆக்ஷேபித்துக்கொண்டு ஸமாதானம் கூறுகையில் கர்மானுஷ்டானம் உண்டென்ற பக்ஷமானது பலாபிஸந்தியின்றி பிர்ம்ஹவித்யாங்கமாக அவச்யம் செய்யவேண்டிய யக்ஞாதி விஷயமென்றும், கர்மானுஷ்டானம் வேண்டியதில்லையென்கிற பக்ஷமானது மோக்ஷ விரோதி பலனுள்ள காம்யயக்ஞ விஷயமென்றும் வ்யவஸ்தை செய்தார்.

அந்த வாக்யமாவது:—

फलाभिसन्धिरहितस्य यज्ञादिकर्मणः ब्रह्मविद्याङ्गत्वात्, तथाविधस्य कर्मणः अनुष्ठानदर्शनमुपपद्यते ।
फलार्थस्य तस्यैव यज्ञादेः मोक्षफल ब्रह्मविद्या विरोधित्वात् तस्य अननुष्ठानदर्शनं उपपन्नतरम् ॥ என்று.

ஆகையால் பிர்ம்ஹ நிஷ்டர்களுக்குக் காம்ய யக்ஞானுஷ்டானமே நிஷேதிக்கப்படுகிறதென்ற விஷயத்தை ஸ்ரீபாஷ்யகாரர் அநேக பிர்ம்ஹநிஷ்டர்களின் உதாஹரணத்தைக் காட்டி நிர்ணயித்தார். ஆகையால், கர்மாக்கள் அல்ப, அஸ்திர பலப்ரதங்களென்று பலவிடங்களில் சாஸ்திரங்களும் ஆசார்யர்களும் அடிக்கடி கூறுவதும் காம்ய கர்ம விஷயமென்றே அறியவேணும்.

ஆதலால் பிரபந்நாதி உத்கிருஷ்ட அதிகாரிகளும் அக்நிஹோத்ராதி வர்ணாச்ரம கர்மாக்களை பலாபிஸந்தியில்லாமலும், அந்தர்யாமியான பரமபுருஷனே அவைகளால் ஆராத்யன் என்கிற தத்வஞானத்துடனும் அநுஷ்டிக்க வேணுமென்பதே நம் ஆசார்யர்களின் திருவுள்ளமாயிருப்பதைப் பிராமாணிகர்கள் அறிவார்.

பாதுகா ஸஹஸ்ரத்தில் ஸ்ரீதேசிகன் நிர்ணயம்.

இவ்வளவு சாஸ்திரார்த்த தத்வங்களையும் திருவுள்ளத்தில் கொண்டு ஸ்ரீதேசிகன் பாதுகாஸஹஸ்ரத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லுவதாவது:—

श्रुतिशिरसि निगूढं कर्मणां चोदितानां
त्वदवधि विनिवेशं नाधिगन्तुं क्षमाणाम् ।
परिहसति मुरारेः पादुके! बालिशानां
पशुवधपरिशेषान् पंडितो नामयज्ञान् ॥ (47) என்று.

"வேதவிஹிதங்களான யாகாதி நித்யகர்மாக்களுக்குப் பரமபுருஷனை அந்தர்யாமியான பகவானே ஸாக்ஷாத் ஆராத்யன் என்று வேதாந்தங்களில் கூறிய தத்வத்தையறிந்து அதன்படி பகவத்பர்யந்தமாக அநுஸந்தித்துச் செய்யப்படாத யாகங்களில் பசுவதம் தான்மீதியேயல்லது பகவத் ப்ரீதி ஏற்படாதெனஞானிகள் பரிஹஸிப்பார்கள்" என்று ஸ்ரீதேசிகன் பரமைகாந்திகள் செய்ய வேண்டிய யாகாநுஷ்டான க்ரமத்தைச் சிக்ஷித்துக் கொடுத்திருக்கிறார். இதிலிருந்து பசு ஆலம்பன ஸஹிதமான ஜ்யோதிஷ்டோமாதிகளால், பகவானே ஸாக்ஷாத் ஆராத்யனென்கிற தத்வ ஞானத்துடன் அவைகளைச் செய்யவேண்டுமென்பதை ஸ்ரீதேசிகன் நிஸ்ஸந்தேஹமாக ஸ்திரப்படுத்தியிருப்பது ப்ரக்ருதத்தில் மிகவும் முக்யமான விஷயம்.

இவ்வாறு இன்னும் பல இடங்களில் நம் ஆசார்யர்கள் அக்நிஹோத்ராதிகள் அவச்யாநுஷ்டேயங்களென்பதை நிர்ணயித்திருப்பதை விஸ்தாரபயத்தால் இங்கு விவரிக்காமல் நிறுத்திக் கொள்ளுகிறோம்.

பசு ஆலம்பனம் தர்மம்.

இவ்வாறு ஆசாரியர்கள், வேதவிஹிதங்களான ஜ்யோதிஷ்டோமாக்நி ஹோத்ராதி நித்யஸ்ரௌதகர்மாக்களை வர்ணாச்ரமதர்ம முறையில் அவச்யம் அநுஷ்டிக்கவேண்டுமென்று நிர்ணயித்துவிட்டபிறகு, அந்த ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களில் சுருதி விஹிதமான பசு ஆலம்பன தர்மத்தைப்பற்றியும் ஆசார்யர்கள் செய்துள்ள விஸ்தாரங்களை இங்கு குறிப்பிடுகிறோம். யாகங்.

களில் விஹிதமான பசு ஆலம்பன தர்மமானது வேதங்களில், உத்தமதர்மமாகவும் அவச்யகர்த்தவ்யமாகவும் விதிக்கப்பட்டிருப்பதால் அது மஹா பரிசுத்தமான தர்மமென்றும் ஹிம்ஸையே அல்லவென்றும், அஹிம்ஸையேயென்றும் பசுவுக்கு ஹிதகரமென்றும், ரக்ஷணமென்றும், உத்தமலோக ப்ராப்தி ஹேதுவென்றும், சுருதி ஸ்மிருதி பிரமாணங்களைக்கொண்டு ஸ்ரீபாஷ்யகாரரும் ஸ்ரீதேசிகனும், தங்களுடைய கிரந்தங்களில் வெகு தெளிவாகக் கூறியுள்ளார்கள்.

யாகபசுவுக்கு உயர்ந்த கதி கிடைப்பதாகக் கூறும் அநேக சுருதி வாக்யங்களை முதல்பாகத்தில் காட்டினோம். மனுவும் तस्माद्यज्ञे वधोऽवधः, என்றும் अहिंसामेव तां विद्यात् என்றும் யாகபசு விஷயம் வதமே அல்லவென்றும், அஹிம்ஸையென்றே நினைக்க வேணுமென்றும் உறுதியாகச் சொன்னார். மஹாபாரதத்தில் மஹேச்வரன் பார்வதிதேவிக்கும், ஸ்ரீ கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரருக்கும் உபதேசிக்கும் வாக்யங்களால் யாகபசு விஷயம் உத்தம தர்மமென்பதும், பசுவுக்கும், யஜமானனுக்கும் மிகுந்த க்ஷேமகரமானதென்றும் சொல்லியிருப்பதையும் முதல் பாகத்தில் காணவும்.

### யாகபசுவுக்கு உத்தமகதி: ஹேமாத்ரி வசனங்கள்.

பிரஸித்த நிபந்தனக் கிரந்தமாகிய ஹேமாத்ரியில் அஜவத ப்ராயச்சித்தபிரகரணத்தில் யாகபசுவிஷயமாக உதாஹரிக்கப்பட்டுள்ள வசனங்களையும் பிராமாணிகர்கள் பராமர்சிக்கவேணும். அங்கு

यज्ञार्थं हन्ति चेत् विप्रः अनन्तं फलमश्नुते ।

என்பதால் யாகார்த்தமாக பசுவதம் செய்கிறவனுக்கு எல்லையற்ற ஸுக்ருத பலன் உண்டென்று சொல்லப்படுகிறது. மேலும் அங்கு

यज्ञार्थं हन्ति यो विप्रः अजं मेषं सुपुण्यधीः ।
स याति ब्रह्मणः स्थानं पुनरावृत्ति वर्जितम् ॥

என்ற வசனத்தால் யாகார்த்தமாக பசு ஆலம்பனம் செய்யும் புண்ய புருஷர்கள் புனராவ்ருத்தியற்ற பிரம்ஹலோகத்தை

அடைவதாயும் சொல்லப்படுகிறது. தவிரவும் அங்கு

यज्ञार्थं हन्ति यो विप्रः पशुं लोकपरायणः ।
स याति ब्रह्मणः स्थानं पशुना सह मोदते ॥

என்ற பிரமாணத்தால் யாகநிமித்தமான பசு ஆலம்பனம் செய்யும் விப்ரன் அந்த பசுவுடன் சேர்ந்து பரபிரம்ஹ லோகத்தை அடைந்து பிர்ம்ஹானந்தத்தை அனுபவிப்பதாயும் சொல்லப் படுகிறது. ஆதலால்தான் மனுவும்

आत्मानं च पशूंश्चैव गमयत्युत्तमां गतिम् ।

என்பதால் யஜமானன், தன்னையும், யாகபசுவையும் உத்தமகதி அடையும்படி செய்வதாகக் கூறியுள்ளார். இவ்வாறு கணக்கற்ற சுருதி ஸ்மிருதி பிரமாணங்களைக்கொண்டே ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீதேசிகாதி ஆசார்யர்கள் யாக பசு விஷயம் ஹிம்ஸையல்லவென்றும், ரக்ஷணமென்றும் ஸித்தாந்தம் செய்திருப்பதைப் பார்க்கலாம்.

## இதற்கு பிர்ம்ஹஸூத்ர பிரமாணம்.

முதலில் பிரம்ஹஸூத்ரத்தையும் அங்குள்ள ஸ்ரீ பாஷ்யத்தையும் பராமர்சிப்போம். பிரம்ஹஸூத்ரம் அங்யாதிஷ்டிதாதிகரணத்தில், ஸாங்க்யமதஸ்தர்கள் யாகபசு ஹிம்ஸையில் தோஷமென்று பூர்வபக்ஷம் செய்தார்கள். யாகத்தில் பசு ஹிம்ஸை ஆவச்யகமென்பதையும், அது வேதவிஹிதமென்பதையும் ஸாங்க்யர்களும் அங்கீகரித்தார்கள். யாகபசு ஹிம்ஸையானது யாகத்திற்கு உபகாரகம்தான். ஆனால் அந்த ஹிம்ஸையினால் ஸ்வல்ப தோஷம் ஏற்படுகிறதென்றும் அதை யஜமானன் அநுபவிக்க வேண்டியதுதானென்றும் அவர்கள் பக்ஷ சொன்னார்கள்.

हिंसा हि पुरुषस्य दोषमावक्ष्यति, क्रतोश्च उपकरिष्यति ॥

என்பது அவர்களின் மதமாகும்.

இந்த ஸாங்க்ய அபிப்பிராயத்தைக் கண்டித்து யாகபசு ஹிம்ஸை, ஹிம்ஸையே யல்லவென்று ஸித்தாந்தம் செய்வதற்காகவே பிரம்ஹஸூத்திரத்தில

अशुद्धमिति चेन्न शब्दात् ।

என்று இதம்பரமாக ஓர் ஸூத்ரத்தை பிர்ம்ஹ ஸூத்ரகாரரான ஸ்ரீ வ்யாஸர் செய்தருளியிருக்கிறார். இதில் ஸூத்ரகாரர் பசு ஹிம்ஸையுள்ள யாகம் அசுத்தமல்லவென்றும், அது பசுவுக்கு ஹிதகரமென்றும் உயர்ந்தகதியைக் கொடுக்கிறதென்றும் வேதமே ஸ்பஷ்டமாகக் கூறுவதால் ஸாங்க்யர் சொன்ன ஸ்வல்ப தோஷத்திற்கும் இடமில்லையென்றும், ஆதலால் யஜமானனுக்கு ஹிம்ஸா தோஷமும் அதன் காரணமாக வ்ரீஹிபாலாதி ப்ராப்தியும் புனராவிருத்தி முதலியவைகளும் கிடையாவென்று ஸித்தாந்தம் கூறினார்.

பிரம்ஹ ஸூத்ரத்திற்கு பாஷ்யம் செய்த மூன்று மஹாசாரியர்களும் இந்த பிரம்ஹஸூத்ரத்திற்கு ஒரே மாதிரியான பாஷ்யம் செய்து யாகபசு ஹிம்ஸை தர்மமென்று ஸ்தாபித்துள்ளதைக் கீழ் பாகத்தில் நிரூபித்திருக்கிறோம்.

## யாகபசு விஷயம் ஹிம்ஸையல்ல, ரக்ஷணமே
## ஸ்ரீபாஷ்ய நிர்ணயம்.

இங்கு நம் ஸ்ரீபாஷ்யகாரர் வெகு ஸ்பஷ்டமாகவும் உறுதியாகவும் சர்ச்சை செய்து நிர்ணயித்துள்ள ஸித்தாந்தத்தை, அந்த ஆசாரியரின் சிஷ்யர்களாகிய நம்மவர்கள் கவனிக்க வேண்டும்.

ஸ்ரீபாஷ்யவாக்யமாவது:—

इष्टादिकर्मैव अशुद्धं—पापमिश्रम्
अग्नीषोमीयादि हिंसा युक्तत्वात्

என்பதால் "ஹிம்ஸையுடன் கூடியதால் நித்ய, நைமித்திக, காம்ய ரூபமான யாகாதிகர்மாவானது அசுத்தம், அதாவது பாப மிச்ரம்" என்று ஸாங்க்ய பூர்வபக்ஷத்தைக் காட்டிவிட்டு ஸித்தாந்தம் கூறுவதாவது:—

तन्न, कुतः? अग्नीषोमीयादेः संज्ञपनस्य स्वर्गलोकप्राप्ति हेतुतया हिंसात्वाभाव शब्दात्। पशोर्हि संज्ञपन निमित्तां स्वर्गलोक प्राप्तिं वदन्तं शब्दमामनन्ति "हिरण्य शरीरः ऊर्ध्वः स्वर्गं लोकमेति" इत्यादिकम्। अतिशयिताभ्युदय साधन-

रूपः व्यापारः अल्प दुःखदोऽपि न हिंसा । प्रत्युत रक्षणमेव । तथा च मन्त्रवर्णः—"न वा उवेतन्म्रियसे नरिष्यसि देवाँ इदेषि पथिभिः सुगेभिः । यत्र यन्ति सुकृतो नापि दुष्कृतः तत्र त्वा देवः सविता दधातु" इति । चिकित्सकं च तादात्विक अल्पदुःखकारिणमपि रक्षकमेव वदन्ति, पूजयन्ति च तद्ज्ञाः ॥

இதன் அர்த்தமாவது:—

"பசுஹிம்ஸை யிருப்பதால் யாகாதிகர்மமானது பாப மிச்ரமென்பது ஸரியல்ல. ஏனென்றால்? அக்நீஷோமீயாதியாக பசு ஹிம்ஸையானது அந்த பசுவுக்கு, ஸ்வர்கலோக ப்ராப்தி ஹேதுவாயிருப்பதால் அது ஹிம்ஸையேயல்லவென்று வேதமே சொல்லுகிறது. 'ஹிரண்யசரீர:—' என்ற சுருதிவாக்யத்தையே சுருதிகள் இதற்கு பிரமாணமாகக் கூறியிருக்கின்றன. மிகவும் உயர்ந்த சிரேயஸ்ஸுக்குக் காரணமாயுள்ள அந்த ஹிம்ஸா கார்யமானது, தத்காலத்தில் பசுவுக்கு ஸ்வல்ப துக்கத்தைக் கொடுப்பதாயிருந்த போதிலும் அது ஹிம்ஸையாகாது. பசுவுக்கு ரக்ஷணமேயாகும். ஏனெனில் "நவாஉவா" என்ற மந்திரமே அப்படிச் சொல்லுகிறது.

சஸ்திர (ஆயுத) சிகித்ஸை செய்யும் வைத்யன், வியாதிஸ்தனுக்கு ஆயுதாதிகளால் தத்காலத்தில் துக்கத்தைக்கொடுத்த போதிலும் அந்த வைத்யனை "ரக்ஷகன்" என்றே சொல்லுகிறார்கள். அந்த வைத்யனைப் பூஜிக்கவும் செய்கிறார்கள்."

மேற்படி வாக்யங்களால் ஸ்ரீபாஷ்யகாரர் வேதவிஹிதமான யாகபசு ஹிம்ஸையானது அஹிம்ஸையே என்றும், பசுவுக்கு ஹீன சரீரம் நீங்கி உத்தம ஸ்வர்ண சரீரம் கிடைத்து உயர்ந்த லோகமும் கிடைப்பதாக சுருதி கூறுவதால் அது பசுவுக்கு ரக்ஷணமே யென்றும் சொல்லி அதற்கு வைத்யன் சஸ்திர சிகித்ஸை செய்வதையும் உதாஹரணமாகக் காட்டினார். வியாதிஸ்தனுக்கு வைத்யன் ஆயுதம் முதலிய சஸ்திரங்களால் சரீரத்தைக் கீறி சிகித்ஸை செய்வது தத்ஸமயத்தில் ஹிம்ஸையாக விருந்தாலும் அந்த வியாதிஸ்தனை ரக்ஷிப்பதற்கே செய்யப்படு

கிறபடியால் அது ரக்ஷணமாகிறதுபோல் யாகபசுவுக்கும் தத்கா லத்தில் சிறிது சிரமம் தோன்றினாலும் கடைசியில் அது ரக்ஷண மாகவே ஆகிறது என்று ஸ்ரீ பாஷ்யகாரர் நிர்ணயித்தார்.

### கீதாபாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம்.

கீதை இரண்டாவது அத்யாயத்தில் "ஸ்வதர்மமபி சா வேக்ஷ்ய, (स्वधर्ममपिचावेक्ष्य) என்ற சுலோக பாஷ்யத்திலும் ஸ்ரீ பாஷ்யகாரர் கூறுவதாவது:—

अपिचेदं प्रारब्धं युद्धं प्राणिमारणमपि, अग्नीषोमीयादिवत् स्वधर्ममवेक्ष्य न विकंपितुमर्हसि।............अग्नीषोमीयादिषु च न हिंसा पशोः। निहीनतरच्छागादि देह परित्याग पूर्वक-कल्याणतर देह स्वर्गादि प्रापकत्व श्रुतेः संज्ञपनस्य। न वा उवे तन्म्रियसे नरिष्यसि देवाँ इदेषि पथिभिः सुगेभिः। यत्र यन्ति सुकृतो नापि दुष्कृतः तत्रत्वा देवस्सविता दधातु" इति श्रूयते।........अतः चिकित्सक कर्म आतुरस्येव रक्षण-मेव अग्नीषोमीयादिषु संज्ञपनम्॥

இதன் அர்த்தமாவது:—

"அர்ஜுந! இப்போது ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த யுத்த மானது பிராணிகளைக் கொல்லும் கார்யமாயிருந்தபோதிலும் அக்நீஷோமீய யாகபசு ஹிம்ஸையைப்போல் இது ஸ்வதர்ம மென்று அறிந்து நடுங்காமலிருப்பாயாக.

அக்நீஷோமீய யாகாதிகளில் செய்யப்படும் யாகபசு ஹிம் ஸையானது அந்த பசுவுக்கு ஹிம்ஸையேயல்ல. ஏனெனில், மிகவும் தாழ்ந்ததான அஜசரீரம் நீங்கி ரொம்பவும் அழகிய உத் தம சரீரமும், உயர்ந்த லோகமும் அந்த பசுவுக்குக் கிடைப்பதாக சுருதி சொல்லுகிறது. ஆதலால் வியாதிஸ்தனுக்கு ஆயுத சிகி த்ஸைபோல் யாகபசுவுக்கும் அது ரக்ஷணமேயாகும்".

மேற்படி கீதாபாஷ்ய வாக்யத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் யாக பசு ஹிம்ஸை ஹிம்ஸையல்லவென்றும் பசுவுக்கு ரக்ஷணமென்

றும் சஸ்திர சிகித்ஸா உதாஹரணத்துடனும், சுருதி பிரமாண த்துடன் நிஷ்கர்ஷித்தார்.

இங்கு ஸ்ரீ பாஷ்யகாரர் உதாஹரித்த "நவாஉவா" என்ற மந்திரத்தின் அர்த்தமாவது:—

"ஏ! பசுவே! நீ! வீண் மரணத்தை அடையவில்லை. நீ கெடுதி யடையமாட்டாய். வெகு ஸுகரமான மார்க்கங்களால் தேவர்களையே நீ அடைகிறாய். எந்த உத்தம லோகத்தில் புண் ய சீலர்களை இருக்கிறார்களோ, பாபிகள் இல்லையோ அந்த கைய லோகத்தில் உன்னை, ஸர்லோக நியந்தாவான பகவான் கொண்டுபோய்ச் சேர்ப்பாராக!"

மற்றொரு சுருதியாகிய हिरण्यशरीरः ऊर्ध्वः स्वर्गलोकमेति (ஹிரண்ய சரீர:-) என்பதின் அர்த்தமாவது:—

"யாகத்தில் உபயோகப்பட்ட பசுவானது ஸ்வர்ணமயமான சரீரத்தை அடைந்து உயர்ந்து ஸ்வர்க்கலோகம் போகிறது" என்று. இந்தமாதிரியாக பசுவுக்கு உத்கிருஷ்ட கதியைச் சொல் லுகிற பற்பல வேதவாக்யங்களையும், மநுவாதி ஸ்மிருதிகளையும முதல் பாகத்தில் காட்டியுள்ளோம். அந்தகைய சுருதிஸ்மிருதி பிரமாணங்களைக்கொண்டு ஸ்ரீபாஷ்யகாரர் யாகபசு கார்யம் ஹிம் ஸையே அல்லவென்றும் ரக்ஷணமென்றும் ஸித்தாந்தம் செய் தார்.

தத்வ முக்தாகலாபத்திலும், அதன் வியாக்யானமான ஸர்வார்த்த ஸித்தியிலும் ஸ்ரீ தேசிகன் மேற்கண்ட விஷயங் களை வெகு ஸ்பஷ்டமாகக் கூறுகிறார்.

निस्संकोचान्निषेधात् (அத்ரவ்பஸரம், 78)

என்ற சுலோகத்தால் ஸ்யேன-அக்நீஷோமீய வைஷம்ய நிரூபண பூர்வமாக யாகபசு விஷயத்தில் ஹிம்ஸாத்வமே கிடையாதென்ற வேதாந்த ஸூத்ர ஸித்தாந்தத்தை ஸ்திரப்படுத்துகையில் ஸர் வார்த்தஸித்தியில் ஸ்ரீ தேசிகன் கூறுவதாவது:—

अत्रैवं शारीरकशास्त्रे परीहारः उक्तः—

अग्नीषोमीयालंभनस्य परदुःखोत्पादकत्वे सत्यपि हिंसा शब्द

वाच्यत्वं नास्ति। न हि व्रणादिशान्त्यर्थं दाहच्छेदादिकारिषु वैद्यांबष्ठादिषु हिंसकत्वमस्ति?। नच पुत्रादिशिक्षाकारिषु पित्रादिषु तर्जनादिभिः हिंसकत्वमुच्यते?।
अशास्त्रीयकर्मणा परदुःखाधानकारिणामेव हिंसकत्वं। अत्रपुनः शास्त्रीय कर्मानुरोधेन प्राणवियोजनेऽपि न हिंसकत्वं। अपितु रक्षकत्वमेव। पापफलपरिणतिरूप पशुशरीर विच्छेदेन पशोरेव निरतिशय सुखभोगानुरूप विशिष्टशरीर ग्रहणहेतुत्वात्। ............"नवाउवा +सुगेभिः" इति मन्त्रवर्णेन पशोः विशिष्टदेश प्राप्तिः उच्यते ॥' என்று

இந்த வாக்யங்களில் ஸ்ரீதேசிகன் யாகபசு விஷயம் ஹிம்ஸையே அல்லவென்றும், அதில் பசுவுக்குச் சிறிது துக்கம் ஏற்பட்டாலும், வ்ரணம் ஆறுவதற்காக வைத்யன் கத்தி முதலிய ஆயுதங்களைக்கொண்டு சரீரத்தை வெட்டுவது சுடுபோடுவது முதலான சிகித்ஸை செய்வது எப்படி ஹிம்ஸையல்லவோ அது போலவே யாகபசு விஷயமும் ஹிம்ஸையல்லவென்றும், புத்ரனை தர்ஜனாதிகளால் சிக்ஷிக்கும் பிதா எப்படி ஹிம்ஸகனல்லவோ அதுபோலவே இதுவுமாகுமென்று சொல்லுகிறார்.

மேலும் அசாஸ்த்ரீயகாரணத்தால் பிறருக்கு துக்கமுண்டு பண்ணுவதுதான் ஹிம்ஸையென்றும், யாகத்தில் சாஸ்த்ர விதிப்படி ஹிம்ஸை செய்வதால் இதில் ஹிம்ஸாதோஷமே இல்லையென்றும், ஏனெனில் அது பசுவுக்கு ரக்ஷணமாயிருப்பதாயும், பாபஜன்யமான அஜம் முதலிய பசு சரீரம் நீங்கி உயர்ந்த சரீரமும், உயர்ந்தலோகமும் யாகபசுவுக்குக் கிடைப்பதாக சுருதி கூறுகிறபடியால் இது பசுவுக்கு ரக்ஷணம்தான் என்றும் தெளிவாகச்சொல்லி ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்ய அபிப்பிராயத்தையே ஸ்ரீ தேசிகன் விவரித்து ஸ்திரப்படுத்துகிறார்.

பரமதபங்கம் என்ற ரஹஸ்ய க்ரந்தத்தில் ஜைனமத பங்காதிகாரத்தில் ஸ்பஷ்டமாகக் கீழ்க்கண்ட தமிழ் வாக்யங்களாலும் இதை உறுதிப்படுத்துகிறார்.

*"தர்மாதர்ம வ்யவஸ்தாபகமான சாஸ்திரத்தாலே அக்னீ ஷோமீயாதி ஹிம்ஸைகளிலும், யுத்தத்தில் வதார்ஹ விஷயத்திலும்......பாபத்வசங்கை பண்ணவொண்ணாது....... வைதஹிம்ஸை பசுவுக்கு ஹிததமமென்று சாஸ்த்ரமாகையாலே அதுக்குஅனர்த்தஹேதுவன்று. இது சிகித்ஸகசல்ய பிரயோகாதி நியாயத்தாலே ஹிதமாம் ....... ஆகையாலே ஸாங்க்யர்சொன்ன ஸ்வல்பதோஷ ஸங்கரத்திற்கும் அவகாசமில்லை. இவ்வர்த்தத்தை "அசுத்தமிதிசேந்நசப்தாத்" என்று வேதாந்த ஸூத்ரகாரர் அருளிச்செய்தார்"*

இந்த வாக்யத்தால் பிரம்ஹஸூத்ர-பாஷ்ய ஸித்தாந்தத்தையே தெளிவாக விவரித்திருப்பது காணவும். இந்த வாக்யத்தில்.

"தர்மாதர்ம வ்யவஸ்தாபகமான சாஸ்திரத்தாலே"

என்று ஸ்ரீ தேசிகன் சொல்லுவது கவனிக்கத்தக்கது. தர்மம், அதர்மம், ஹிம்ஸை, அஹிம்ஸை, பாபம், புண்யம், முதலிய ஸகலங்களையும் சாஸ்திரமூலமாகவே பிரமாணசரணர்கள் தெளியவேண்டுமேயல்லது வேறுவழி கிடையாது. அத்தகைய சாஸ்திரப் பிராமணபலத்தாலேயே யாகபசு விஷயம் ஹிம்ஸையல்லவென்றும் ரக்ஷணமென்றும் நிச்சயிக்கப் பட்டிருப்பதால் இந்த ஆக்ஞையை வைதிகமதஸ்தர் யுக்திவாதாதி விபரீதங்களால் அதிக்ரமிக்கக் கூடாதென்பதையே இந்தவாக்யத்தால் ஸ்ரீதேசிகன் காட்டுவது முக்யமாகும்.

### யாகபசுவிஷயமாக விசிஷ்டாத்வைதிகளின் நிர்ணயம் உத்ஸர்க்காபவாதநியாயம் வராது.

யாகபசு கார்யம் ஹிம்ஸையல்லவென்கிற விஷயத்தில் அத்வைதிகளுக்கும், விசிஷ்டாத்வைதிகளாகிய ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்திகளுக்கும் சிறிது பேதமிருப்பது முக்யமாக கவனிக்கத்தக்கது. அத்வைதிகளும் யாகபசு ஹிம்ஸை தோஷமற்றது என்று சொன்னார்களாயினும் உத்ஸர்க்காபவாத நியாயப்படியே நிர்ணயம் கூறினார்கள். அதாவது नहिंस्यात् सर्वाभूतानि என்கிற

சாஸ்திர விதியானது பொதுவாக ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக்கூடாதென்று கட்டளையிடுகிறது. ஆனால் "யாகத்தில் பசு ஹிம்ஸை செய்யவேண்டும்" என்ற अग्नीषोमीय पशुमालभेत என்கிற மற்றொரு சாஸ்திர விதியானது யாகத்தில் ஹிம்ஸை செய்வதை விதிக்கிறது. மேற்கண்ட இரண்டு விதிகளுக்கும் விரோதம் ஏற்படுகிறது. அப்படி விரோதம் ஏற்படாமல் விஷய வ்யவஸ்தை செய்து அர்த்தம் சொல்லவேண்டியதாகையால் மீமாம்ஸகாதி நியாயவாதிகள் உத்ஸர்க்காபவாத நியாய பலத்தை அநுஸரித்து, யாகபசு ஹிம்ஸாவிதியானது அபவாத சாஸ்திரமென்றும் பிரபலமென்றும் இதனால் "ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக்கூடாது" என்ற பொது விதி அதாவது உத்ஸர்க்க சாஸ்திரமானது பாதிக்கபபடுகிறதென்றும், ஆகையால் யாகபசு ஹிம்ஸை தவிர மற்ற ஹிம்ஸைகளைச் செய்யக்கூடாதென்று இரண்டு விதிக்கும் விரோதமின்றி வ்யவஸ்தை கூறினார்கள். இதனால் யாகபசு ஹிம்ஸைமட்டும் செய்யலாமென்றும் அதில் தோஷமில்லையென்றும் சாஸ்திரம் நிர்ணயித்தது.

இந்த உத்ஸர்க்காபவாத [பொதுவிதி விலக்குவிதி] நியாயத்தை அநுஸரித்தே அத்வைதபாஷ்யத்தில் ஸ்ரீசங்கராசாரியாள் யாகபசு ஹிம்ஸை தோஷமற்றது என்று ஸித்தாந்தம் கூறினார்கள்.

ஆனால் விசிஷ்டாத்வைதிகளான ஸ்ரீபாஷ்யகார-ஸ்ரீதேசிகாதி ஆசார்யர்களோவென்றால் யாகபசு விஷயத்தில் மேற்கண்டபடி உத்ஸர்க்காபவாத நியாயமே பிரவிர்த்திக்காது என்று நிர்ணயித்துள்ளார். அது எப்படியெனில்:—

யாகபசு விஷயமானது ஹிம்ஸையே அல்லவென்றும், பசுவுக்கு அது ரக்ஷணமென்றும் சுருதிவாக்யங்களால் ஸ்பஷ்டமாகிறபடியால் அதை ஹிம்ஸை என்று பேசவே இடமில்லை. ஆகையால் "ஹிம்ஸிக்கக்கூடாது" என்ற பொது நிஷேதமானது யாகபசு விஷயத்தில் பிரவர்த்திக்க இடமேயில்லை. ஏனெனில் அது ஹிம்ஸையாயிருந்தாலல்லவோ "ஹிம்ஸிக்கக்கூடாது" என்ற

விதி பிரவிர்த்திக்க இடமேற்படும்? அஹிம்ஸையென்றும் ரக்ஷணமென்றும் சுருதியால் நிர்ணயிக்கப்பட்ட யாகபசு விஷயத்தில் ஹிம்ஸை என்ற பேச்சுக்கே இடமில்லையன்றோ? ஆதலால் "நஹிம்ஸ்யாத்" என்ற பொது விதியானது 'அக்நீஷோமீயம்' என்ற யாகபசு விதிவிஷயத்தில் வராது. நஹிம்ஸ்யாத் என்பது ஹிம்ஸையைத் தடுக்கிறது. அக்நீஷோமீயம் என்ற விதியோ ரக்ஷணத்தை விதிக்கிறது. ஆதலால் இரண்டு விதிகளும் தனித்தனி விஷயங்களாகிவிட்டதால் உத்ஸர்க்காபவாத ஸம்பந்தத்திற்கே அவகாசமில்லையென்று அந்த பூர்வாசாரியாகள் நிர்ணயித்தார்கள்

இவ்விஷயத்தை ஸ்ரீ தேசிகன் பல விடங்களில் ஸாதித்திருப்பதை இங்கு சிறிது நிரூபிப்போம்.

**யாகபசு விஷயமாக ஸர்வார்த்தஸித்தியில்**
**ஸ்ரீதேசிகன் ஸூக்தி.**
**உத்ஸர்க்காபவாதக்கிரமமில்லை**

முதலில் ஸர்வார்த்தஸித்தியில் ஸ்ரீ தேசிகன் ஸாதிப்பதாவது:—

अयमत्र विभागः। अग्नीषोमीय पश्वालंभनस्य हिंसात्वमभ्युपगम्य "आलभेत" इति विधिबलात् "नहिंस्यात्" इति निषेधस्य संकोचमाहुः केचित्॥ अपरेपुनः श्रुतिस्मृतिबलात् हिंसात्वमेव नाभ्युपगच्छन्ति। अल्पीयसा दुःखेन अधिक सुखप्राप्ति हेतोः अहिंसात्वात्। "नम्रियसे नरिष्यसि" इति श्रुतत्वाच्च इति॥

இந்த வாக்யத்தில் யாகபசு ஹிம்ஸையானது வேதவிஹிதமான தர்மமாதலால் அது நஹிம்ஸ்யாத் என்ற உத்ஸர்க்க சாஸ்திரத்தை பாதிக்குமென்று அத்வைதிகள் சொன்ன ஸமாதானத்தை केचित् என்பதால் முதலில் கூறிவிட்டு, अपरे पुनः என்பதால், சுருதி ஸ்ம்ருதி பலத்தால் யாகபசு ஹிம்ஸையை ஹிம்ஸையென்றே சொல்லக்கூடாதென்றும், விசேஷ சிரேயஸ்ஸுக்கு ஹேதுவான அந்த கார்யமானது அஹிம்ஸைதானென்றும் வேறுசிலர் கூறுவதாக இரண்டாவது ஸமாதானமும் கூறப்பட்டது. இந்த இரண்டாவது ஸமாதானமே அதாவது ஹிம்ஸையேயல்லவென்ற

ஸித்தாந்தமே நம் ஆசார்யர்களின் திருவுள்ளமானதென்பது ஸ்பஷ்டம்.

## தாத்பர்யசந்த்ரிகையிலும் ஸ்ரீதேசிகன் திருவுள்ளம்

இதை இன்னும் ஸ்பஷ்டமாக ஸ்ரீ தேசிகன் தாத்பர்ய சந்திரிகையில் நிரூபிப்பதை கவனிக்கவும். य एनं वेत्ति हन्तारं என்ற கீதா சுலோக பாஷ்யத்தில்

"नहिंस्यात् सर्वाभूतानि "ब्राह्मणो न हन्तव्यः" इत्यादीन्यपि अविहित शरीर वियोगकरण विषयाणि ।"

என்ற வாக்யத்தால் நஹிம்ஸ்யாத் என்ற உத்ஸர்க்க (பொது) விதியானது சாஸ்திர விஹிதயாகாதி ஹிம்ஸை தவிர மற்ற லௌகிகஹிம்ஸையைப் பற்றியது என்று ஸ்ரீபாஷ்யகாரர் கூறினார். இந்த வாக்யத்திற்கு தாதபர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகன் வியாக்யானம் செய்கையில்

पराभिमत प्रक्रियाया उत्सर्गापवादाद्वा, स्वमतेन विहितशरीर वियोग करणस्य पशु शत्रुप्रभृतीनां अपि हिततमत्वेन हिंसात्वस्यैव अभावाद्वा इति भावः ।

என்று ஸாதித்தார். யாகத்தில் செய்யப்படும் பசு ஹிம்ஸையும் யுத்தத்தில் செய்யப்படும் சத்ருவதமும் தோஷமற்றது என்பதை ஸ்ரீ தேசிகன் இந்த வாக்யத்தால் இரண்டுவிதமாக நிரூபிக்கிறார். முதலில் पराभिमत, என்ற முதல் வாக்யத்தால் அத்வைதிகள் உத்ஸர்க்காபவாத நியாயப்படி சொன்ன ஸமாதானத்தைக் காட்டினார். பிறஸித்தாந்திகள் அதாவது அத்வைதிகள் என்பதை पर என்கிற பதத்தால் நிர்த்தேசித்துவிட்டு, அடுத்த வாக்யத்தால் ஸ்வமதத்தைக் காட்டுகிறார். स्वमतेन என்பதால். யாகத்தில் பசுவுக்கும், யுத்தத்தில் கொல்லப்படும் சத்ருவுக்கும் மிகுந்த க்ஷேமமேற்படுவதாக சாஸ்திரம் கூறுவதால் அதில் ஹிம்ஸாத்வமே கிடையாதென்பது ஸ்வமதம். அதாவது ஸ்ரீபாஷ்யகார் மதம் என்பதை ஸ்ரீ தேசிகன் தெளிவாக்கினார். ஹிம்ஸையேயல்லவென்றும், அஹிம்ஸைதான் என்றும் ஸித்தாந்தமானது ஸ்ரீ பாஷ்யகாரமதம் என்று ஸ்ரீ தேசிகன் ஸாதித்து யாகபசு விஷயமானது ரக்ஷணம்தானென்று ஸ்ரீபாஷ்யகாரர் ஸாதித்திருப்ப

தை உறுதிப்படுத்தி விசிஷ்டாத்வைதிகளின் ஸித்தாந்தப்படி "நஹிம்ஸ்யாத்"—"அக்நீஷோமீயம்" என்ற இரண்டிற்கும் உத்ஸர்க்கா பவாதக்கிரமில்லையென்றும், அந்த ஸமாதானமானது அத்வைதிகளின் ஸித்தாந்தமே என்பதையும் पराभित என்ற வாக்யத்தால் ஸாதித்திருக்கிறார்.

தாத்பர்யசந்திரிகையில் மற்றொருவிடத்தில்.

स्वधर्ममपिचावेक्ष्य என்ற கீதா சுலோக தாத்பர்ய சந்திரிகையிலும் யாகபசு விஷயமாக மேற்கண்டபடி இரண்டுவித ஸமாதானத்தையும் ஸ்ரீதேசிகன் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. அங்கு

प्रबलं विशेषशास्त्रं निषेधशास्त्रात्,
निषेधस्य अप्रसक्तिं वा स्मारयति ॥

என்ற வாக்யத்தால் யாகபசு விஷயமாக இரண்டுவிதமான ஸமாதானம் கூறப்படுகிறது. இதில் முதல் வாக்யத்தால் नहिंस्यात् என்ற ஸாமான்ய (பொது) சாஸ்திரத்தைவிட अग्नीषोमीयं என்ற விசேஷ சாஸ்திரம் (விலக்குவிதி) பிரபலமாகையால் யாகபசு விஷயம் தோஷமற்றது—என்று ஒரு ஸமாதானம் சொல்லப்பட்டது.

இரண்டாவது ஸமாதானம் निषेधस्य अप्रसक्तिं वा स्मारयति என்பதால் சொல்லப்படுகிறது. அதாவது "ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்ககூடாது" என்கிற நிஷேத சாஸ்திரமானது யாக பசு விஷயத்தில் பிரவிர்த்திக்காது. ஏனெனில் யாக பசு விஷயம் ஹிம்ஸையாயிருந்தாலல்லவோ. "ஹிம்ஸிக்கக்கூடாது" என்ற சாஸ்திரம் யாக பசு விஷயத்தில் வரக்கூடும்? யாக பசு விஷயம் ரக்ஷணமென்று ஸித்தாந்தமாகையால் இங்கு ஹிம்ஸாநிஷேத சாஸ்திரமே பிரவிர்த்திக்க இடமே இல்லையென்பது இரண்டாவது ஸமாதாமாக ஸ்ரீதேசிகனால் காட்டப்பட்டது.

மேலேயும் மேற்படி கீதாதாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீதேசிகன், தர்க்க பலத்தாலும் யாகபசுஹிம்ஸை ஹிம்ஸையல்லவென்பதை நிரூபிக்கிறார். अधर्म साधको हिंसात्वहेतुः असिद्धः। उपाधिश्च

न पक्षव्यापकः, पक्षस्य अहिंसारूपत्वात् என்று யாக பசு விஷயம் அதர்ம மென்று சொல்லுவதற்கு, அது ஹிம்ஸை என்ற ஹேதுவைத் தானே காட்டவேண்டும்? அது ஹிம்ஸையல்லவென்றும் ரக்ஷண மென்றும் வேதப் பிரமாணம் கூறிவிட்டதால் ஹிம்ஸை என்ற ஹேதுவே அஸித்தமாகிறது. ஆகையால் தர்க்க பலத்தாலும் கக்ஷி சொல்லமுடியாதென்று ஸாதித்து விட்டு அடுத்த வாக்யத்தில்

ஹிம்ஸைக்கு லக்ஷணமென்ன?
ஸ்ரீ தேசிகன் நிர்ணயம்.

अनर्थप्रापकव्यापारत्वं हिंसालक्षणं। अत्रतु तद्विपरीतत्वेन रक्षणत्वमेव युक्तमिति मन्त्र लिंगेन ज्ञापयति।

என்பதால் ஹிம்ஸை என்பதற்கு லக்ஷணம்சொல்லி, அந்த லக்ஷணம் யாக பசு விஷயத்தில் ஒவ்வாததால் இது ரக்ஷணம் தான் என்று ஸ்ரீ பாஷ்யகாரர் नवाउ என்ற மந்திர பலத்தால் ஸித்தாந்தம் கூறியதை ஸ்ரீ தேசிகன் எடுத்துக் காட்டினார்.

கடைசியாக ஸ்ரீ தேசிகன் எல்லா விஷயங்களை க்ரோடீகரித்துக் கூறுவதாவது:—

अयमभिप्रायः - नतावदिह दुःखजननमात्रं हिंसा, रक्षणरूपेषु चिकित्सकशल्यप्रयोगादिष्वपि प्रसंगात्। नापि प्राणवियोजनमात्रं, अतद्रूपेषु सर्वस्वहरण नरकपीडादिषु हिंसाशब्दप्रयोगदर्शनात्।
अतः अनर्थपर्यवसितः तादात्विकदुःखजनको व्यापारो हिंसेत्येव तत्वं॥ என்று

இந்த வாக்யங்களால் ஸ்ரீ தேசிகன் ஹிம்ஸை என்பதற்கு லக்ஷணம் கூறி அது யாக பசு விஷயத்தில் ஒற்றுவாரதென்பதை நிரூபிக்கிறார். அதாவது:— नहिंस्यात् सर्वाभूतानि என்ற விதியானது "ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக்கூடாது" என்று சொல்லுவதில் "ஹிம்ஸை" என்றால் என்ன? அதற்கு எப்படி லக்ஷணம் சொல்லுவது?

ஒருவனுக்கு அல்லது ஒரு பிராணிக்கு ஸஹிக்க முடியாத துக்கத்தை உண்டுபண்ணுவது ஹிம்ஸை என்று சொல்லலாமா? அப்படியானால் வைத்யன் கத்தி முதலிய சஸ்திரங்களைக் கொண்டு வியாதிஸ்தனுக்கு சிகித்ஸைசெய்வதும் ஹிம்ஸைஎன்று சொல்ல நேரிடும். ஏனெனில் சஸ்திரத்தால் கீறி சிகித்ஸை செய்கையில் வியாதிஸ்தனுக்கு ஸஹிக்க முடியாத துக்கம் ஏற்படுகிறதல்லவா? ஆகையால் இந்த லக்ஷணம் ஸரியல்ல. அப்படியானால் உயிரைப் போக்கும் கார்யமே ஹிம்ஸை என்று லக்ஷணம் சொல்லலாமா? இதுவும் ஒற்றுவராது. ஏனெனில் பிராணனை எடுக்காமலே கை கால் முதலிய அவயவங்களை பயங்கரமாக வெட்டுவதும், சூடு போடுவதும், சைசயடியடிப்பதும், இது முதலான கோரகார்யங் களும், உயிருடன் மனிதன் அனுபவிக்கும் நரக பீடை முதலிய வைகளும், தன் ஸொத்தைத் திருடன் முதலியவர்கள் அபஹரிப் பது முதலிய கிலேசங்களும் "ஹிம்ஸை" என்று சொல்லமுடி யாமல் போய்விடும். இது நியாயமா? சாஸ்திரங்களும், லோகவ்ய வஹாரமும் மேற்கண்ட கார்யங்களையும் ஹிம்ஸை என்றேசொல் லுவதைக் காண்கிறோம்.

ஆகையால்:— தத்காலத்தில துக்கத்தைக் கொடுப்பதும் முடிவில் அனர்த்தத்தைய (கெடுதியை) கொடுப்பதுமான கார் யமே ஹிம்ஸை என்று லக்ஷணம் ஒப்புக்கொண்டால் எல்லாம் ஒற்று வந்துவிடும். வைத்யன் செய்யும் சஸ்திர சிகித்ஸையால் வியாதிஸ்தனுக்குத் தத்காலத்தில் துக்கம் ஏற்பட்டபோதிலும் முடிவில் அதனால் அனர்த்தம் அதாவது கெடுதி ஏற்படுகிற தில்லை. க்ஷேமமே ஏற்படுகிறது. ஆதலால் இதில் ஹிம்ஸை என்ற லக்ஷணம் வராது. அது ஹிம்ஸையல்ல. உயிரைப் போக் காமலே, கத்தியால் குத்தியும், வெட்டியும், செய்யப்படும் கார்ய மானது தத்காலத்தில் பெரியதுக்கத்தைக் கொடுப்பதுடன், முடி வில் அனர்த்தத்தை அதாவது கெடுதியை விளைப்பதாயிருக்கிறது. ஆதலால் இங்கு ஹிம்ஸாலக்ஷணம் ஒற்றுவருவதால் இது ஹிம் ஸையென்றே வ்ஷிக்கிறது.

இனி இந்த லக்ஷணப்படி, யாகபசு விஷயத்தைகவனித்தால், விசஸநா காலத்தில் பசுவுக்கு துக்கம் ஏற்பட்டாலும், முடி வில் அந்த கார்யத்தால் அந்த பசுவுக்கோ யாக கர்த்தாவுக்

கோ எவ்விதக் கெடுதியும் ஏற்படாமல் க்ஷேமமே ஏற்படு வதாக வேதங்கள் கூறுவதால் யாக பசு விஷயம் ஹிம்ஸா லக்ஷணத்தில் சேராது. ஆதலால் அது ஹிம்ஸையல்ல. வைத்யன் செய்யும் சஸ்திர சிகித்ஸைபோல் தத்த காலத்தில் சிறிது சிரமம் கொடுத்தாலும் முடிவில் அது பசுவிற்கு உயர்ந்த சரீரத்தையும் உயர்ந்த லோகத்தையும் கொடுப்பதால் இது பசுவை ரக்ஷிப்பதாகவே ஆகும். ஆகையால் இது ரக்ஷணமே.

என்று ஸ்ரீ தேசிகன் மேற்கண்ட வாக்யங்களால் பிரமாணங்களையும் ஸத்தர்க்க பலத்தையும் கொண்டு யாக பசு விஷயம் ரக்ஷணமென்ற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்திருப்பது முக்யமாகும். இதற்கு மேலும் ஸ்ரீதேசிகன் முக்யமானதொரு ஆக்ஷேபத்தையும் பரிஹரிக்கிறார்.

**சாந்தோக்ய உபநிஷத்தில் யாகபசு விஷயம்**
**ஸ்ரீ தேசிகன் நிரூபணம்**

அதாவது— யாக பசு விஷயம் ஹிம்ஸையேயல்லவென்றும் ரக்ஷணமென்றும் விசிஷ்டாத்வைதிகள் சொல்லுவது சாந்தோக்ய சுருதிக்கும் மனுஸ்மிருதிக்கும் விருத்தம்போல், தோன்றுகிறது.

अहिंसन् सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः

என்ற சந்தோக சுருதியில் முமுக்ஷுவானவன் "யாகபசு ஹிம்ஸை தவிர மற்ற ஹிம்ஸைகளை விலக்கவேணும்" என்று சொல்லுகையில் யாக பசு விஷயத்தையும் "ஹிம்ஸை" என்று ஒப்புக்கொள்ளுவதுபோல் ஸ்பஷ்டமாகிறதே? மனுஸ்மிருதியிலும் यज्ञेऽवधोऽवधः என்பதால் "யாகத்தில் செய்யப்படும் வதமானது வதமல்ல" என்று சொல்வதிலும் வதம் என்பதை ஒப்புக்கொள்ளுவது தெரிகிறதே?

ஆதலால் யாகபசு விஷயம் ஹிம்ஸையல்லவென்றும், ரக்ஷணமென்றும் கூறுவது எப்படி ஸித்திக்கும்?

இந்தமாதிரி ஆக்ஷேபமொன்றை ஸ்ரீதேசிகனே

ननु 'अहिंसन् सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः' इत्यादिना अग्नीषोमीयादेरपि हिंसात्वं प्रतीयते। अन्यथा "अन्यत्र"

इतितद्व्यवच्छेदानुपपत्तेः ॥

என்பதால் செய்துகொண்டு ஸமாதனம் ஸாதிப்பதாவது:-

யாகபசு விஷயத்தை ஹிம்ஸை என்பவர் பாமரரே.

ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம்

ततश्च "अन्यत्रतीर्थेभ्यः" इत्येतत् पश्वादेः भावि पुरुषार्थ-विशेषानभिज्ञ पामर दृष्ट्या उक्तं। तस्मिन्नपि वाक्ये हिंसात्वं नास्तीत्येव तात्पर्यम्। उक्तंचमनुना-"तस्मात् यज्ञवधोऽवधः" इति। तत्रापि "वधः" इति पामरदृष्ट्या। "अवधः" इतितु तत्वकथनं ॥ கீழ்ச்சொன்ன

சந்தோக சுருதியில் யாக பசு விஷயம் ஹிம்ஸை என்று ஒப்புக் கொள்வது போல் நினைக்கக்கூடாதென்றும். யாக பசுவிற்குக் கிடைக்கும் உயர்ந்த க்ஷேமாதிகளை அறியாத பாமர ஜனங்கள் அதை ஹிம்ஸையென்று சொல்லுவதையே அந்த சுருதி அநுவாதம் செய்கிறதேயல்லது ஹிம்ஸையென்று சுருதி கூறவில்லையென்றும், மனுஸ்மிருதியிலும் "வதம்" என்று சொல்லுது பாமர புத்தியை அநுவாதம் செய்கிறதென்றும் 'வதமன்று', என்பது தான் தத்வமென்று அறியவேணுமென்றும் ஸ்ரீ தேசிகன் மேற் கண்ட வாக்யத்தால் ஸமாதானம் கூறினார். ஆதலால் யாக பசு விஷயத்தை எங்கேயாவது ஹிம்ஸையென்று மேலிழுந்த வாரியாக வாவது சாஸ்திரங்கள் பிரஸ்தாவித்தாலும் அது பாமர புத்தியை அநுவதித்துப் பேசியதென்று அறியவேண்டுமாய் ஸ்ரீ தேசிகன் வியவஸ்தையைக் காட்டினார்.

இதிலிருந்து ஸ்ரீ தேசிகாதி பூர்வாசார்யர்கள் வேதவிஹிதமான யாக பசுவிஷயத்தை எவ்வளவு பலமாயும், உறுதியாயும், தெளிவாயும் ஆதரிக்கிறார்களென்பதை ஸம்பிரதாய ஸ்தர்கள் கவனிக்கவேணும், யாக பசு விஷயத்தை "ஹிம்ஸை" என்று பேசுவதையும், நினைப்பதையும் கூட ஸ்ரீ தேசிகன் ஸஹிக்காததுடன், ஹிம்ஸையென்று நினைப்பவர்கள் ஒன்றும் அறியாத பாமரர்கள் என்று நிந்திப்பதும் விசேஷமாக கவ

## முமுக்ஷுக்களுக்கும் பசுயாகம்.
## சாந்தோக்ய உபநிஷத்

இனி இங்கு மற்றொரு விசேஷமும் வெளிப்படுவதைக் கவனிக்கவேணும். பக்த-பிரபந்நாதி அதிகாரிகளுக்கும் ஆச்ரம தர்மங்களான யாகாதிகள் அவச்யானுஷ்டேயங்களென்பதும் அவைகளில் பசு விசஸநாதி கர்மங்களும் ஆவச்யகங்களென்பதும் अहिंसन्सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः என்ற சுருதியால் ஸித்திப்பதை ஸ்ரீ தேசிகன் வெளிபடுத்தியிருக்கிறார். இந்த சந்தோக உபநிஷத் சுருதி வாக்யமானது பிரபந்நர் முதலிய முமுக்ஷுக்களான கிரஹஸ்தர்கள் யாவதாயுஷம் நித்யமாகச் செய்யவேண்டிய கர்மாக்களையும், மற்ற நியமங்களையும் விதிக்கிறது:

> कुटुंबे शुचौ देशे स्वाध्यायमधीयानः धार्मिकान् विदधत्, आत्मनि सर्वेन्द्रियाणि संप्रतिष्ठाप्य, अहिंसन् सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः, सखलु एवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकं अभिसंपद्यते न च पुनरावर्तते न च पुनरावर्तते । என்று

இதில். முமுக்ஷுவான பிராம்மணன் "குடும்பத்தில் (கிருஹஸ்ச்ரமத்தில்) வேதாத்யயனத்தையும், வேதோக்த கர்மங்களையும் செய்துகொண்டும் இந்திரிய நிக்ரஹம் செய்தும், யாகத்தில் தவிர மற்ற கார்யங்களில் பிராணி ஹிம்ஸையை விலக்கியும் இவ்வாறெல்லாம் யாவதாயுஷம் இருப்பானாகில் அவன் பிரம்ஹலோகத்தை அடைகிறான். மறுபடியும் திரும்புவதில்லை" என்று சொல்லப்படுகிறது. பக்த—பிரபன்னாதி எல்லா முமுக்ஷுக்களும் புனராவ்ருத்தியற்ற பிரம்ஹலோகப் பிராப்தி என்கிற மோக்ஷத்தை அடைகிறார்களென்பதை வைதிகமதமானது இந்த சந்தோக சுருதி மூலம்தான் நிச்சயித்தது. பிரம்ஹ ஸூத்ரகாரர் இந்த சுருதியை மூலமாகக் கொண்டே अनावृत्तिश्शब्दात என்ற ஸூத்ரத்தைச் செய்தார்.

இப்படி வைதிக மதத்திற்கு பிராணஸ்தானமாயுள்ள இந்த சுருதியான அहिंसन्सर्वभूतानि अन्यत्रतीर्थेभ्यः என்ற வாக்யத்தில்

பிரம்ஹவித்தான முமுக்ஷுவானவன் யாகபசு ஹிம்ஸை தவிர மற்ற ஹிம்ஸைகளை விலக்கவேணுமென்று விதிப்பதன் மூலம் யாக பசு ஹிம்ஸையை முமுக்ஷுவும் அனுஷ்டிக்கும்படி விதித்திருப்பது முக்ய விஷயமாகும். ஸ்ரீ தேசிகனும் இதை மேற் கண்ட தாத்பர்ய சந்திரிகாவாக்யத்தால் ஸ்திரப்படுத்தியிருப்பதும் அசைக்க முடியாத பிரமாணமாயிருக்கிறது. பிரம்ஹவித்தான பரமைகாந்திக்கும் பசு ஹிம்ஸாயுக்தமான ஜ்யோதிஷ்டோமாதிகள் யாவதாயுஷம் அவச்யானுஷ்டேயங்களென்பதற்கு இந்த சந்தோக சுருதியே அநந்யதா ஸித்த பிரமாணமாயிருக்கிறது.

இந்த சுருதியில் अन्यत्रतीर्थेभ्यः என்பதில் तीर्थ என்கிற பதமானது யாகம் என்ற அர்த்தமுள்ளது. तीर्थं शास्त्राध्वर क्षेत्रोपायोपाध्यायमन्त्रिषु என்று கோசமாகும். ஸ்ரீதேசிகன் இந்த அர்த்தத்தையே அங்கீகரிப்பது ஸ்பஷ்டம். "சாஸ்திரம்" என்ற அர்த்தம் கொண்டாலும் "சாஸ்திர விஹித ஹிம்ஸை தவிர" என்ற அர்த்தமேற்படும்.

### கீதையில் யாக பசு விஷயம்
### ஸ்ரீ பகவானின் உபதேசம்

கீதையில் பதினெட்டாவது அத்யாயத்தில் ஸ்ரீ பகவான் ஜ்யோதிஷ்டோமாதி கர்மாக்களை முமுக்ஷுக்களும் அவச்யம் அனுஷ்டிக்கவேண்டுமென்று சொன்னதைக் கீழே விஸ்தாரமாக நிரூபித்தோம். அங்கு त्याज्यं दोषवदित्येके कर्मप्राहुः मनीषिणः என்ற சுலோகத்தில் யக்ஞாதிகர்மா பசு ஹிம்ஸாதிதோஷயுக்தமாயிருக்கிறபடியால் த்யாஜ்யமென்று காபிலாதி சில மதஸ்தர்கள் கூறுவதாக பூர்வபக்ஷத்தை ஸ்ரீ பகவான் காட்டி

यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चेति पावनानि मनीषिणां ॥

என்பதால் யக்ஞாதிகள் முமுக்ஷுக்களுக்கும் பரம பரிசுத்திகரங்களாகையால் அவைகளை த்யஜிக்கக் கூடாதென்றும் அவச்யம் செய்யவேண்டியதுதான் என்றும் சொல்லி காபிலாதி பூர்வபக்ஷத்தின் நிரஸனம் செய்தார். காபிலர் ஹிம்ஸாதோஷமிருப்பதா

கச் சொன்னதை ஸ்ரீபகவான் पावनानि என்ற பதத்தால் நிரஸி னம் செய்து அது தோஷமல்லவென்றும் பரிசுத்திகரமென்றும் ஸித்தாந்தம் கூறினர்.

### தாத்பர்ய சந்திரிகையில் விவரணம்

இந்த விஷயம் இங்கு தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிக ஞல் ஸ்பஷ்டமாக்கப்பட்டிருக்கிறது. त्याज्यं दोषवत् என்ற சுலோ கத்தின் தாத்பர்ய சந்திரிகையில் பூர்வபக்ஷாபிப்பிராயப்படி தோ ஷத்தை ஸ்ரீ தேசிகன் முதலில் விவரணம் செய்கிறார்.

वैधहिंसापि कापिलैः निषिद्धत्वेन दोषतया अंगीक्रियते। यथोक्तं ईश्वर कृष्णेन– "दृष्टवदानुश्रविकः सह्यविशुद्धिःक्षयातिशय-युक्तः" इति।

उक्तंचपंचशिखाचार्यैः-"स्वल्प संकरः सुपरिहरः सप्रत्यवमर्शः" इति।

अतः वैधहिंसा पुरुषस्य दोषमावक्ष्यति, क्रतोश्च ऽपकरिष्यति इति तन्मतं॥

என்பதால் காபிலர்கள் யாகபசு ஹிம்ஸையால் யாகத்திற்கு உப காரமுண்டாகிலும் யஜமானனுக்கு ஸ்வல்பதோஷமுண்டு என்று சொல்லியிருப்பதை ஸ்ரீதேசிகன் விவரித்துவிட்டு पावनानिमनीषिणां என்கிறதற்கு வ்யாக்யானம் செய்கையில்

एवं पावनत्वोक्त्या त्याज्यंदोषवत् इति पक्षः प्रतिक्षिप्तः

என்ற வாக்யத்தால், கபிலருடைய பூர்வபக்ஷம் நிரஸனம் செய் யப்பட்டது என்று ஸாதித்து யாகபசு ஹிம்ஸை பரிசுத்த மென்பதை ஸ்தாபித்தார். அதாவது अशुद्धमितिचेन्नशब्दात् என்ற பிரம்ஹஸூத்ர ஸித்தாந்தமே மேற்படி கீதாவாக்யத்தாலும் உறுதி செய்யப்படுகிறதென்பதை ஸ்ரீ தேசிகன் விளக்கினர்

கீதையில் पावनानिमनीषिणां என்பதில் "மநீஷி" என்பதற்கு ஸ்ரீ பாஷ்யகாரர் விவரணம் செய்கையில்

मनीषिणां—मननशीलानां पावनानि। मननं उपासनं। मुमुक्षूणां यावज्जीवं उपासनं कुर्वतां ॥

என்பதால் யாவஜ்ஜீவம் உபாஸனஙம் செய்யும் முமுக்ஷுக்கள் என்று அர்த்தம் செய்துள்ளார். ஆகையால் முமுக்ஷுக்கள் பசு விசஸனயுக்தமான யக்ஞாதிகர்மாக்களை அவச்யமனுஷ்டிக்க வேண்டுமென்று மேற்படி கீதையாலும், கீதாபாஷ்யத்தாலும், தாத்பர்ய சந்திரிகையாலும் ஸ்திரப்படுகிறது.

### பாதுகாஸஹஸ்ரத்தில் ஸ்ரீ தேசிகன் கூறுவது

ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரத்திலும் ஸ்ரீ தேசிகன்—

श्रुतिशिरसि निगूढं कर्मणां चोदितानां त्वदवधि विनिवेशं नाधिगन्तुं क्षमाणां। परिहसति मुरारेः पादुके! बालिशानां पशुवध परिशेषान् पण्डितो नामयज्ञान् ॥

என்கிற சுலோகத்தில், ஜ்யோதிஷ்டோமாதி கர்மாக்களை, அக்நி இந்திராதி கேவல தேவதைகளை உத்தேசித்துச் செய்யாமல் பகவானே அந்தர்யாமி, ஸர்வகர்மாராத்யன் என்று உபநிஷத்துக்கள் கூறியபடி பகவத்பர்யந்தமாக அநுஸந்தித்துச் செய்யவேணுமென்றும், இப்படி பகவத் பர்யந்தமாக அநுஸந்தித்துச் செய்யப்படாத யக்ஞங்கள் பசுவத பரிசேஷமாகவே ஆகுமென்று சிக்ஷிப்பதன் மூலம் ஸ்ரீதேசிகன், பரமைகாந்திகளான பிரம்மஙிஷ்டர்கள்கூட, பசு விசஸனஸாத்யஜ்யோதிஷ்டோமாதி நித்யநைமித்திக வர்ணாச்ரம தர்மங்களை பகவத்பர்யந்தமாக அநுஸந்தித்து அனுஷ்டிக்கவேண்டுமென்பதைக் காட்டியிருப்பதும் முக்யமாக கவனிக்கத்தக்கது.

### யஜமானனுடன் சேர்ந்தே பசுவுக்கு உத்தமலோகம். நியாயஸித்தாஞ்ஜனத்தில் ஸ்ரீதேசிகன்

யாகபசு விஷயமாக ஸம்பிரதாயப்படி வேறு ஒரு விசேஷத்தையும் ஸ்ரீதேசிகன் நியாயஸித்தாஞ்ஜனத்தில் நிரூபிக்கிறார். அங்கு ஜீவபரிச்சேதத்தில் ஜீவனுக்கு மோக்ஷோபாயங்களைக்கூறி வருகையில், வைஷ்ணவ ஸமாச்ரயணத்தாலும் ஜீவனுக்கு மோக்ஷம் கிடைக்கிறதாகச் சொல்லி, அதற்கு யாகபசுவையே உதாஹரணமாகக் குறிப்பிடுகிறார். யஜமானன் செய்யும் யாகத்தில்,

ஸம்பந்தப்பட்ட யாகபசுவும் அந்த யஜமானனோடு கூடவே உத்தம லோகங்களை அடைகிறதாக சாஸ்திரம் கூறுகிறதென்பதைக் காட்டி, அதுபோலவே வைஷ்ணவ ஸமாச்ரயணம் பெற்ற ஒரு ஜீவன், அந்த வைஷ்ணவன் செய்யும் ஆத்மாத்மீய பரந்யாஸத்தால், அந்த வைஷ்ணவனோடு (ஆசார்யனோடு) சேர்ந்தே மோக்ஷ ஸித்திபெறுகிறான் என்று ஸ்ரீ தேசிகன கூறுகிறார்—

यजमानेन सह पश्वादीनां स्वर्गादि गमनवद्वा मोक्षसिद्धिः । "यजमानेन सहिताः स्वर्गं यान्ति नराधिप!।" इतिहि महाभारतोक्तिः। என்று

ஆகையால் யாகபசுவும், யஜமானனும் சேர்ந்தே உத்தம லோகம் அடைகிறதாக மஹாபாரத வசனப்பிரமாணத்தைக் காட்டி அதுபோலவே ஆசார்யன் அநுஷ்டிக்கும் ஆத்மாத்மீய பரந்யாஸத்தால் ஆசார்யனுக்கும், சிஷ்யனுக்கும் சேர்ந்தே மோக்ஷஸித்தியென்பதை ஸமர்த்தித்துள்ளார்

• இங்கு காணப்படும் ஸ்வர்க்க பதமானது பொதுவாக உத்தமகதி என்பதையே குறிக்கிறது. மனுவானவர் आत्मानं च पशूंश्चैव गमयत्युत्तमां गतिं எனபதால் பொதுவாக யஜமானனுக்கும் பசுவுக்கும் சேர்ந்து உத்தமகதி ஏற்படுவதாகவே கூறுகிறார். மேலும் ஸ்வர்க்கம் என்ற பதம் உபநிஷத் முதலியவைகளில் மோக்ஷத்தையும் சொல்லுகிறதாயும் காண்கிறோம். தவிர ஸ்வர்க்க பலனையே உத்தேசித்து ஒருவன் யாகம் செய்தால் அவனுக்கு ஸ்வர்க்கமே கிடைக்கிறது. அப்போது யாகபசுவும் அவனோடு சேர்ந்து ஸ்வர்க்கத்திற்கே செல்லுகிறது. நித்யமாயும் வர்ணாச்ரமதர்மரூபமாயும் ஒருவன் யாகம் செய்தால் அவனுக்கு மோக்ஷமே பலன். அப்போது பசுவும் அவனோடு மோக்ஷம் போகிறது. பிரம்ஹவித்யாங்கமாக பிரம்ஹநிஷ்டர்கள் அநுஷ்டிக்கும் யாகங்களிலும் யஜமானனுக்கும் பசுவுக்கும் சேர்ந்து பிரம்ஹலோக பிராப்திதான் ஏற்படுகிறது. अहिंसन् सर्वभूतानि अन्यत्र तीर्थेभ्यः என்ற சாந்தோக்யப்படி பசு கார்யத்துடன் கூடிய யாகாதிகளைச் செய்கிறவனுக்கு புனராவ்ருத்தியற்ற பிரம்ஹலோகப்ராப்தி சொல்லப்படுகிறது. அங்கும் யஜமானனோடு பசு

வுக்கும் பிர்ம்ஹ லோகப்ராப்திதான் பலன். இதுபோல் यान्तिम-याजिनोऽपिमां என்று கீதையில் பகவான் சொல்லுகிறபடி ஜ்யோதிஷ்டோமாதிகளால் பகவானை யஜிக்கிறவர்களும் யாகபசுவுடன் பகவானை அடைகிறதாயும் ஸ்ரீ தேசிக வாக்யத்தால் ஏற்படுகிறது. ஆகையால் தான் மேற்படி ஙியாயஸித்தாஞ்ஜனவாக்யத்தில் स्वर्गादि என்று ஆதிபதத்தைச் சேர்த்து ஸ்ரீ தேசிகன் ஸாதிக்கிறார். அந்த ஆதிபதத்தால் மோக்ஷாதிகளையும் கிரஹிக்கவேண்டுமென்பது திருவுள்ளமாகிறது.

### அதிகரண ஸாராவளியிலும் ஸ்ரீ தேசிகனின் நிர்ணயம். ஹிம்ஸை, யாக பசுவுக்கு ஹிதம்

அதிகரணஸாராவளியிலும் ஸ்ரீ தேசிகன் யாகபசு விஷயமான ஸித்தாந்தத்தை பூர்வபக்ஷ ஸித்தாந்தரீதியில் உபபாதனம் செய்திருப்பதை இங்கு வெளியிடுவோம். பிர்ம்ஹஸூத்ரம் 3-வது அத்யாயம் முதல் பாதத்தில் अशुद्धमितिचेन्नशब्दात् என்ற ஸூத்ர அதிகரணஸாராவளியில் சொல்லுவதாவது:—

हिंसायोगात् अशुद्धं श्रुतिविहितमपि न्याय्यमिष्टादिकं तत्
पापांशं व्रीहिभावप्रभृतिषु सुकृती भुङ्क्तइत्यप्ययुक्तं ।
उक्ता मन्त्रार्थवादैः पशुहितमिति सा तच्चिकित्सावदेषा
ब्रूते यज्ञे वधोऽसाववधइति मनुः स्तौति निन्दान्विहान्यत् ॥

இந்த சுலோகத்தில்

"யாகாதிகர்மாக்கள் வேதவிஹிதங்களாயிருந்தபோதிலும் பசு ஹிம்ஸையுள்ளவைகளாயிருப்பதால் அசுத்தங்களென்றும், ஸ்வல்பமான அந்த ஹிம்ஸாதோஷத்தால் யஜமானனுக்கு வ்ரீஹி (நெல்) முதலிய ஜன்மங்கள் உண்டாகிறதாயும் ஸாங்க்யர்கள் சொன்ன பூர்வபக்ஷமானது யுக்தமன்று.

ஏனெனில், யாகபசு ஹிம்ஸையானது மந்திரங்களாலும், அர்த்தவாதங்களாலும் அந்த பசுவுக்கு ஹிதமென்று சொல்லப்படுகிறது. (வியாதிஸ்தனுக்கு சஸ்திரசிகித்ஸை எப்படி ஹிதமோ அப்படியேதான் யாகத்தில் ஹிம்ஸையும் பசுவுக்கு ஹித

கரம். மனுவும் "யாகத்தில் செய்யப்படும் வதமானது வதமே யல்ல" என்று சொல்லுகிறார்.

ஆகையால் புராணாதிகளில் எங்கேயாவது யாகபசு ஹிம்ஸை நிந்திக்கப்பட்டிருந்தால் அது மற்றொன்றை பிரசம்ஸை செய்யும் நோக்கத்துடன் நிந்திப்பதாக நினைக்கவேணும்" என்று ஸ்ரீதேசிகன் ஸாங்க்யமதத்தை நிரஸித்து "ஹிம்ஸையல்ல" என்கிற வைதிகமத ஸித்தாந்தத்தை நிலையிட்டார்.

அங்கு ஸ்ரீ குமாரவரதாசாரியர் திருவுள்ளம்.

இந்த சுலோகவ்யாக்யானத்தில் ஸ்ரீ தேசிகன் திருக்குமாரர் ஸ்ரீகுமாரவரததேசிகனும் இவ்விஷயமாக ஸாதிப்பதாவது:—

भगवान् मनुः यज्ञे वधस्य वधत्वमेव नास्तीत्याह। हिंसात्वं नास्तीत्यर्थः। अशास्त्रीयमार्गेण प्राणवियोजने हि हिंसात्वं प्रसज्यते ?........

यथा राज्ञां युद्धे शत्रुवधः न हिंसा। सर्वत्र विषयभेदेन हि पुण्यापुण्य व्यवस्था। आत्महननमपि क्वचित् पुण्यकोटिं आटीकते। तेन न यज्ञादिषु हिंसा। न च तत्फलानुभवः, नापि विधिस्पृष्टो दोषः। नापि हिंसकत्वं वैदिकानां इति रमणीयमेतत् ॥

"பகவான் மனு, யாகபசு வதத்திற்கு வதத்வமே (ஹிம்ஸையே) கிடையாதென்று சொல்லுகிறார். அதாவது ஹிம்ஸாத்வமே இல்லையென்று அர்த்தம். சாஸ்திர விருத்தமாக பிராண வியோகம் செய்விப்பதிலல்லவோ ஹிம்ஸாத்வம் ஏற்படும்? அரசர்களுக்கு யுத்தத்தில் சத்ருவதம் எப்படி ஹிம்ஸையன்றோ அதுபோல். எங்கும் புண்ய-அபுண்யங்கள் விஷய பேதேந வியவஸ்திதங்கள். ஆத்மஹத்திகூட சில விஷயங்களில் புண்யமாகிறது ஆகையால் யாகபசு விஷயம் ஹிம்ஸையேயல்ல. ஆதலால் ஹிம்ஸாபலனான பாபாநுபவமும் கிடையாது. வைதிகர்கள் ஹிம்ஸை செய்கிறவர்களென்ற பேச்சுக்கும் இடமில்லை, என்று இந்த ஸித்தாந்தம் யாவற்றும் மிக அழகாயுள்ளது". என்ற இந்த வாக்யங்களால் ஸ்ரீ குமாரதேசிகனும் பிரமாண நியாயாதிகளால் யாகபசு விஷயம் ஹிம்ஸையல்லவென்பதை ஸ்தாபித்தார்.

### அதிகரணஸாராவளியில் பிஷ்ட பசு ப்ரஸ்தாவம்

மேலும் ஸ்ரீ தேசிகன் அதிகரணஸாராவளியில் அடுத்த சுலோகத்திலும் ஸாங்க்ய மதத்தை எடுத்துக் கண்டித்து யாகபசு விஷயத்தை ரக்ஷணமென்று ஸ்தாபிக்கிறார்.

कर्तुःदोषंदिशेत् संज्ञपनमिहपशोः तत्कृतोऽश्चोपकुर्यात्
तस्मादस्मिन्निषेधं क्षिपति न विधिरित्यब्रुवन् सांख्यभक्ताः ।
निर्धूते पश्वनर्थे नखलु तदुचितं पिष्टपश्वादिकल्पः
तत्तत्कालाधिकारिप्रतिनियत इति क्वापि नस्यात् विरोधः ॥

இந்த சுலோகத்தினால் ஸ்ரீதேசிகன் ஸாதிப்பதென்னவென்றால்:-

"ஸாங்க்யமத பக்தர்கள் யாகபசு விஷயமாக மறுபடி ஆக்ஷேபிப்பதென்னவென்றால், யாகபசு ஹிம்ஸையால் யாகத்திற்கு உபகாரம்தான். அதாவது அந்த ஹிம்ஸை செய்யாமல் யாகம் பூர்த்தியாகாதென்பது வேதத்தின் நிர்ணயம். ஆயினும் அதனால் யஜமானனுக்கு ஸ்வல்பதோஷம் ஏற்படுவதாயும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் "அக்நிஷோமீயம் பசுமாலபேத" என்ற யாகபசு ஹிம்ஸாவிதியானது "நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதானி" என்ற பொதுவான ஹிம்ஸாநிஷேதத்தைப் பாதிக்காது. இரண்டும் தனித்தனியானவைகளே என்று ஸாங்க்யர்கள் சொல்லுகிறார்கள். இதுவும் தப்பு.

ஏனெனில், யாகபசுவுக்கு ஹீன ஜந்மம்போய் உயர்ந்த சரீரமும், உயர்ந்த லோகமும் கிடைத்து மிகுந்த க்ஷேமமேற்படுவதாக சுருதியே சொல்லுவதால் ஸாங்கியர் ஹிம்ஸையென்றும், ஸ்வல்பதோஷமுண்டென்றும் சொல்லும் கக்ஷியானது ஒப்பக்கூடியதல்ல".

### பிஷ்டபசு ஆகமாதிகாரி விஷயம்;
### யுகாந்தரவிஷயமென்றும் ஸ்ரீதேசிகன் நிர்ணயம்.

ஆனால் இதற்குமேல் ஸாங்க்யர் மற்றொரு ஆக்ஷேபம் கிளப்பினர். அதாவது—மஹாபாரதத்தில் உபரிசரவஸு என்ற அரசயாகத்தில் பிஷ்டபசு (மாவினால் செய்த பசு) வைத்து யாகம் செய்ததாகக் காணப்படுகிறதே? யாகபசு விஷயம் ஹிம்ஸை

யே அல்லவென்றால் பிஷ்ட பசு யாகம் எப்படிப்பொருந்தும்? ஹிம்ஸை என்கிற காரணத்தால் தானே அதைவிட்டு மாவினால் பசு செய்து யாகம் நடத்தினான்? ஆகையால் இது விரோதிக்கிறதே என்று ஸாங்க்யாதிகள் கக்ஷி சொல்லியதற்கு ஸமாதானமாகவே இந்த சுலோகத்தில் ஸ்ரீ தேசிகன் மேற்படி பிஷ்டபசு ஆக்ஷேபத்தை எடுத்து அதை நிரஸனம் செய்கிறார். பிஷ்டபசு யாகமானது ஏதோ ஒரு காலத்தில் இருந்த ஒரு தனிப்பட்ட அதிகாரிக்காகமட்டும் ஏற்பட்ட ஒரு விசேஷ விஷயமாகையால் வைதிக அதிகாரிகளாகிய நமக்கு அது உபாதேயமல்லவென்று ஒதுக்கவேண்டியதே. ஆகையால் அஹிம்ஸை, ரக்ஷணம் என்ற நமது ஸித்தாந்தத்திற்கு எவ்வித விரோதமும் இல்லை என்று ஸ்ரீ தேசிகன் पिष्टपश्वादिकल्पः तत्तत्कालाधिकारिप्रतिनियत इति क्वापि नस्यात् विरोधः என்பதால் ஸித்தாந்தம்கூறினார். பிஷ்டபசுவானது வைதிகர்களாகிய நமக்கு உபாதேயமல்லவென்று ஸித்தாந்தம் செய்து அதை ஒதுக்காவிட்டால் பிரத்யக்ஷபசு விஷயம் அஹிம்ஸை, ரக்ஷணமென்று நாம் ஒப்புக்கொண்டதற்கு விரோதம் ஏற்படுவது ஸ்பஷ்டமாயிருக்கிறதல்லவா? இந்த விரோதத்தைப் பரிஹரித்து அஹிம்ஸை, ரக்ஷணமென்ற ஸித்தாந்தத்திற்கு யாதொரு ஹானியும் ஏற்படவில்லையென்பதையே மேற்கண்ட அதிகரண ஸாராவளியில் ஸ்ரீ தேசிகன் ஸாதித்தார்.

இந்த பிஷ்டபசு விஷயமாக ஸ்ரீ தேசிகன் சர்ச்சைசெய்து அது ஒரு கால விசேஷத்திலும், ஒரு அதிகாரி விசேஷத்திலும் நியதமேயல்லது எல்லாக் காலத்திலும் எல்லோருக்கும் ஏற்பட்டதல்லவென்று இங்கும், தாத்பர்ய சந்திரிகையிலும் ஸ்பஷ்டமாக ஸாதித்திருப்பதைச் சுருக்கமாகக் கூறுவோம்.

முதலில் மேற்படி அதிகரண ஸாராவளியிலேயே இது வெகு தெளிவாயிருப்பதைப் பார்க்கவும். பிஷ்டபசுவானது तत्तत्कालाधिकारिप्रतिनियतः என்று ஸாதிக்கிறார். அதாவது—"பிஷ்டபசுவானது அந்தக் காலத்திற்கும் அந்த அதிகாரிக்கும் பிரத்யேகமாக ஏற்பட்டதாகும்" என்கிறார். இங்கு (तत्काल) "அந்தக்

காலம்'' என்பதால் பிஷ்டபசு யாகம் நடந்த காலத்தைக் குறிப் பிடுகிறார். (तदधिकारि) ''அந்த அதிகாரி'' என்பதால் பிஷ்டபசு யாகம் செய்த ஒரு அதிகாரியைக் குறிப்பிடுகிறார். (प्रतिनियत) என்பதால் ''பிறருக்கு அதிகாரமில்லாமல் அவனுக்குமாத்ரம் ப்ரத்யேகமாக ஏற்பட்ட விஷயம்'' என்று சொல்லுகிறார். ஆகையால் பிஷ்டபசு நடந்ததாகக் கூறப்படும் கிருதயுக காலத் தில்மட்டும்தான் அது செய்யலாம். அதிலும் பிஷ்டபசு செய்த தாகச் சொல்லப்படும் உபரிசரன் என்ற ஒரு அதிகாரிமட்டும் தான் அதை செய்யலாம். மற்ற காலத்திலும், மற்ற அதிகாரி களுக்கும் பிஷ்டபசு ஏற்பட்டதல்ல என்று அந்த வாக்யத் தில் ஸ்ரீ தேசிகன் வ்யவஸ்தை ஸாதித்தார். இதனால் இக் காலத்திய வைதிக அதிகாரிகளாகிய நமக்கு அது உபாதேய மல்லவென்பதை ஸ்திரப்படுத்தினார்.

**பிஷ்டபசு ஆகமதந்த்ர நிஷ்ட அதிகாரி விஷயம்.**
**தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீ தேசிகன் நிர்ணயம்**

இது ''ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய'' என்ற கீதாச்லோக தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகனால் இன்னும் தெளிவாக் கப்பட்டிருப்பதைக் காணலாம். அங்கு

**पिष्टपश्वादि विधिस्तु कार्तयुगधर्मनिष्ठाधिकारिविशेषनियतः।**
**"शृणु यज्ञैः कथं हिंस्रैः मादृशो यष्टुमर्हति" इतिवचनाच्चेतिभावः॥**

என்று ஸாதிக்கிறார். மேற்படி சுலோக கீதாபாஷ்யத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் யாகபசு விஷயத்தை நிர்ணயிக்கும்போது

**தாத்பர்ய சந்திரிகார்த்த விவரணம்**

**अग्नीषोमीयादिषु च न हिंसा पशोः।** என்றும்
**रक्षणमेव अग्नीषोमीयादिषु संज्ञपनं**

என்றும் வாக்யங்களால் யாகபசு விஷயம் ஹிம்ஸையே அல்ல வென்றும் ரக்ஷணமென்றும் ஸித்தாந்தம் கூறியதற்கு ஸ்ரீ தேசிகன் வ்யாக்யானம் செய்கையில், அஹிம்ஸை, ரக்ஷணம் என்ற ஸ்ரீ பாஷ்யகார ஸித்தாந்தத்தைப் பல வழியால் போஷித்து ஸ்திரப்படுத்திவிட்டு அடுத்த வாக்யத்தால் பிஷ்ட

பசு பிரஸ்தாபத்தை எடுத்து அதை நிரஸனம் செய்து ஸமாதானம் ஸாதிக்கிறார்.

அதாவது :-அஹிம்ஸை, ரக்ஷணமென்பதே சாஸ்திர நிர்ணயம். இப்படியிருக்க, பிஷ்டபசுவிதியோவென்றால், கார்த்தயுக தர்மநிஷ்டனை ஒரு தனிப்பட்ட அதிகாரிக்காகவே ஏற்பட்டது. ஏனெனில் அந்த பிஷ்டபசு அதிகாரியானவன், யாகபசு விஷயத்தை ஹிம்ஸை என்று சொல்லும் மதத்தைச் சேர்ந்தவனுயிருக்கிறான்" என்று

இதில் ஸ்ரீதேசிகன பிஷ்டபசுசெய்த உபரிசரனை ருக்-யஜுஸ் ஸாம என்கிற த்ரயீ வேத நிஷ்டனல்லவென்று "அதிகாரி விசேஷ" என்பதால் குறிப்பிடுகிறார். ஏனெனில் த்ரயீவேதமானது யாகபசு ஹிம்ஸையை விதிப்பதுடன் அந்த ஹிம்ஸை தர்மமென்று கூறுகிறது. இந்த வேத பிரமாணத்தைக்கொண்டுதான் வேதாந்த பிரம்ஹ ஸூத்ரத்திலும் "அசுத்தமிதிசேந்ந சப்தாத்" என்ற ஸூத்ரத்தால் யாகபசு ஹிம்ஸை அஹிம்ஸையென்றும், தோஷமற்றதென்றும் ஸித்தாந்தம் கூறி ஸாங்க்யமதத்தை நிரஸனம் செய்யப்பட்டிருக்கிறது. மனுவாதி ஸகல ஸ்மிருதிகளும் யாகபசு ஹிம்ஸை தர்மமென்று கூறுகின்றன. இப்படியிருக்க வேதாதி ஸகல பிரமாணங்களுக்கும் விருத்தமாக உபரிசரன் யாகபசு விஷயம் ஹிம்ஸையென்று நினைக்கிறான். ஆதலால் அவன் த்ரயீ வேதங்களையும், வேதாந்தங்களையும் அநுஸரிக்காத ஓர் விலக்ஷண அதிகாரி ஆகையால் அவனுடைய பிஷ்டபசு அநுஷ்டானம் த்ரயீவேத நிஷ்டர்களுக்கு பிரமாணமாகாது. ஆகையால் ஸ்ரீ பாஷ்யகாராதிகள் ஸாதித்த அஹிம்ஸை, ரக்ஷணம் என்ற நம்து வைதிக ஸித்தாந்தத்திற்கு எவ்வித விரோதமும் இல்லையென்று தாத்பர்ய சந்திரிகாவாக்யத்தால் ஸ்ரீ தேசிகன் ஸாதித்தார். பிஷ்டபசுவை ஒப்புக்கொண்டால் ப்ரத்யக்ஷபசுவிற்கு ஹிம்ஸாத்வத்தை அங்கீகரித்ததாகும். ஹிம்ஸையென்று ஒப்புக்கொண்டால் ஸாங்க்ய மதத்தை ஒப்புக்கொண்டதாகும். அப்போது "அசுத்தமிதிசேந்ந சப்தாத்" என்ற வேதாந்த ஸூத்ர ஸித்தாந்தமே வ்யாகுலமாகிவிடும். இவ்வளவு விரோதத்தையும் கவனித்தே ஸ்ரீ தேசிகன் பிஷ்டபசுவை

அவைதிகனான உபரிசரன் விஷயமென்று நிர்ணயித்தும், நிரஸி த்தும், அதனால் நம் ஸித்தாந்தத்திற்கு எவ்வித விரோதமு மில்லையென்று நிர்ணயித்தார்.

மேற்படி தாத்பர்ய சந்திரிகா வாக்யத்தின் கடைசியில் "इति भावः" என்று ஸ்ரீ தேசிகன் ஸாதிப்பதிலிருந்து பிஷ்ட பசு வானது கார்த்தயுக தர்மநிஷ்டனான ஒரு அதிகாரி விசேஷனு க்கு மாத்திரம் ஏற்பட்டதென்பது கீதாபாஷ்யகாரராகிய நம் ஆசார்யனுக்கும் திருவுள்ளமென்பதைக் காட்டினார். பிரத்யக்ஷ பசு விஷயமானது அஹிம்ஸையென்றும், ரக்ஷணமென்றும் ஸ்ரீ பாஷ்யகாரரின் ஸித்தாந்தமாகையால் அவர் பிஷ்ட பசுவை அங்கீகரிக்கமுடியாதல்லவா ?

## உபரிசரவஸு த்ரயீ வேதநிஷ்டனல்லன் ஏகாயந ஆகமநிஷ்டனே.

பிஷ்டபசு அனுஷ்டித்த உபரிசரன் எத்தகைய அதிகாரி ? அவன் த்ரயீவேதநிஷ்டனா ; ஆகமசாஸ்திர நிஷ்டனா ? அவன் செய்த பிஷ்ட பசு யாகம், அதன் மந்திரங்கள், பிரயோகங்கள் ஆகிய எல்லாம் த்ரயீ வேதப்படி நடந்தனவா ? இத்யாதி விஷ யங்களை மஹாபாரதத்திலிருந்தும், பாரமேஶ்வர ஸம்ஹிதையி லிருந்தும் பார்த்தால் ஸ்ரீ தேசிகன் அவன் விலக்ஷணாதிகாரி யென்றும் த்ரயீவேதவிதிக்கு உள்பட்டவனல்லனென்றும் ஸாதி த்தது நன்கு புலப்படும்.

உபரிசரன் நல்ல பகவத் பக்தன். ஆனாலும் அவன் த்ரயீ வேதநிஷ்டனல்லன். ஏகாயநம் என்றும் மூலவேதமென்றும் சொ ல்லப்படுகிற ஆகமஸித்தாந்த நிஷ்டன். அவனுக்கு காயத்ரீ முதலான த்ரயீ வேத மந்திரங்கள் கிடையா. உபநயநாதி ஸம்ஸ்காரங்களெல்லாம் ஆகமசாஸ்திரப்படியே செய்துகொண்ட வன். அவன் செய்த அச்வமேதயாகம் என்ற பெயருள்ள யாக மானது த்ரயீவேத விஹிதமான அச்வமேதமல்ல. ஏகாயந விதிப்படி, விலக்ஷணமான மந்திரங்களாலும் விலக்ஷண பிரயோ கங்களாலும் செய்யப்பட்டது அந்த அச்வமேதம். இத்யாதி விஷயங்கள் பாரமேச்வர ஸம்ஹிதையில் தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றன.

### உபரிசரவஸு செய்தது விலக்ஷண அச்வமேதம் மந்திரம், பிரயோகம் எல்லாம் வேறு. பாரமேச்வர ஸம்ஹிதா பிரமாணம்.

பாரமேச்வர ஸம்ஹிதை முதலாவது அத்யாயத்தில் ஸ்ரீ சாண்டில்யர் கூறுகையில், சித்ரசிகண்டிகள் என்ற ஏழு ரிஷிகள் சேர்ந்து உபரிசரனுக்காகவே தனியாக ஒரு சாஸ்திரத்தைக் கல்பித்ததாகவும் அதற்கு "மூலவேதம்" "ஏகாயனம்" என்று பெயரிட்டதாயும் சொல்லிவிட்டு அந்த மூல வேதத்தில் விலக்ஷண மந்திர பிரயோகத்துடன் கூடிய "அச்வமேதம்" முதலிய பெயருள்ள புதுமாதிரியான விலக்ஷண யக்ஞங்களும் சொல்லப் பட்டிருப்பதாயும் அந்த மூல வேதவிதிப்படியே உபரிசரன் அச்வமேத யக்ஞம் செய்ததாயும் விஸ்தாரமாகச் சொல்லுகிறார்.

एष एकायनो वेदः प्रख्यातः सात्वतो विधिः।

என்பதால் "மூலவேத"த்திற்கு ஏகாயனம் என்ற பெயர் உள்ளதென்பதை ஸ்ரீ சாண்டில்யர் சொல்லிவிட்டு, மேலே சொல்லுவதாவது—

अश्वमेधादयो यज्ञाः आधिकृत्य अच्युतं हरिं।
यथाक्रियन्तेच तथा द्विपदक्षार्णपुरस्सरैः॥
निवृत्तिफलदैः मन्त्रैः तस्यासाधारणै हरेः।
पूजने विनियुज्यन्ते तस्मिन् तस्मिन् च कर्मणि॥
वसूराजोपरिचरः मूलवेदेन संस्कृतः।
स्वर्गलोकाधिकारार्थं एतदुक्तप्रकारतः।
अश्वमेधादिकान् यज्ञान् अन्वतिष्ठत् यथाविधि॥ என்பது

இந்த பாரமேச்வர வசனங்களில், ஏகாயநமென்கிற ஆகம தந்திரத்தில் அச்வமேதாதி யக்ஞங்கள் புதிய மாதிரியில் சொல்லப்பட்டிருப்பது விவரிக்கப்படுகிறதைக் கவனிக்கவும்.

அந்த அச்வமேதாதி யக்ஞங்கள் கேவலம் பகவான் ஒருவனை மாத்திரம் தேவதையாகக் கொண்டவை. அதாவது அக்நி இந்திராதி தேவதைப் பேச்சே கிடையாதென்பது ஒரு விசே

க்ஷம். மேலும் அந்த, தாந்திரிக யக்ஞங்களில், த்ரயீ வேத மந்திரங்களே கிடையா. அதற்குப் பதிலாக "த்விஷட்கார்ணம்" என்கிற த்வாதசாக்ஷர மந்திரத்தை முன்னிட்டவைகளும் நிவ்ருத்தி பலனைக் கொடுக்கக்கூடியனவும் அக்நீந்த்ராதி தேவதா ஸம்பந்தமில்லாமல் நேராக பகவானைக் குறிப்பதுமான பகவன் நாமங்களையுடைய பகவன் மந்திரங்களாலுமே அந்த யக்ஞங்கள் செய்யும்படி விதிக்கப்பட்டிருக்கிறது."

இவ்வாறு சாண்டில்யர் சொல்லிவிட்டு மேற்கண்டபடி விதிக்கப்பட்ட யக்ஞத்தையே உபரிசரன் என்ற அரசன் அனுஷ்டித்தான் என்று உபரிசரனையே உதாஹரணமாக குறிப்பிட்டுச் சொல்லுகிறார். ஆகையால் உபரிசரன் அச்வமேதாதி யக்ஞங்களை மூலவேதமென்கிற ஏகாயந ஆகம சாஸ்திரவிதிப்படியே செய்தானென்பது இதில் தெளிவாக்கப்பட்டிருக்கிறது.

உபரிசரனை मूलवेदेन संस्कृतः என்பதால் உபநயந விவாஹாதி ஸகல ஸம்ஸ்காரங்களையும் ஆகமவிதிப்படி செய்துகொண்டவனென்பது ஸ்பஷ்டமாயிருக்கிறது. த்ரயீ விதிப்படி செய்துகொள்ளவில்லையென்பதும் தெளிவாகிறது.

மேலும் அவன் செய்த அச்வமேதத்தில் द्विषट्कार्ण पुरस्सरैः என்பதாலும் वृनिवृत्तिफलदैः என்பதாலும், तस्यासाधारणैर्हरेः என்பதாலும் த்வாதசாக்ஷராதி ஸாக்ஷாத் பகவத் ப்ரதிபாதக மந்திரங்களே உபயோகப்பட்டனவென்று சொல்லுவதால், ருக், யஜுஸ் ஸாமாதி த்ரயீ மந்திரங்களே இல்லையென்பது ஸ்பஷ்டமாகிறது.

மேலும் एतदुक्तप्रकारतः என்பதால் உபரிசரன் அனுஷ்டித்த யக்ஞ பிரயோகமும் விலக்ஷணமென்றும் ஏகாயந ஆகமத்தில் சொன்னதை அநுஸரித்ததென்பதும் த்ரயீ வேதத்தையோ, ஆபஸ்தம்பாதி கல்பஸூத்ர பிரயோகத்தையோ அநுஸரித்ததில்லையென்பதும் ஸ்பஷ்டமாகிறதால் உபரிசரன் த்ரயீவேத பஹிஷ்க்ருதன் என்பதற்கு வேறு என்ன பிரமாணம் வேண்டும்?

### உபரிசரன் வேதநிஷ்டனல்லன்
### மஹாபாரத பிரமாணம்.

மஹாபாரதத்திலும் உபரிசரன் த்ரயீ நிஷ்டனல்லனென் ஸ்பஷ்டமாயிருக்கிறது. அங்கு

वसुराजोपरिचरः बभूवाधिपतिर्भुवः ।
काम्यनैमित्तिका राजन् यज्ञीयाः परमक्रियाः ।
सर्वाः सात्वतमास्थाय विधिं चक्रे समाहितः ॥

என்று கூறப்படுகிறது. "உபரிசர அரசன் எல்லாவித யக்ஞ கர்மங்களையும்" "ஸாத்வத விதியை" அநுஸரித்தே செய்தான் என்று சொல்லப்படுகிறது. "ஸாத்வத விதி" என்றால் ஏகாயன ஆகமவிதியென்று அர்த்தம். பாரமேச்வர ஸம்ஹிதை முதல் அத்தியாயத்தில்

एष एकायनो वेदः प्रख्यातः सात्वतो विधिः ॥

என்பதால் ஏகாயன ஆகமத்திற்கு "ஸாத்வத விதி" என்ற பெயர் என்று அர்த்தம் விவரிக்கப்பட்டிருப்பதால் மஹாபாரதமும் உபரிசரன் த்ரயீ வேதப்படி யக்ஞம் செய்யவில்லையென்றும் ஆகமவிதிப்படியே செய்தான் என்பதையும் ஸ்திரப்படுத்துகிறது.

மேலும் மஹாபாரதத்தில் உள்ள மற்றொரு முக்ய அம்சமும் கவனிக்கத்தக்கது. பாரமேச்வர ஸம்ஹிதையில் கூறப்பட்டதுபோல் "சித்ர சிகண்டிகள்" என்ற ஏழு ரிஷிகள் மேரு சிகரத்தில் கூடி யோஜித்து உபரிசர வஸுவுக்காகவென்றே நூறு ஆயிரம் சுலோகம் கொண்ட புதிய சாஸ்திரமொன்றைச் செய்ததாயும் அந்த சாஸ்திரப்படியே உபரிசரன் எல்லாக் கர்மாக்களையும் அநுஷ்டித்ததாகவும் பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

तेन शास्त्रेण लोकेषु क्रियास्सर्वाः करिष्यति ॥

என்ற வஸுபாக்யான சுலோகத்தில் வஸுவானவன் தனது நித்யநைமித்திக கர்மாக்கள் எல்லாவற்றையும் அந்தப் புதிய சாஸ்திரப்படியே அனுஷ்டிப்பான் என்று கூறியிருப்பதிலிருந்தும் உபரிசரவஸு வேத நிஷ்டனல்லவென்பதும், புதிய ஆகம சாஸ்திர நிஷ்டனென்பதும் தெளிவாகிறது.

பரமதபங்கத்தில் ஸ்ரீ தேசிகன்:

"உபரிசராதி வ்ருத்தாந்தத்தை உபக்ஷேபித்துக்கொண்டு ஞானகாண்டமென்று ப்ரவ்ருத்தமான திருநாராயணீய பிரபஞ்சமெல்லாம், இந்த பகவச்சாஸ்திரோக்த பரமைகாந்தி தர்மவைபவபரம்"

என்பதால் உபரிசர விருத்தாந்தத்தில் காணப்படும் பல விலக்ஷண விஷயங்கள் ஆகமநிஷ்டபரமைகாந்தி மாத்ர விஷயமென்று ஸாதித்துள்ளார். இதனால் அது த்ரயீ நிஷ்டபரமைகாந்தி விஷயமல்லவென்று நிர்ணயித்தார்.

ஆதலால் பாரமேச்வரம், பாரதம் முதலிய பிரமாணங்களால் உபரிசரன் த்ரயீநிஷ்டனல்லனென்றும் ஆகமநிஷ்டனான விலக்ஷணாதிகாரியென்றும் தெளிவாகத் தெரிவதால்தான் ஸ்ரீ தேசிகன் அவன் செய்த பிஷ்டபசு யாகத்தை கார்த்தயுக தர்மநிஷ்ட விலக்ஷணாதிகாரி விஷயமென்று

पिष्टपश्वादिविधिस्तु कार्तयुगधर्मनिष्ठ अधिकारि विशेषनियतः

என்பதால் ஸாதித்தார்.

## ஆகம ஸித்தாந்தம் வேதவிருத்தம்
## உபரிசரன் ஆகமஸித்தாந்தீ

இங்கு "கார்த்தயுகதர்மம்" என்பதற்கு ஏகாயந சாகா விஹிதமான "ஆகமஸித்தாந்தம்" என்கிற பாஞ்சராத்ர ஆகமப் பிரிவு என்று அர்த்தமாகிறது.

பாஞ்சராத்திர ஆகமத்தில் "ஆகமஸித்தாந்தம்" "மந்த்ர ஸித்தாந்தம்" "தந்திரஸித்தாந்தம்" "தந்திராந்தர ஸித்தாந்தம்" என்கிற நான்கு பிரிவுகள் கூறப்படுகிறன. ஆகம பிராமாண்யத்திலும், ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷையிலும் இந்த பேதங்கள் ஆசார்யர்களால் விவரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவைகளில் "ஆகமஸித்தாந்தம்" என்ற பிரிவானது, த்ரயீவேத விஹித தர்மங்களை த்யஜிக்கும்படி விதிக்கிறது. ரிக்-யஜுஸ், ஸாமாதி த்ரயீவேதஸம்பந்தம் அடியோடு இல்லாமல், ஸர்ப்பா

தானுதி-தாஹாந்த ஸகல ஸம்ஸ்காரங்களையும் முழுவதும் ஆகம விஹித அபூர்வமந்திர-பிரயோகங்களைக்கொண்டு செய்யும்படி விதிக்கிறது. இந்த ஆகம ஸித்தாந்தப்படி உபநயநாதி ஸம்ஸ் காரங்களைச் செய்துகொண்ட அதிகாரிகளுக்கு, द्वादशाक्षरविद्यैव तेषां विद्या न च त्रयी என்ற பாரமேச்வர ஸம்ஹிதாவசனப்படி காயத்ரீ மந்திரம்கூடக் கிடையாது. த்வாதசாக்ஷர மந்திரமே உண்டு. இம்மாதிரி எல்லா ஸம்ஹிதைகளிலும் "ஆகமஸித் தாந்த"த்தின் ஸ்வரூபம் கூறப்பட்டுள்ளது. பாத்மஸம்ஹிதை யில்:—

एकाध्वना निषेकादि संस्काराश्च बलादिभिः ।
द्वादशाक्षरविद्यैव तेषां विद्या न च त्रयी ॥
न सावित्री न मंत्रोऽन्यः स्वाध्यायजपकर्म च ॥

என்பதால் ஆகமஸித்தாந்த அதிகாரி லக்ஷணம் கூறுகையில் "ஏகாத்வா" என்ற ஏகாயநசாகாநிஷ்டர்களுக்கு கர்ப்பாதானுதி ஸகல ஸம்ஸ்காரங்களும் (बल)பலாதி மந்திரங்களால் செய்யப்பட வேண்டுமென்றும், அவர்களுக்கு த்வாதசாக்ஷர மந்திரமே தவிர த்ரயீ மந்த்ரங்களே கிடையாவென்றும் ஸ்பஷ்டமாயிருக் கிறது. ஆகம பிராமாண்ய க்ரந்தத்திலும் ஸ்ரீ ஆளவந்தார்:—

ये पुनः सावित्र्यनुवचन प्रभृति त्रयी धर्म परित्यागेन एकायन-श्रुतिविहितानेव संस्कारान् कुर्वन्ति ।

என்ற வாக்யத்தால் காயத்ரீ முதலான த்ராயீவிஹித மந்திரங் களைவிட்டு, ஏகாயந ஆகம விதிப்படி அந்த மந்திராதிகளைக் கொண்டு உபநயநாதி ஸம்ஸ்காரங்களைச்செய்யும் தாந்திரிகாதி காரியைக் குறிப்பிட்டுள்ளார்.

பாஞ்சராத்ராதிகரண சுருதப்பிரகாசிகையிலும்

ननु कात्स्न्येन कथं वेदाविरुद्धत्वं?; त्रयीधर्मत्यागस्य तत्र उक्तत्वात् ।

என்பதால் பாஞ்சராத்ரத்தில் வேததர்மங்களை த்யஜிக்கும்படி விதியிருப்பதை ஒப்புக்கொண்டு ஸமாதானம் கூறப்பட்டுள்ளது.

இப்படி அடியோடு த்ரயீவேத ஸம்பந்தமில்லாத "ஆகம ஸித்தாந்த"த்தையே ஸ்ரீ சாண்டில்யர் "கார்த்தயுக தர்மம்" (कार्तयुग धर्मः) என்று

एतदागम सिद्धान्तं श्रुतिरूपं तु विद्धि तत् ॥
एष कार्तयुगो धर्मः என்பதால் கூறினார்.

இதையே ஸ்ரீ தேசிகனும் कार्तयुगधर्मनिष्ठाधिकारि विशेष-नियतः என்ற தாத்பர்ய சந்திரிகா வாக்யத்தில் "கார்த்தயுக தர்மம்" என்ற பதத்தால் சொல்லி, பிஷ்டபசுவானது த்ரயீ வேத ஸம்பந்தமில்லாத கார்த்தயுக தர்மநிஷ்ட (அதாவது-ஆகமஸித்தாந்தானுஸாரியான அதிகாரி) விஷயமென்று ஓதுகிறார். உபரிசரன் த்ரயீவேத ஸம்பந்தமற்றவனென்பதும் ஆகமஸித்தாந்தப்படியே ஸகல ஸம்ஸ்காரங்களையும் செய்துகொண்டவனென்றும், அவன் செய்த அச்வமேத யாகமும் த்வாதசாக்ஷராதி பகவந் மந்திரங்களாலே செய்யப்பட்டதென்றும் கீழே நிரூபித்த பிரமாணங்களால் நிச்சயமாகிறபடியால் அவன் த்ரயீ தர்மமில்லாத ஆகமஸித்தாந்தானுஸாரீயென்று ஏற்படுகிறது. இந்த வாக்யத்திலும் अधिकारि विशेष नियतः என்பதில் "நியத" என்ற பதத்தை ஸ்ரீ தேசிகன பிரயோகித்து அந்த பிஷ்டபசுவானது ஆகம ஸித்தாந்தியான உபரிசரனுக்குமட்டும் தனியாக ஏற்பட்டதென்றும் மற்றவர்களுக்கு அதில் அதிகாரம் கிடையாதென்றும் தெளிவாக ஸாதிக்கிறார்.

### ஸ்ரீ பாஷ்யகார சிஷ்யர்கள் ஆகம ஸித்தாந்தத்தை அநுஷ்டிக்கக்கூடாது. சரமச்லோகாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகனின் நிர்ணயம்

இந்த விஷயங்களையெல்லாம் க்ரோடீகரித்து ஸ்ரீ சரமச்லோகாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகன் வெகு ஸ்பஷ்டமாக ஸித்தாந்தம் ஸாதிப்பதைக் கவனிக்கவேணும்.

"பாஷ்யகாரர் குலங்களெல்லாம் இன்றளவாக ஸ்வ ஸூத்ரோக்தமானபடியே தத்தத் தேவதாமந்திரங்களைக்கொண்டு விவாஹ—உபநயநாதிகள் அநுஷ்டிக்கவும் காண்கின்றோம். பெரியநம்பி முதலான பரமா

சாரியர்களும் தம்தாம் ஸூத்ரங்களின்படியே யக்ஞாதிகள் பண்ணினார்களென்பதும் ஸர்வருக்கும் பிரஸித்தம். ஆனபின்பு பாஷ்யகாரருடையவும், தச்சிஷ்ய ப்ரசிஷ்யர்களுடையவும் உபதேசானுஷ்டானங்களிலே நிஷ்டையுடையார்க்கு ஆகமஸித்தாந்தானுவர்த்திகளான ஸம்ஹிதா விசேஷங்களில் ப்ரதிநியதங்களாகச் சொல்லப்படும் மந்த்ர விசேஷங்களைக்கொண்டு கிரியா விசேஷங்களை அநுஷ்டிக்கவொண்ணாது.''

மேற்கண்ட வாக்யங்களால் ஸ்ரீ தேசிகன், ஸ்ரீ பாஷ்யகார சிஷ்ய பிரசிஷ்ய பரம்பரையிலுள்ளவர்கள் த்ரயீவேத நிஷ்டர்களென்றும அவர்கள் ஸ்வசாகா ஸூத்ர விதிகளின்படியே ஸ்மார்த்த கர்மாவான உபநயநாதிகளைச் செய்யவேண்டுமென்றும் ஆகம ஸித்தாந்த விதிப்படி செய்யக்கூடாதென்றும் ஸாதித்துவிட்டு, குறிப்பாக பெரிய நம்பி முதலிய பரமாசார்யர்கள் ஸ்வசாகா ஸூத்ர விதிப்படியே சிரௌதங்களான யக்ஞாதிகளைச் செய்ததையும் உதாஹரணமாகக் குறிப்பிடுவது பிரகிருதத்தில் மிகவும் முக்யமாகும். த்ரயீநிஷ்டபரமைகாந்திகளான பெரிய நம்பி முதலிய பரமாசாரியர்கள் த்ரயீவேத விஹித ப்ரத்யக்ஷ பசு ஸாத்யமான யாகாதிகளையே செய்தனரென்றும் ஆதலால் ஆகம ஸித்தாந்த வழி நமக்கு உபாதேயுமல்லவென்றும் ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறார்.

மேலும் ஸ்ரீ தேசிகன் மேற்படி வாக்யத்தில் "பாஷ்யகாரருடைய உபதேச அநுஷ்டானங்களில் நிஷ்டையுடையார்க்கு" என்று ஸாதிப்பதால் ஸாக்ஷாத் பசு விஷயத்தில் ஸ்ரீ பாஷ்யகாரரின் உபதேசமென்ன?

अग्नीषोमीयादिषुच न हिंसा पशोः । என்றும்

रक्षणमेव अग्नीषोमीयादिषु संज्ञपनम् ।

என்றும் யாகபசு விஷயம் ஹிம்ஸையல்லவென்றும் ரக்ஷணமென்பதுமே ஸ்ரீ பாஷ்யகாரரின் உபதேசமாயிருக்கிறது. தவிரவும், य एनं वेत्ति हन्तारं என்ற கீதா ச்லோக தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகன் स्वमतेन என்ற வாக்யத்தால் ரக்ஷணரூப

மான ஸாக்ஷாத் பசு யாகமே ஸ்ரீ பாஷ்யகாரரின் மதம் என்பதை விவரித்துள்ளார். இது முன்பு நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸ்ரீ பாஷ்யகாரரின் ப்ரத்யக்ஷ பசுயாக ரூப உபதேச நிஷ்டர்களான நமக்கு, உபரிசராதி ஆகம ஸித்தாந்திகளுக்காக ஏற்பட்ட சாஸ்திரமோ, அனுஷ்டானமோ அடியோடு விலக்கத் தக்கதென்பது ஸ்ரீ தேசிக வாக்யத்தால் ஸ்திரப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆதலால்தான் ஸ்ரீ தேசிகன், पिष्टपश्वादिकल्पः तत्तत्कालाधिकारिप्रतिनियत इति क्वापि नस्यात विरोधः என்று அதிகரண ஸாராவளியிலும்,

पिष्टपश्वादिविधिस्तु कार्तयुग धर्म निष्ठ अधिकारि विशेषनियतः ।

என்று தாத்பர்ய சந்திரிகையிலும் பிஷ்ட பசுவை நிரஸனம் செய்து ஸித்தாந்தம் சொன்னார்.

தாத்பர்ய சந்திரிகையில் மற்றொரு விடத்திலும்.

यज्ञानां जपयज्ञोऽस्मि என்ற கீதாச்லோக தாத்பர்ய சந்திரிகையிலும்,

अत एव हि उपरिचरादयः पिष्टपशुभिरिष्टवन्तः ।

என்பதால் உபரிசரனே பிஷ்டபசு அதிகாரி என்று காட்டினார். இந்த கீதா ச்லோக தாத்பர்ய சந்திரிகையிலுள்ள விஷயங்களும் இங்கு கவனிக்கப்படவேண்டியவை.

கீதையில் பகவான், தாம் யக்ஞங்களுக்குள் ஜபயக்ஞமாயிருப்பதாகக் கூறி ஜபயக்ஞத்தை பிரஸம்ஸிக்கிறார். இங்கு தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகன் மற்ற யக்ஞங்களைவிட ஜப யக்ஞம் எப்படி பிரஸஸ்தம் என்பதை உபபாதனம் செய்கிறார். ஹிம்ஸாயக்ஞம், அஹிம்ஸாயஜ்ஞம் என்ற இரு யக்ஞங்களைக்காட்டி இவ்விரண்டையும்விட, ஜபயக்ஞம் பிரசஸ்தமென்று காட்டுகிறார். ஹிம்ஸா யக்ஞத்திலும், அஹிம்ஸாயக்ஞத்திலும் சிற்சில கிலேசங்கள் இருப்பினவாயும் ஜபயக்ஞத்தில் அவ்வித கிலேசங்கள் ஒன்றும் இல்லாததால் அது பிரசஸ்தமென்று உபபாதனம் செய்கிறார். இங்கு ஹிம்ஸாயக்ஞத்தில் என்ன கிலேசம்?

அஹிம்ஸாயக்ஞத்தில் என்ன கிலேசம் ? முதலில் ஹிம்ஸாயக்ஞத்திலுள்ள கிலேசத்தை உபபாதிக்கிறார்.

ஹிம்ஸாயக்ஞங்கள் ருக்-யஜுஸ் ஸாமாதிகளான த்ரயீ வேதங்களில் விதிக்கப்படுகின்றன. அஹிம்ஸாயக்ஞமான பிஷ்ட பசு யாகமோ ஆகம விஹிதம். ஆகையால் ஆகமவிஹிதமான அஹிம்ஸாயக்ஞத்தில் த்ரயீ வேத நிஷ்டனை அதிகாரிக்கு அதிகாரமில்லையென்று விஷய வியஸ்தை செய்யவேண்டியிருப்பது ஒரு கிலேசம். இதை

अहिंसात्मक यज्ञानर्हाणां हिंसात्मक यज्ञानुज्ञानम् ।

என்பதால், "அஹிம்ஸாத்மக யக்ஞத்தில் அதிகாரமில்லாதவர்களுக்கு ஹிம்ஸாத்மகயக்ஞம் செய்ய அநுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது" என்று கூறினார். இதன் பிறகு த்ரயீ விஹிதமான ஹிம்ஸாத்மக யக்ஞத்தில் பசுஹிம்ஸை தோஷமுள்ளது என்ற சங்கை ஏற்பட, அது ஹிம்ஸையல்லவென்று ஸமர்த்திக்கவேண்டிய மற்றொரு கிலேசம் இருக்கிறது. யாகபசு ஹிம்ஸையானது வேதவிதியை அநுஸரித்தே செய்யப்படுவதாலும், அந்த ஹிம்ஸையால் பசுவுக்கும் யஜமானனுக்கும் எவ்விதக் கெடுதியுமில்லை, பசுவுக்கு மிகுந்த உபகாரம் அல்லது க்ஷேமம் ஏற்படுவதாலும் பசு யாகத்தால் பகவத் ப்ரீதி யேற்படுவதாலும் யாகபசு ஹிம்ஸையில் ப்ரத்யவாயமில்லை யென்று ஸமாதானம் சொல்லவேண்டிய கிலேசம் இருக்கிறது. இதை

तत्रापि विधितः प्रवृत्तेः, अपकारानभिसन्धानात्, उपकार श्रुतेः, देवता प्रीणनत्वाच्च न प्रत्यवायः ।

என்ற வாக்யத்தால் ஸாதித்தார்.

இவ்வாறு ஹிம்ஸாயக்ஞத்தில் உள்ள கிலேசத்தை விவரித்து விட்டு அஹிம்ஸாத்மக யக்ஞமான பிஷ்டபசு யக்ஞத்தில் உள்ள கிலேசத்தை உபபாதிக்கிறார்.—

अहिंसात्मकास्तु यज्ञाः विशिष्टाधिकारि सापेक्षाः—अत एव उपरिचरादयः पिष्टपशुभिरिष्टवन्तः ॥ என்று

அதாவது "அஹிம்ஸாத்மக யக்ஞங்களோவென்றால் விலக்ஷண அதிகாரிகளை அபேக்ஷித்து நிற்பவை. அதாவது அவர்களுக்கு

மட்டும் ஏற்பட்டவை. மற்றவர்களுக்கு அதில் அதிகாரமில்லை. ஆகையால்தான் உபரிசரன் பிஷ்டபசுவினால் யாகம் செய்தான்" என்று ஸாதித்து அஹிம்ஸாயக்ஞமான பிஷ்டபசுயாகமானது விலக்ஷணாதிகாரியான உபரிசரனுக்குமட்டும் ஏற்பட்டதென்றும் மற்றவர்களுக்கு அதில் அதிகாரமில்லையென்றும் வியவஸ்தை செய்யவேண்டிய கிலேசம் இருக்கிறதென்று காட்டிவிட்டு ஜப யக்ஞத்தில் இவ்வித கிலேசங்கள் ஒன்றுமில்லாததுடன் எல்லா ஆச்ரமிகளும் அனுஷ்டிக்கக்கூடியதாயிருப்பதால் மற்ற யக்ஞங்களைவிட அது பிரசஸ்தமென்று கடைசியாக நிகமன வாக்யத்தில் ஸாதிக்கிறார்.

एवं इतर यज्ञेषु हिंसादि प्रसङ्गः, अधिकारि विशेषादिना विषयव्यवस्थापनं इत्यादिः महान् क्लेशः। जपयज्ञे तु तादृश क्लेशाभावात्........यज्ञान्तरेभ्यः जपयज्ञः प्रशस्ततमः, सर्वाश्रमसाधारण्यात्

இந்த வாக்யத்தில் अधिकारिविशेषादिना विषयव्यवस्थापनं என்பதால் அஹிம்ஸா யக்ஞமான பிஷ்டபசு யாகமானது விலக்ஷணாதிகாரி விஷயமென்று, அதிகரண ஸாராவளியில் तत्तत्कालाधिकारि प्रतिनियतः என்பதாலும் पिष्टपश्वादिविधिस्तु कार्तयुग धर्मनिष्ठाधिकारि विशेषनियतः என்பதாலும் சொன்னதையே ஸ்ரீ தேசிகன் இங்கும் ஸ்திரப்படுத்துவது ஸ்பஷ்டமானது.

உபரிசரவஸுவுக்குப் பிறகு பிஷ்டபசு மந்திர பிரயோகங்கள் மறைந்தன.

மேலும் மஹாபாரதத்தில் ஸ்ரீ பகவான்

संस्थिते तु नृपे तस्मिन् शास्त्रमेतत् सनातनम्।
अन्तर्धास्यति तत्सर्वं एतद्वः कथितं मया॥

என்பதால் வஸுவுக்காகவென்றே செய்யப்பட்ட இந்த சாஸ்திரமானது வஸுவின் காலத்திற்குப் பிறகு உலகத்தில் மறைந்து விடுமென்று ஆக்ஞை செய்திருப்பதால் இக்காலத்தில் பிஷ்டபசு விதி சாஸ்திரமும் அதற்கான விலக்ஷண மந்திர பிரயோகங்க

ஞும் அதிகாரிகளும் கிடையாவென்பதும் இங்கு ஸ்ரீ தேசிகன் திருவுள்ளமாகிறது.

ஆகவே यज्ञानां जपयज्ञोऽस्मि என்ற தாத்பர்ய சந்திரிகாவாக்யங்களால் ப்ரகிருதத்தில் ஸித்தித்தவை எவையென்றால், ஹிம்ஸாயக்ஞம், அஹிம்ஸாயக்ஞம் இரண்டிற்கும் அதிகாரிகள் வெவ்வேறு என்பதும், ஒன்றில் மற்றொருவனுக்கு அதிகாரம் கிடையாதென்பதும். மேலும், ஹிம்ஸாயக்ஞத்தில், அந்த ஹிம்ஸையானது வேத விஹிதமாகையாலும், பசுவுக்கு ஹிதமாகையாலும், அந்த ஹிம்ஸையால் சிறிதும் தோஷமில்லையென்ற மற்றொரு விஷயமும் ஸித்தித்தது. மேலும் அஹிம்ஸா யக்ஞமான பிஷ்டபசுவானது உபரிசரனுகிய விலக்ஷணுதிகாரிக்காகமட்டும் ஏற்பட்டதாகையால் அதில் மற்றவர்களுக்கு அதிகாரம் கிடையாதென்ற மற்றொரு விஷயமும் ஸித்தித்தது. பிஷ்டபசு விஷயமாக வேறு பல அம்சங்கள் தனியாக வேறு கிரந்தத்தில் நம்மால் விஸ்தாரமாக விசாரித்து நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

### ஜபயக்ஞம் உத்கிருஷ்டமேன்பதின் வாஸ்தவ அர்த்தம்; மற்ற யக்ஞங்களை நிந்திக்கவில்லை.

यज्ञानां जपयज्ञोऽस्मि என்பதால், ஹிம்ஸாயக்ஞாதிகளைக்காட்டிலும் ஜபயக்ஞமே உத்க்ருஷ்டமென்று கீதையாலும் தாத்பர்ய சந்திரிகா வாக்யங்களாலும் தெரிவதால் ஹிம்ஸாயக்ஞம் நிக்ருஷ்டமென்று ஏற்படுவதாகச் சிலர் நினைக்கக்கூடும். ஆயினும் இது சாஸ்திர ப்ரக்ஞையுள்ளவர்கள் நினைக்கக்கூடியதல்ல. முதலில் ஒரு முக்யவிஷயம் கவனிக்கப்படவேண்டும். இந்த கீதா வாக்யத்தால் ஜபயக்ஞத்தைத் தவிர மற்ற எல்லா யக்ஞங்களுமே நிந்திக்கப்படுகின்றனவேயல்லது ஹிம்ஸாயக்ஞம் மட்டுமல்ல. ஹிம்ஸாயக்ஞம், அஹிம்ஸாயக்ஞம் இரண்டுமே ஜபயக்ஞத்தைவிடத் தாழ்ந்ததென்றே கீதை கூறுகிறது. ஸ்ரீ தேசிகனும் தாத்பர்ய சந்திரிகையில், ஹிம்ஸாயக்ஞம், அஹிம்ஸாத்மகமான பிஷ்டபசுயக்ஞம் இரண்டையும் எடுத்து இரண்டிலும் க்லேசமிருப்பதால் இவ்விரண்டையும்விட ஜபயக்ஞம் ப்ரசஸ்தமென்று ஸாதித்திருப்பதைக் காணலாம். பகவானுக்கு அதிப்ரீதிகர

மென்று ஆகமங்களால் கொண்டாடப்பட்டு, ஸ்ரீ தேசிகனாலும் भगवतः अतिप्रीणनत्वात् என்பதால் அப்படியே அநுவதிக்கப்பட்டது மான அஹிம்ஸாத்மக யக்ஞங்கூட ஜபயக்ஞத்தைவிட நிக்ருஷ்ட மென்றே ஸ்ரீ தேசிகன் உபபாதனம் செய்துவிட்டபடியால் இது ஹிம்ஸாயக்ஞத்தைமாத்திரம் சொல்லுகிறதென்று ஒருவரும் ஸாதிக்கமுடியாது.

### யாகபசு நிந்தை காணப்பட்டால் அது மற்றொன்றை ஸ்துதிக்கவே. ஸ்ரீ தேசிகனின் நிர்ணயம்.

ஆனால் ஸ்ரீதேசிகன் இதற்கு வாஸ்தவமான ஸமாதானம ஸாதித்துள்ளார். புராணங்களில் சிலவிடத்திலும் உபநிஷத்தில் சிலவிடத்திலும், யாகத்தையும், யாகபசு விஷயத்தையும்பற்றி நிந்தை காணப்படுவதைக் காட்டி ஸாங்கியர் யக்ஞம் அசுத்த மென்றுமறுபடியும் கக்ஷி சொன்னதை நிரஸிக்கவே ஸ்ரீ தேசிகன் அதிகரண ஸாராவளியில் கீழ்கண்ட ஸித்தாந்தத்தை வெளியிட்டார்.

स्तौति निन्दात्विहान्यत् என்று.

அதாவது யாகமும், யாகபசு விஷயமும் வைதிகமத ஸித்தாந்தப்படி உத்தம தர்மங்களாயிருப்பதால் சில உபநிஷத்துக்களிலும், புராணங்களில் சிலவிடங்களிலும் யாகத்தைப்பற்றியும், பசு ஹிம்ஸையைப்பற்றியும் நிந்தை ஏதாவது காணப்பட்டால் அந்த நிந்தையானது நஹிநிந்தா நியாயப்படி, மற்றொன்றை ஸ்துதி செய்யவந்ததேயல்லது யக்ஞநிந்தைக்காக வரவில்லை யென்று அறியவேணுமென்று ஸ்ரீதேசிகன் மேற்கண்ட வாக்யத்தால் சிக்ஷித்தார். नहिनिन्दा निन्द्यं निन्दितुं प्रवृत्ता, अपि तु निन्दितादन्यत् प्रशंसितुं என்பது அந்த நியாயமாகும்.

அந்த நியாயப்படி இங்கு கீதைக்கு ஜபயக்ஞத்தை ஸ்துதி செய்வதில் நோக்கமே யல்லது மற்ற யக்ஞங்களை நிந்திப்பதில் நோக்கமில்லையென்று அறியவேணும். ஜபயக்ஞத்தைவிட மற்ற யக்ஞங்கள் தாழ்ந்தவையானால் அவைகளை விட்டுவிடலாமா? கீதையிலேயே 18வது அத்யாயத்தில் யக்ஞாதிகள் அவச்யானுஷ்

டேயங்களென்று விதிக்கையில் அந்த யக்ஞங்களையே இங்கு நிக்ருஷ்டமாகப் பேச நியாயமில்லையன்றோ? மேலும் கீதை நான்காவது அத்யாயத்தில் த்ரவ்ய யக்ஞம் தபோயக்ஞம் முதலிய பலவித யக்ஞங்களைச் சொல்லிவிட்டு, அந்த யக்ஞநிஷ்டர்கள் यान्ति-ब्रह्मसनातनं என்பதால் பரப்பிரம்மத்தையே அடைகிறார்களென்றும்சொல்லி नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम! என்று மஹா யக்ஞாதி நித்யநைமித்திக யக்ஞங்களைச் செய்யாதவர்களுக்கு, இஹ-பரலோகம் இரண்டும் கிடையாதென்று பகவான் உபதேசிப்பது விருத்தமாகுமல்லவா?

பிராணயாம, ஜபயக்ஞாதி நிஷ்டர்கள்கூட நித்யங்களான யக்ஞங்களை அநுஷ்டித்தே தீரவேணுமென்று மேற்படி சுலோக தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீ தேசிகன் प्राणायामादिषु निष्ठावतामपि नित्यत्वादिना यज्ञादिकं अवश्यकार्यमित्यपि सिद्धं என்று ஸாதித்திருப்பது எல்லாச் சங்கைகளையும் தெளியவைக்கும். மேலும் சிரௌத யக்ஞங்களைப்போல் ஸ்மார்த்தமான ஔபாஸனை, வைச்வதேவ பஞ்சமஹாயக்ஞாதிகளும் ஜபயக்ஞத்தைக்காட்டிலும் நிக்ருஷ்டமென்று ஏற்பட்டு அவைகளைப் பரித்யாகம் செய்யப்பிரஸங்கிக்கும். இஜ்யை என்ற பகவதாராதன ரூபமான யக்ஞமும் ஜபயக்ஞத்தைவிட நிக்ருஷ்டமென்று சொல்ல நேரிடும்.

மேலும் ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில்-

एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः ।
यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरस्सदा ॥

என்ற சுலோகத்தில், எல்லா தர்மங்களையும் காட்டிலும் பகவந்நாம ஸங்கீர்த்தன தர்மமே உத்க்ருஷ்டமென்று கூறப்படுகிறது. இதனால் மற்ற தர்மங்கள் தாழ்ந்தவைகளென்றும், அவைகளை த்யஜித்துவிட்டு பகவந்நாம ஸங்கீர்த்தனமே செய்துகொண்டிருந்தால் போதுமென்றும் நிர்ணயித்துவிடலாமா? கீதாச்லோகத்தில் பிரஸம்ஸிக்கப்படுகிற ஜபயக்ஞ தர்மத்தைக்காட்டிலும்கூட நாமஸங்கீர்த்தனம் உத்க்ருஷ்டமென்று ஸஹஸ்ரநாம சுலோகம்

கூறுவதால் ஜபயக்ஞம்கூட நிக்ருஷ்டமாகி விடுகிறதல்லவா ? இம்மாதிரி ஆங்காங்கு ஒவ்வொரு விஷயத்தை பிரசம்ஸை செய்யவந்த சுலோகங்களை வைத்துக்கொண்டு வைதிகமதத்தின் பரமஸித்தாந்தங்களாக நிர்ணயிக்கப்பட்ட விஷயங்களைப் பாதிக்கக் கூடாதென்கிற சாஸ்திரவியவஸ்தையைக் காட்டவே ஸ்ரீ தேசிகன் யாகபசு விசாரப் பிரகரணத்தில் स्तौतिनिन्दा त्विहान्यत என்பதால் இந்த விஷயத்தை இதம்பரமாகக் காட்டியருளினர்.

உபநிஷத்துக்களில் ஞானமார்க்கபிரசம்ஸை செய்யுமிடங்களில் சிலவற்றில் யக்ஞாதிகர்ம நிந்தை செய்யப்படலாம். அந்த நிந்தைக்கு முக்யமாக யக்ஞநிந்தையில் தாத்பர்யமில்லையென்றும் ஞானமார்க்க ஸ்துதியிலேயே நோக்கமென்றும் அறியவேண்டுமென்று ஸ்ரீ தேசிகனின் திருவுள்ளம்.

प्लवा ह्येते अदृढाः यज्ञरूपा என்ற முண்டக உபநிஷத்தானது காம்யயாக நிந்தாபரமென்று ஸ்ரீ பாஷ்யகார-ஸ்ரீ தேசிகாதிகளின் திருவுள்ளமென்பது கீழே நிரூபிக்கப்பட்டது அதுபோல் கீதையிலும் त्रैविद्यामा, यामिमां पुष्पितावाचं என்றவைகளும் கேவல காம்ய கர்ம நிந்தாபரங்களென்பதும் ஆசார்யர்களின் திருவுள்ளமென்று கீழே விவரிக்கப்பட்டது.

யாஸ்கநிருக்தியில் யாக நிந்தையில்லை.

யாஸ்க நிருக்தியில் காணப்படும் ஒரு விஷயமும் இது போல் விஷயவியவஸ்தை செய்யப்படவேண்டியதே. அங்கு—

अथ ये हिंसामाश्रित्य विद्यामुत्सृज्य—वेदोक्तानिवा कर्माणि कुर्वते—ते धूममभिसंपद्यन्ते ॥

என்பதால் வேதோக்த கர்மானுஷ்டானம் செய்கிறவர்களுக்கு 'தூமாதி மார்க்கமும் புனராவ்ருத்தியும் கூறப்படுகின்றன. இந்த நிருக்திக்கு யதாச்ருதமாக அர்த்தம் கொண்டால் வைதிக நித்ய நைமித்திக கர்மாக்கள் எல்லாம் த்யாஜ்யங்களாகி வைதிக மத ஸித்தாந்தத்தில் பெரிய க்ஷோபம் ஏற்படும். இந்த யாஸ்க வாக்யமானது யாஸ்கநிருக்திபரிசிஷ்டத்திலேயே காணப்படுவதால் இது பிரமாணமல்லவென்று சிலர் கூறும் ஆக்ஷேபம் ஒருபுறமி

ருக்க, இதை அங்கீகரித்தாலும் இது வேதங்களிலுள்ள காம்ய கர்ம நிந்தாபரமாகவும், கேவல லௌகிக ஹிம்ஸா நிந்தாபரமா யும் ஒதுக்கித்தள்ளத்தக்கதே யாகும். இல்லையேல் பிரபல சுருதி விரோதம் ஏற்பட்டு இந்த யாஸ்கவாக்யமே அப்ரமாணமாகி விடத்தடையில்லை. तमेतंवेदानुवचनेन என்கிற சுருதி பிரம்ஹநிஷ்டனுக்கு பிரம்ஹவித்யாங்கமாக ஜ்யோதிஷ்டோமாதி யக்ஞங்கள் அவச்யாநுஷ்டேயங்களென்று விதிக்கிறது. இந்த சுருதி பிரா மாணத்தைக் காட்டியே सर्वापेक्षाच, सहकारित्वेन என்ற ஸூத்ரங்களால் பிரம்ஹ ஸூத்ரகாரரும் ஜ்யோதிஷ்டோமாதிகள் பிரம்ஹ வித்யாங்கங்களென்று நிர்ணயித்தார். இது வைதிக மதத்தின ஸித்தாந்தம். யாஸ்கஸ்மிருதியோ இதற்கு நேர் விருத்தமாக பேசுகிறது.

யக்ஞாதிகர்மாக்களை அங்கமாகக்கொண்ட பிரம்மவித்யா நிஷ்டனுக்கு नच पुनरावर्तते என்ற சுருதியாலும், இதை மூலமாகக் கொண்ட अनावृत्तिश्शब्दात् என்ற பிரம்ம ஸூத்ரத்தாலும் புனரா விருத்தியில்லாத பிரம்ஹலோக ப்ராப்தி சொல்லப்படுகிறது. இதுவும் வைதிகமத ஸித்தாந்தம். யாஸ்கஸ்மிருதியோ இதற்கு விருத்தமாக, தூமாதிகதியையும். புனராவ்ருத்தியையும் கூறுவது அத்யந்தம் விரோதிக்கிறது. மேலும் अहिंसन् सर्वभूतानि अन्यत्र तीर्थेभ्यः என்ற சாந்தோக்ய சுருதி விரோதமும் யாஸ்கத்திற்கு பிரபலமாயிருக்கிறது. அந்த சந்தோக சுருதியானது பசு ஹிம்ஸாயுக்த ஜ்யோதிஷ்டோமாதிகர்மாக்களை அநுஷ்டிக்கும் பிரம்ஹநிஷ்டர்களுக்கு அபுனரா வ்ருத்தியை ஸ்பஷ்டமாக விதிக்கிறது. இந்த சுருதியின் முன், யாஸ்கவாக்யம் தலைகாட்டமுடியுமா? இத்துடன் பிரம்மஸூத்ரகாரர் विहितत्वाच्च आश्रम कर्मापि என்ற ஸூத்ரத்தால் ஜ்யோதிஷ்டோமாதி யக்ஞங்களை ஆச்ரம தர்மமாக நித்யமாக விதிப்பதும் விரோதிக்கும். கீதையில் பகவான் यान्ति मद्याजिनोऽपिमां என்பதால் ஜ்யோதிஷ்டோமாதிகளால் பகவானை யஜிப்பவர்கள் புனராவ்ருத்தியற்று பகவானையே அடைகிறதாகக் கூறுவதும் விரோதிக்கும். இவ்வளவு ஸித்தாந்தங்களுக்கும், விரோதம் வாராதபடி தடுக்க, இந்த யாஸ்கவாக்யமானது அங்ய

ப்ரசம்ஸாபரம் என்றும், காம்ய யக்ஞத்தையும், லௌகிக ஹிம்ஸையையுமே நிந்திக்கிறதென்றும் வ்யவஸ்தை செய்யவேணும். இல்லையேல் ப்ரத்யக்ஷ ப்ரபல சுருதிக்கும் ஸித்தாந்தத்திற்கும் விருத்தமான யாஸ்கவாக்யம் அப்ரமாணமாகி ஒதுக்க நேரிடும். இங்கு स्तौतिनिन्दात्विहान्यत என்ற ஸ்ரீ தேசிகன் நியமனம் வியவஸ்தாபகமாகிறது.

## புராணங்களில் யாகபசு நிந்தையில்லை
## சுருதியைவிட புராணம் துர்பல ப்ரமாணம்.

புராணங்களில கணக்கறறவிடஙகளில யாக மஹிமையும; யாகபசு விஷய ப்ரசம்ஸையும் வெகு ப்ரபலமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனாலும், சிலவிடங்களில் நிந்தையும் காணப்படுகிறது. அந்த நிந்தைகள் வைதிகமத ஸித்தாந்தத்திற்கு விருத்தங்களாகையால் அவைகளை நஹிநிந்தா நியாயப்படி இதர ப்ரசம்ஸாபரங்களென்று ஒதுக்கவேண்டியதென்பதும் ஸ்ரீ தேசிகன் திருவுள்ளமாகிறது.

புராணவாக்யமோ, சரித்திரமோ, சுருதி, ஸ்மிருதி விதிகளுக்கு விருத்தமாயிருந்தால் அது ப்ரமாணமல்ல. புராணத்தைக்காட்டிலும் சுருதி ஸம்ருதிவிதிகளே ப்ரபலங்களென்பது வைதிகமதஸித்தாந்தமாகும்.

முக்யமாக அக்நிஹோத்ர, தர்சபூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதிகளான ப்ரத்யக்ஷசுருதி விஹித தர்மங்களுக்கு விரோதமாக ஒரு ஸ்மிருதியிருந்தால் அதுகூட ப்ரமாணமாகாதென்று ऊर्ध्वरेतस्सुच शन्देहि என்ற ப்ரம்மஸூத்ரத்தாலும் அங்கு ஸ்ரீ பாஷ்யத்தாலும் விவரிக்கப்பட்டிருப்பதை முதல் பாகத்தில் பார்க்கவும்.

ஆகையால் யாவஜ்ஜீவாதி சுருதிவிதிக்கு விருத்தமான ஸ்மிருதியே அப்ரமாணமென்று ஸித்தாந்தமிருக்கையில் புராணங்களைப்பற்றிக் கேட்பானேன்? சுருதிவிருத்தமான புராணம் அப்ரமாணமாகவே போகும். ஆயினும் அந்தப் புராணத்திற்கு சுருதி விரோதம் ஏற்படாமல் விஷய வ்யவஸ்தை செய்து புரா

ணத்தின் பிராமாண்யத்தை ஸம்ரக்ஷிக்கவேண்டியதுதான் மார்க்கமாகும். இதைத்தான் ஸ்ரீ தேசிகன் स्तौतिनिन्दात्विहान्यत् என்பதால் காட்டியருளினார்.

### ஸ்ரீ பாகவதத்தில் ப்ராசீனபர்ஹிஸ் கதை உதாஹரணம்

ஸ்ரீ பாகவதத்தில் இதற்கு ஓர் உதாஹரணம் காணலாம். நான்காவது ஸ்கந்தத்தில் ப்ராசீனபர்ஹிஸ் என்ற அரசன் காம்யகர்மங்களிலேயே ஆஸக்தனாயிருந்தான். அவனை மோக்ஷ மார்க்கத்தில் திருப்பவேண்டி நாரதர் யாகபசு ஹிம்ஸையை வ்யாஜமாகக் காட்டிப்பேசுகிறார்.

भो भो प्रजापते राजन् पशून् पश्य त्वयाऽध्वरे

என்பதால். இங்கு யாகபசு ஹிம்ஸாநிந்தையில் நாரதருக்கு நோக்கமில்லை. அந்த அரசனை ஞானமார்க்கத்தில் திருப்புவதே அவரது நோக்கம். ஆதலால் கர்மபலனில் வைராக்யம் உண்டாக்கி ஞானத்தில் பிரவிருத்திக்கும்படி செய்யவேண்டியதுதான் நாரதர் உத்தேசம். ஆகையால் நஹிநிந்தா ந்யாயப்படி स्तौतिनिन्दात्विहान्यत् என்று ஸ்ரீ தேசிகன் செய்த வியவஸ்தையை அநுஸரித்து இங்கு யாகபசு நிந்தையானது ப்ரலோபநார்த்தமேயல்லது வாஸ்தவிகமல்லவென்று நிர்ணயிக்கவேணும். இல்லையேல் இந்த பாகவதமே ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளப்படி ப்ரத்யக்ஷ சுருதி விருத்தமாகி அநுபாதேயமாகிவிடும்.

### இங்கு வீரராகவீய வ்யாக்யான வாக்யம்

ஸ்ரீ பாகவத வ்யாக்யானம் வீரராகவீயத்தில் இவ்விஷயமாகச் செய்துள்ள வியவஸ்தையைப் பார்க்கவும்.

ननु "न वा उवेतन्म्रियसे" इति यागीय पशु संज्ञपनस्य हिंसात्वाभाव श्रवणात्, तादात्विक दुःख जनकत्वेऽपि निहीन पशु जन्म-निवर्तनद्वारा, स्वर्गोपभोग्य सुन्दरतर जन्मसंपादकत्वेन, तादात्विक-दुःखजनक औषधपान, कर्ण भेदन, क्षौरादिकर्म कारयितृ-चिकित्सक पित्रादिवत् हितकारिणि संज्ञपितरि पशूनां क्रोधासंभवाच्च कथमेवमुच्यत इति चेत्—न। कर्म फलेषु वैराग्य जननार्थत्वेन, अन्यपरत्वात् तदुक्तेः ॥ என்று

“யாகபசுவிஷயம் ஹிம்ஸையல்லவென்று வேதமே கூறுவதுடன் அந்தப் பசுவுக்கு உயர்ந்த ஜந்மம் கிடைப்பதாகவும், வியாதிஸ்தனுக்கு சஸ்திர சிகித்ஸை ஹிதமாவதுபோல் பசுவுக்கும் ஹிதமேற்படுவதாயிருக்கையிலும் இங்கு நாரதர் யாகபசு விஷயத்தை நிந்திப்பதுபோல் பேசுவது வேதவிருத்தமல்லவா” என்று ஆக்ஷேபித்துக்கொண்டு,

> “ப்ராசீனபர்ஹிஸ் அரசனுக்கு கர்மபலனில் வைராக்யம் உண்டுபண்ணும் நோக்கத்துடன் நாரதர் அப்படிச் சொல்லுகிறார். உண்மையில் யாகபசு விஷயத்தை அவர் இங்கு நிந்திக்கவில்லை. ஆகையால் நாரதவாக்யம் வேறு நோக்கமுள்ளதே”

என்று வீரராகவீயம் ஸமாதானம்கூறி பாகவதம் சுருதிவிருத்தமல்லவென்பதை ஸமர்த்தித்தார். இம்மாதிரியே புராணங்களில் ஆங்காங்கு ஏதாவது யாகபசு நிந்தை காணப்பட்டால் அந்தந்த ஸந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி சுருதி விரோதம் வராமல் விஷய வ்யவஸ்தை செய்யவேண்டுமென்பது स्तौतिनिन्दादित्वहान्यत् என்பதால் ஸ்ரீ தேசிகன் சிக்ஷிப்பதாகும். சாஸ்திர தத்வமிப்படியிருக்கச் சிலர் பௌராணிக ச்லோகவசனங்களைக்காட்டி ப்ரத்யக்ஷ சுருதி விதிவிஹிதங்களான அக்னிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதி தர்மங்களை நிந்திக்கப் புறப்படுவது சாஸ்திர மர்யாதையையும் ஸ்ரீ தேசிகாதி ஆசார்ய ஸித்தாந்தத்தையும் அறியாத பாலிசர்களின் ஸாஹஸ க்ருத்யமேயாகும்.

## யாகபசு விஷயநிந்தை நரகாதிதோஷஹேது மஹாபாரதத்தில் ஸ்ரீ பகவானின் உபதேசம்.

ஆகையால்தான் வேதவிஹிதமான யாகப்சு விஷயத்தை நிந்திப்பதானது, வேதத்தையும், வேதஸ்வரூபியான பகவானையும் நிந்திப்பதாகிறதாகையால் அது மஹா பாபகார்யமென்று ஸ்ரீ பகவானே மஹாபாரதத்தில் கூறுகிறார். ஆநுசாஸனிக பர்வ 111-வது அத்யாயத்தில் ஸ்ரீ வைஷ்ணவ “தர்மபர்வா,வில் யுதிஷ்டிரருக்கு ஸ்ரீ பகவான் யாக மஹிமையை உபதேசிக்கையில்

> नावबुध्यन्ति ये विप्राः निन्दन्ति च पशोर्वधम् ।
> ते यान्ति नरकं घोरं रौरवं तमसा वृतम् ॥

दशवर्ष सहस्राणि तत्र स्थित्वा नराधमाः ।
कृमिभिः भक्ष्यमाणाश्च तिष्ठेयुः पूयशोणिते ॥

என்பதால், "யாக மஹிமையை அறியாமல் யாக பசுவதத்தை நிந்திக்கும் விப்ரர்கள், மிக்க கோரமானதும், இருள் சூழ்ந்ததாயுமுள்ள ரௌரவநரகத்தை அடைவார்கள். பத்து ஆயிரம் வருஷம் அதில் ரக்தபூயாதி ஆபாஸங்களில் உழன்று, கிருமிகளால் உபத்திரவிக்கப் பட்டுக்கிடப்பார்கள்"

என்று பகவானே கூறுகிறார். அந்த அத்யாயத்தில் மேலேயும்

अहिंसा वैदिकं कर्म ब्रह्म कर्मेति शब्दितम्
वेदोक्तान् ये न कुर्वन्ति हिंसाबुध्या क्रतून् द्विजाः ।
सद्यः शूद्रत्वमायान्ति प्रेत्य चण्डालतामपि ॥

என்பதாலும் "வேதோக்த யாககர்மாவானது பிரம்ஹகர்மாவென்றும், அந்த வேதோக்தகர்மாவை "ஹிம்ஸை" என்ற புத்தியால் எவர்கள் அநுஷ்டிக்க மறுக்கிறார்களோ அவர்கள் உடனே சூத்ரர்களாகி, இறந்தபிறகு சண்டாள ஜன்மாவையும் அடைகிறார்களென்" என்று ஸ்ரீ பகவானாலேயே பலமான தோஷமும் சொல்லப்படுவதை ஆஸ்திகர்களான பாடபீடிக்கள் கவனிப் பார்கள். ஸ்ரீதேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் यजमानेन सहिताः स्वर्गं यान्ति नाविप என்று உதாஹரித்தவசனமும் மேற் கண்ட அத்யாயத்திலேயே இருப்பதும் கவனிக்கத்தக்கது. ஸ்ரீ தேசிகனும் யாக பசு ஹிம்ஸையை நிந்திப்பவர்கள் "பாமரர்கள்" என்று நிந்தித்ததும் கீழே நிரூபிக்கப்பட்டது.

## பரமைகாந்திகளுக்கும் அவர்ஜ்ஜநீய அவச்யஹிம்ஸைகள்

பரமைகாந்திகளுக்கும் அநேக கர்மாக்களில் ஹிம்ஸையானது அவர்ஜநீயமென்றும் அனுஷ்டேயமென்றும் ஆசார்யர்களின் அபிப்பிராயமிருக்கிறது. ஸ்ரீ தேசிகாதிகள், "நித்ய ஹிம்ஸை" "வைதஹிம்ஸை" என்று பலவிடங்களில் வ்யவஹரிப்பதைப் பார்க்கலாம்.

அதிகரணஸாராவளியில் ஸ்ரீ தேசிகன், किंचोत्सर्गापवाद क्रम 'मिह जहतः कीदृशी नित्यहिंसा என்பதால் "நித்யஹிம்ஸை" என்று ஸாதிப்பது என்ன? தாத்பர்ய சந்திரிகையில் वैधहिंसापि कापिलैः निषिद्धत्वात् என்பதால் "வைதஹிம்ஸை" என்றும் வ்யவஹரிப்ப தைக் காணலாம். இந்த நித்யஹிம்ஸை வைதஹிம்ஸை முத லியவை நித்யங்களான ஜ்யோதிஷ்டோம-வாஜபேயாதி யாகபசு ஹிம்ஸைகளேயே குறிக்கின்றன.

அதிகரண ஸாராவளியில், ஸாங்க்யன்சொன்ன கக்ஷியை ஒப்புக்கொண்டால் நித்யஹிம்ஸைகூட ஸித்திக்க வழியில்லாமல் போய்விடுமே என்று ஸ்ரீ தேசிகன் कीदृशी नित्यहिंसा என்பதால் கேட்கிறார். शरदि पशुमालभेत என்பதால் விதிக்கப்படும் ஸம்வத் ஸர பசு ஆலம்பமே நித்யஹிம்ஸைக்கு உதாஹரணமாக ஆசார் யர்களால் காட்டப்படுகிறது.

अशुद्धमिति चेन्नशब्दात् என்ற ஸூத்ரச்ருதப்ரகாசிகையில்

"तथा नित्यकर्मादीनामपि संवत्सर पश्वालंभनादिभिः अशुद्धियुक्तत्वंस्यात्" ॥

என்ற வாக்யத்தால் ஸம்வத்ஸரபசு ஆலம்பாதிகள் நித்ய ஹிம்ஸையென்று வ்யாக்யானம் செய்யப்பட்டு இருக்கிறது. மேற்கண்ட அதிகரண ஸாராவளி வ்யாக்யானத்தில் ஸ்ரீ குமார தேசிகனும்

नित्यहिंसैव न सिध्येत् इत्यर्थः ।

என்பதால் நித்ய ஹிம்ஸை ஸித்திக்காமல் போய்விடுவது அநிஷ்டமென்று காட்டினார்.

இம்மாதிரி நித்யஹிம்ஸையானது பரமைகாந்திகளுக்கு யாகத்தில் அவர்ஜநீயமாயிருப்பதுபோல் வேறு பலவித ஹிம்ஸைகளும் அவர்ஜநீயங்களாயிருப்பதையும் ஸ்ரீ தேசிகாதி ஆசார்யர்களே காட்டியுள்ளார்கள்.

### அவர்ஜ்நீய ஹிம்ஸை.
### தாத்பர்ய சந்திரிகையில் வாக்யம்

मात्रास्पर्शास्तु कौन्तेय என்ற கீதா சுலோக தாத்பர்ய சந்திரிகையில்

**यथा तपश्चर्यायां, यागादे च वात, आतप, क्षुत् पिपासा, पश्वालंभादयः यावत्तत्कर्म समाप्ति क्षन्तव्याः, तथा अत्रापि शस्त्रपात शत्रुवधादयः। तस्मात् अवर्जनीय—**

என்ற வாக்யத்தால், "தபஸ் அநுஷ்டிக்கையில், காற்று, வெயில், பசி, தாஹம், முதலிய சிரமங்களும், யாகங்களில் பசு ஆலம்பாதி சிரமும், அந்தந்த கர்மா முடியும் வரையில் எப்படி ஸஹித்துக் கொள்ள வேண்டியவைகளோ அப்படியே தான் யுத்தத்திலும் சத்ருவதாதி சிரமங்களும் ஸஹ்யங்களே. ஏனெனில் அந்த சிரமங்கள் அவர்ஜநீயங்களாயிருக்கின்றன." என்பதால் தபஸ் யாகம் முதலிய உத்தம தர்மங்களிலும் அவர்ஜநீய சிரமங்களை ஸஹித்துக்கொள்ள வேண்டியதே என்று காட்டி பசு ஆலம்பதர்மம் சிரமமாயினும் அது அவர்ஜனீயமென்பதை காட்டினர்.

### சங்க-சக்ர தப்த முத்ராதாரணம் அவர்ஜநீய ஹிம்ஸை.
### ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பஞ்ச ஸம்ஸ்காரம் ஆவச்யகமாக விதிக்கப்படுகிறது. அதில உள்ள தாபஸம்ஸ்காரமானது ஹிம்ஸையென்பதில் ஸந்தேஹமில்லை. அக்நியில் காய்ச்சிய சங்க-சக்ராதி முத்ரைகளால் பிராம்மணாதிகளின் சரீரத்தில் வ்ரணம் செய்து ஹிம்ஸிப்பது பாபமல்லவா? ஆயினும் இது சாஸ்த்ரீயமாகையால் பரமைகாந்திகளும் இந்த அவர்ஜநீய ஹிம்ஸையைச் செய்து தீரவேண்டியதாகவே இருக்கிறது. अनर्थ पर्यवसितः तादात्विकदुःखजनकोऽव्यापारः हिंसा என்று ஸ்ரீ தேசிகன் ஸாதித்த ஹிம்ஸாலக்ஷணப்படி தாப ஸம்ஸ்காரத்தில் தத்காலத்தில் துக்கமிருக்கிறது. ஆயினும் அனர்த்த பர்யவஸானமில்லையென்று சாஸ்திரங்கள் கூறியுள்ளன. ஆகையால் தாப ஸம்ஸ்காரமானது பிரத்யக்ஷத்தில் ஹிம்ஸையாயிருந்தும்கூட, சாஸ்திர பலக்கா.

லேயே அது ஹிம்ஸையல்லவென்று நிச்சயித்து பரமைகாந்திகளும் அந்த ஹிம்ஸையை நிர்ப்பயமாகச் செய்கிறார்கள். இதற்கு யாகபசு ஹிம்ஸைதான் உதாஹரணம். ஸ்ரீ தேசிகன் ஸச்சரித்திர ரக்ஷையில், தாப ஸம்ஸ்காரம் ஹிம்ஸையென்கிற பூர்வ பக்ஷத்தைச் செய்துகொண்டு உத்ஸர்க்காபவாத நியாயப்படி அந்த ஹிம்ஸை தோஷாவஹமாகாது என்று ஸமாதானம் ஸாதிப்பதுடன் யாகபசு விஷயத்தையே இதற்கு உதாஹரணமாகவும் காட்டுகிறார்.

### பிராம்ஹணாதி சரீரத்தில் வ்ரணம் செய்வதுபற்றி ஸ்ரீதேசிகன் நிர்ணயம்

அக்னியில் காய்ச்சிய சங்க-சக்கிர முத்ரைகளால், தன் சரீரத்திலோ, பிறர் சரீரத்திலோ, வ்ரணம் அல்லது காயம் உண்டு பண்ணுவது தோஷமென்றும் பிராயச்சித்தாவஹ மென்றும் மன்வாதிகள் கூறுவதாக

न च सरन्ति मन्वादयः। प्रत्युत निषेधन्त्येव स्वशरीरे अन्य शरीरे वा व्रणकरणादिकम्। तत्करणे च प्रायश्चित्तानि अनुशिष्यन्ते ॥

என்பதால் ஸ்ரீ தேசிகன் பூர்வ பக்ஷத்தைச் செய்துகொண்டு பிறகு ஸித்தாந்தம் கூறுவதாவது:—

सामान्यतो व्रणकरणादि निषेधस्य उत्सर्गापवाद न्यायेन, समर्थयिष्यमाणैः, श्रुतिस्मृतीतिहास पांचरात्रैः ऐक कण्ठ्येन प्रतिपादितार्थ व्यतिरिक्त विषयत्वात् ॥ अन्यथा, अग्नीषोमीय हिंसादेरपि "नहिंस्यात्" इत्यादिना निषिद्धत्वेन अधर्मत्व प्रसंगात् ॥ என்று

இந்த வாக்யத்தில் "பிறர் சரீரத்தில் வ்ரணம் செய்வதுபாப மென்பது ஸாமான்ய சாஸ்திரமேயாகும். சுருதி-ஸ்ம்ருதி, இதிஹாஸ பாஞ்சராத்ராதி பிரமாண வசனங்களால், தாப ஸம்ஸ்காரமானது சாஸ்திரீயமாக விதிக்கப்பட்டிருப்பதால் அது விசேஷசாஸ்திரமாகும். ஆகையால் உத்ஸர்க்காபவாத நியாயப்படி இது தோஷமற்றதே. இப்படியொப்புக்கொள்ளாவிட்டால்

யாக பசு விஷயமும் ஹிம்ஸையாகி, அதர்மமென்று சொல்ல நேரிடும்."

என்பதால் ஸ்ரீ தேசிகன், தாப ஸம்ஸ்காரம் ஹிம்ஸையென்பதை அங்கீகரித்து ஸமாதானம் கூறியதும், இதற்கு யாகபசு விஷயத்தையே உதாஹரணமாகக்காட்டி தாப ஸம்ஸ்காரமும், யாகபசு விஷயமும் துல்ய யோக க்ஷேமமுள்ளவை என்பதையும் ஸாதிப்பதும் முக்யம். ஆதலால் யாகபசு விஷயத்தை ஹிம்ஸையென்று நினைக்கும் பரமை காந்தி, தாப ஸம்ஸ்காரத்தையும் ஹிம்ஸையென்று த்யஜிக்க வேண்டிவரும்.

யாக பசு ஹிம்ஸையானது பிராண வியோகரூபமானது. தப்த முத்ராதாரண ஹிம்ஸையோ ப்ராணவியோகமன்று. வெறும் வ்ரணகரணமாத்ரமே. ஆயினும் இரண்டையும் ஹிம்ஸையென்றும், இரண்டும் துல்யமென்றும் ஸ்ரீதேசிகன் இங்கு காட்டுவதும் சாஸ்த்ரவச்யர்களால் கவனிக்கத்தக்கது.

ஸந்தியாவந்தனத்திலும் ஹிம்ஸையுண்டு.
ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம்.

. மேலும் ஸந்த்யாவந்தனத்திலும் ஹிம்ஸையிருப்பதாக ஸ்ரீ தேசிகன் ஸம்மதியாலேயே நிச்சயமாவதைப் பார்க்கலாம். மந்தேஹ ராக்ஷஸர்களை வதம் செய்யவே அர்க்கியதானம் சுருதியில் விதிக்கப்படுகிறது, இந்த ஹிம்ஸாபாபத்தைப் போக்கிக்கொள்ளவே ப்ராயச்சித்த ரூபமாக பிரதக்ஷிணமும் சுருதியில் விதிக்கப்பட்டது.

यत्प्रदक्षिणं प्रक्रमन्ति तेन पाप्मानमवधून्वन्ति

என்று. பிரதக்ஷிணம் செய்வதால் ராக்ஷஸவத பாபம் போகிறதென்று ஸ்பஷ்டமாக சுருதி சொல்லுகிறது. இது வெறும் அர்த்தவாதமாத்திரமல்ல. ஏனெனில் ஸ்ரீ தேசிகாதி ஆசார்யர்களும் அர்க்கியதானத்தில் ஹிம்ஸையிருப்பதாகக் கூறுகிறார்கள். ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷையில் ஸ்ரீ தேசிகன் உதாஹரித்துள்ள வசனத்தில்

प्रायश्चित्तं तु हिंसायाः परिक्रम्य प्रदक्षिणम् என்று

மந்தேஹ வதம் ஹிம்ஸையென்றும் அந்த வதப்பிராயச்சித்த

மாக பிரதக்ஷிணம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. மேலும் ஸ்ரீ தேசிகன் ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷையில் ஸந்த்யா பிரகரணத்தில் அர்க்கிய தானத்தைச் சொல்லிவிட்டு

ततो वज्रीभूत तज्जल निहत मंदेहाख्य रक्षो निरसन पाप्मा वधूननार्थं प्रदक्षिणं परिक्रम्य

என்ற வாக்யத்தால் "மந்தேஹ ராக்ஷஸர்களை நிரஸனம் செய்த பாபத்தைப் போக்கடித்துக்கொள்ள பிரதக்ஷிணம் செய்து"

என்று கண்டோக்தியாகக்கூறி, வதம்-பாபம்-பிராயச்சித்தம் இவைகளை அங்கீகரிக்கிறார்.

இங்கு பிரத்யக்ஷஹிம்ஸை, பரோக்ஷஹிம்ஸையென்ற கக்ஷியை சாஸ்திரவஸ்யர்கள் சொல்லமுடியாதென்பதை ஸ்ரீ தேசிகஸூக்தியாலேயே நிச்சயிக்கலாம். பாபஜநகத்வாம்ஸத்தில் இரண்டும் துல்யங்களே! பிரத்யக்ஷஹிம்ஸையில்மட்டும் பாபம் பிரத்யக்ஷமாகத் தெரிகிறதா? ப்ரத்யக்ஷம், பரோக்ஷமிரண்டிலும் பாபமானது சாஸ்திரத்தாலேயே அறியத்தக்கதாயிருக்கிறது. சாஸ்திரங்களில் மானஸிகமாகச் செய்யப்படும் பாபங்களில்கூட தோஷமும், பிராயச்சித்தமும் விதிக்கப்படுவதைக் காண்கிறோம். மானஸிக வ்யபிசாரம், மானஸிக பிரம்ஹவதம், மானஸிக பாகவதாபசாரம் முதலியவை பிரத்யக்ஷங்களாயில்லாதிருந்தும் அவைகளில் பாபமில்லையா? ஆசௌசாதிகளில் அசுத்தியானது பிரத்யக்ஷமாயிருக்கிறதா? இதுபோல் மந்தேஹவதத்திலும் தோஷமும் பிராயச்சித்தமும் உண்டென்று ஆசார்யர்களும் சாஸ்திரங்களும் கூறுவதை ஆக்ஷேபிக்க முடியாது.

ஒரு முக்ய விஷயமுமிருக்கிறது. அதாவது மந்தேஹவதமானது ஹிம்ஸையென்றும் தோஷஜநகமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டு அந்த தோஷத்திற்காக பிராயச்சித்தத்தையும், சுருதி, ஸ்மிருதி ஆசார்ய ஸூக்திகள் விதிக்கின்றன. யாகபசு விஷயத்திலோவென்றால் ஹிம்ஸையேயல்லவென்றும், ரக்ஷணமென்றும் கூறிவிட்டதால், பாப-பிராயச்சித்தாதி சங்கைக்கே அவகாசமில்லை. இப்படி வித்தாந்தமிருப்பதால் பரம்மைகாந்திக்கு யாகபசு விஷயத்தைக்காட்டிலும் அர்க்ய

தானமே தோஷாவஹமென்றும் சொல்லக்கூடியதாயிருக்கிறது. யாகபசு விஷயத்தில் ஸ்ரீ தேசிகன்

"ஸாங்க்யாதிகள் சொன்ன ஸ்வல்பதோஷ
ஸங்கரத்திற்கும் அவகாசமில்லை"

என்று கீழேசொன்ன பரமதபங்க வாக்யத்தில் ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறாரல்லவா? ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷா வாக்யத்தில், அர்க்க்ய தானத்தில் ஹிம்ஸையையும் தோஷத்தையும் பிராயச்சித்தத்தையும் ஸ்ரீ தேசிகனே ஸாதிப்பதும் கவனிக்கத்தக்கது.

### பஞ்சஸூநா தோஷமென்கிற ஹிம்ஸாதோஷம்

மேலும் பரமைகாந்திகளுக்கும் வைஶ்வதேவ பஞ்ச மஹாயக்ஞாதிகள் ஏற்பட்ட காரணமென்ன? ஹிம்ஸாதோஷ பரிஹாரார்த்தமல்லவா? ஸ்தாவரப் பிராணிகளாகிய நெல்லு முதலியவைகளிலும் ஜீவன் இருப்பதால் ஆஹாரத்திற்காக அவைகளை ஹிம்ஸை செய்யவேண்டியிருக்கிறது. ஆகையால் மனு முதலிய ஸ்ம்ருதிகாரர்கள் पंचसूनागृहस्थस्य இத்யாதி வசனங்களால் கிரஹஸ்தனுக்கு ஏற்படும் ஐந்துவித ஹிம்ஸா தோஷத்தை விவரித்து அதற்குப் பிராயச்சித்தமாக வைஶ்வதேவ பஞ்ச மஹாயக்ஞங்களை விதித்துள்ளார்களென்பதை யாவரும் அறிந்ததே.

• அதிகரணஸாராவளியில் किंचोत्सर्गापवाद क्रममिह जहतः कीदृशी नित्यहिंसा என்ற சுலோக வ்யாக்யானத்தில் ஸ்ரீ குமார வரததேசிகனும் இதை ஸாதிக்கிறார்.

नित्यहिंसैव न सिध्येदित्यर्थः । ननु पिष्टादिनापि नित्यत्व सिद्धेः विरोधो नास्तीति चेत्, स्मृति पुराणादिषु पंचमहायज्ञ प्रस्तावे "पंचसूना गृहस्थस्य" इत्यादिना पेषणादेरपि हिंसात्व कथनात् ।। என்று

இந்த வாக்யத்தில் "மாவு (பிஷ்டம்) னாலும் நித்ய யாகங்களைச் செய்து, ஹிம்ஸையை விட்டுவிடலாமென்றால், அதிலும் ஹிம்ஸையிருக்கிறது. சுருதி புராணாதிகளில் நெல்லு, அரிசி, மாவு முதலியவைகளை அரைப்பதிலும் பிராணி ஹிம்ஸை இருப்

பதாகக் கூறப்பட்டு அதற்காக வைஶ்வ தேவர்திகள் விதிக்கப் பட்டிருக்கின்றன" என்பதால் ஸ்பஷ்டமாக இதைக் கூறினார்.

இதனால் பிஷ்டபசுயாஜிகளுக்கும் ஹிம்ஸா தோஷம் போகாதென்று ஸ்ரீ குமாரதேசிகன் திருவுள்ளமாகிறது கவனிக்கத்தக்கது.

### ஓஷதி, விருக்ஷ பலாதிச்சேதனத்திலும் ஹிம்ஸையுண்டு

वृक्षान् तथौषधीश्चापि च्छिन्दन्ति पुरुषा इह ।
जीवाहि बहवो ब्रह्मन्! वृक्षेषु च फलेषु च ॥

என்பதால் மஹாபாரத வசனமானது விருக்ஷம், ஓஷதிகள், பழங்கள் முதலிய அசர பிராணிகளிலும் ஜீவன் இருப்பதைக் கூறுகிறது. வேதாந்திகளும் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். மனு முதலியவர்கள் காய்-கிழங்குகளையும், விருக்ஷங்களையும், ஓஷதிகளையும் வெட்டுவதிலும், அறுப்பதிலும் ஹிம்ஸையிருப்பதாகக்கூறி பிராயஶ்சித்தம் விதித்துள்ளார்கள். चराचराणि भूतानि सर्वाणि भगवद्वपुः என்று ஆசார்யர்கள் உதாஹரிக்கும் வசனத்திலும் அசரபிராணிகளும் பகவச் சரீரங்களென்றும் அவைகளுக்கும் ஆநுகூல்யம்செய்ய ப்ராப்தமென்றும் விதிக்கப்படவில்லையா? ஆயினும் மேற்கண்ட அசரபிராணி ஹிம்ஸையானது பரமைகாந்திகளுக்கு அவர் ஜநீயராகவும், அவஶ்யாசரணீயமாயுமிருக்கவில்லையா?

### துளஸீ க்ரஹணத்திலும் ஹிம்ஸையுண்டு

பகவதாராதனத்திற்காக துளஸியை க்ரஹிப்பதும் அவர்ஜநீய ஹிம்ஸையென்றே ஆசார்யர்களின் அபிப்பிராய

உபநிஷத் பாஷ்யகாரராகிய ஸ்ரீ ரங்கராமாநுஜஸ்வாமீ, अहिंसन् सर्वभूतानि अन्यत्र तीर्थेभ्यः என்ற சாந்தோக்ய ஶ்ருதிக்கு வ்யாக்யானம் செய்கையில்

शास्त्रीय हिंसा व्यतिरिक्तां हिंसां अकुर्वाण इत्यर्थः।
न च क्रत्वर्थ पशु हिंसायाः हिंसात्वाभावस्य उक्तत्वात्
"अन्यत्र तीर्थेभ्यः" इति व्यर्थमिति वाच्यं।
" न वा उवे" इति मन्त्रलिंगात् तस्य हिंसात्वाभावेऽपि
गृहस्थानां अवर्जनीय तुलस्याहरणादि हिंसाया अपि हिंसा
धात्वर्थ संभवात् तत्पर्युदासार्थं "अन्यत्र तीर्थेभ्यः इत्यस्य
आवश्यकत्वादिति द्रष्टव्यम्।"

என்ற வாக்யத்தினால் இதைக் கூறுகிறார். அதாவது:— யாகபசு ஹிம்ஸையானது ஹிம்ஸையல்லவென்பது 'நவாஉ' முதலிய மந்திரங்களால் ஸித்தித்து விட்ட படியால் இந்த சுருதியிலும் "அந்யத்ர தீர்த்தேப்ய:" என்பதால் அதையே திருப்பிச் சொல்லுவது வ்யர்த்தமென்று நினைக்கக்கூடாது. கிரஹஸ்தர்களுக்கு அவர்ஜ்ஜநீயமான துளஸீக்ரஹணத்திலும் ஹிம்ஸையிருப்பதால் அதைப் பரிஹரிப்பதற்காக अन्यत्र तीर्थेभ्यः என்ற விலக்குவிதி (அபவாதவிதி) அவச்யமென்று அறியவேணும்."

இவ்விதம் துளஸீக்ரஹணம் ஹிம்ஸையென்பதை ஒப்புக்கொண்டு அது சாஸ்திர விஹித ஹிம்ஸையாயிருப்பதால் தோஷமற்றது என்று சொல்லப்படுவதால் கிருஹஸ்த பரமைகாந்திகளுக்கு துளஸீக்ரஹணமும் ஓர் அவர்ஜ்ஜநீய ஹிம்ஸையென்பது ஸித்திக்கிறது.

### கிருஷி முதலிய அநேக லௌகிக ஹிம்ஸைகளும் அவர்ஜ்ஜநீயங்களே

இதுபோல் கிருஷிமுதலிய லௌகிக ஹிம்ஸைகள்கூட பரமைகாந்திகளுக்கு அவர்ஜ்ஜநீயங்களாயிருக்கின்றன. हिंसाप्रायां कृषिं என்பதால் கிருஷியானது ஹிம்ஸாத்மக கார்யமென்று ஸ்மிருதிகாரர்கள் கூறினார்கள். அந்த தோஷப் பிராயச்சித்தார்த்தமாகவே பாராசராதிகள் கலயஜ்ஞ (खलयज्ञ) த்தை விதித்தார்கள்.

कृषिं साध्विति मन्यन्ते तत्र हिंसा परा मता ।
कर्षन्तो लांगलैः उर्वीं घ्नन्ति भूमिशयान् बहून् ॥

என்ற மஹாபாரத வசனமானது, கிருஷியால் பூமியில் வாழு. அனேக பிராணிகள் கொல்லப்பட்டுப் போவதால் அது பெரிய ஹிம்ஸாகார்யமென்று கூறுகிறது. அதனாலேயே பிராம்ஹணனுக்கு கிருஷி நிஷித்தம். கிருஷி ஹிம்ஸையை கிருஹஸ்தன், தானே,நேரில் செய்யாமல் போனாலும் வேலைக்காரர்களான கிருஷிகர்கள் மூலம் செய்யப்படும் ஹிம்ஸையும் க்ஷேத்ரபதியான கிரஹஸ்தனையே சேரும்.

இதை अनुमन्ता विशसिता निहन्ता क्रय विक्रयी । संस्कर्ता चोपहर्ता च खादकश्चेति घातुकाः । (5-51)
என்பதால் ஹிம்ஸையை அனுமதிப்பவனும் ஹிம்ஸா தோஷ தோஷமுள்ளவனென்றும் மனு கூறினார்.

வேறுபல அவர்ஜ்ஜநீய ஹிம்ஸைகளும் மஹாபாரதம் துலாதார உபாக்யானத்திகளில் கூறப்படுகின்றன.

धान्यबीजानि यान्याहुः व्रीह्यादीनि द्विजोत्तम ॥
सर्वाण्येतानि जीवाहि तत्र किं प्रतिभाति ते ॥
वृक्षान् तथा ओषधीश्चापि छिन्दन्ति पुरुषा इह ।
जीवाहि बहवो ब्रह्मन् वृक्षेषु च फलेषु च ॥
उदके बहवो जीवाः तत्र किं प्रतिभाति ते ॥
चंक्रम्यमाणा जीवान् च धरणीसंश्रितान् बहून् ।
पद्भ्यां घ्नन्ति नराः विप्र तत्र किं प्रतिभाति ते ॥
उपविष्टाश्शयानाश्च तत्र किं प्रतिभातिते ॥
बहुसंचित्य इह वै नास्ति कश्चित् अहिंसकः ॥

இத்யாதிகளான ஹிம்ஸைகளில் எதை பரமைகாந்திகள் வர்ஜிக்க முடியும்?

யாகத்தில் பசு கார்யமானது
அதற்கு அநுகூலாசரணமேயாகும்
ஆசார்யர்களின் திருவுள்ளம்

चराचराणि भूतानि सर्वाणि भगवद्वपुः ।
अतस्तदानुकूल्यं मे कार्यमित्येष निश्चयः ॥

என்பதால் பகவச்சரீரங்களான சராசர பிராணிகள் எல்லாவற்றிற்கும் ஹிம்ஸை செய்யாமல் அநுகூலாசரணமே பரமைகாந்திக்கு ஆவச்யகமென்று ஆசார்யர்கள் விதித்ததும் மேற்கண்ட அவர்ஜ்ஜநீய யாகாதி சாஸ்திரீய ஹிம்ஸைகளைத் தவிர மற்ற விஷயமென்பதே ஸித்தமாகிறது. இங்கு அசரப்பிராணிகள் கூட பகவத்சரீரங்களென்று கூறி அவைகளுக்கும் ஹிம்ஸை செய்யக் கூடாதென்று ஆசார்யர்களின் திருவுள்ளமாகிறது முக்ய விஷயம்.

ஆதலால் அஹிம்ஸாத்மகமாயும், ரக்ஷணரூபமாயுமுள்ள யாக பசு விஷயமானது பரமைகாந்திகளுக்கும் நியதங்களென்று ஆசார்யர்களின் திருவுள்ளமிருப்பது மறுக்கவொண்ணாதது.

பசுவுக்கு ஆநுகூல்யாசரணமே.

இங்கு ஒரு முக்ய விஷயம் கவனிக்கத்தக்கது. யாகபசு விஸஸநமானது அந்த பசுவுக்கு ஓர் ஆநுகூல்யாசரணத்திலேயே சேர்ந்ததென்பது ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதி ஆசார்யர்களின் திருவுள்ளமாயிருக்கிறது. ஸ்ரீ பாஷ்யகாரர், निहीनतरच्छागादि देह-परित्याग पूर्वकं कल्याणतरदेह प्रापकत्व श्रुतेः संज्ञपनस्य என்றும் रक्षणमेव अग्नीषोमीयादिषु संज्ञपनं । என்றும் யாகபசுவுக்கு மிருவும் தாழ்ந்த அசரீரம் தொலைந்து மிகவும் உயர்ந்தசரீரமும், உத்தமலோகமும் கிடைப்பதால் அது ரக்ஷணகார்யமேயாகுமென்று நிச்சயித்தாராகையால் அது பசுவுக்கு ஆநுகூல்யா சரணமென்பதில் ஆக்ஷேபமுண்டோ? ஸ்ரீ தேசிகனும், उक्ता मन्त्रार्थवादैः पशु हितमिति सा, என்றும், निर्धूते पश्वनर्थे என்றும் யாக ஸம்பந்தத்

தால் அந்த பசுவின் அனர்த்தங்கள் நீங்கி விடுவதால் அது பசுவுக்கு ஹிதமென்று கூறினர். ஸர்வார்த்த ஸித்தியிலும் ஸ்ரீ தேசிகன் இதை வெகு ஸ்பஷ்டமாக்கியுள்ளார். पापफलपरिणति-रूप पशु शरीर विच्छेदेन पशोरेव निरतिशय सुखभोगानुरूप विशिष्ट शरीर-हेतुत्वात் என்பதால் பாபபலனாக ஏற்பட்ட நிஹீந பசு சரீரம் தொலைந்து யாகபசுவுக்கு உயர்ந்த அளவற்ற ஸுகஹேதுவான உத்தம சரீரம் கிடைக்கிறதென்று கூறியுள்ளார். ஆகையால் பசுவுக்கு ஜன்மாந்திர பாபபலனாக ஏற்பட்ட நிக்ருஷ்ட அஜசரீரம் நீங்கி மேலே நிரூபித்த ஸ்ரீ தேசிக ஸூக்தி பிரமாணத்தின்படி யஜமானனோடு கூட ஸ்வர்க்க-மோக்ஷாதி உத்க்ருஷ்ட நிலைக் கொடுக்கும் யாகமானது பசுவுக்கு ஆநுகூல்யா சரணத்தில் சேர்ந்ததேயென்பது நிச்சயமல்லவா? ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கித்தவிக்கும் பத்தஜீவனை, ஆசார்யகருணையால் கடாக்ஷித்துக்கைதூக்கிக் கரையேற்றி விடுவது ஆநுகூல்யா சரணமாகிறது போல், யாகத்தில் ஸம்பந்தப்படுத்தி பசுவுக்கு நிஹீநஜந்ம நிவர்த்தநாதி மூலமாக பகவத் ப்ராப்தி ஏற்படச்செய்து ரக்ஷிப்பது ஆநுகூல்யா சரணமென்றே ஆசார்யர்களின் திருவுள்ளமாயிருப்பது மறுக்கவொண்ணாத உண்மையாகும். ஆகையால் चराचराणि भूतानि என்கிற சுலோகமே பரமைகாந்திகளுக்கும் யாக பசு விஷயம் உத்தமமான ஹிதகார்யமென்பதற்கு பிரமாணமாயிருக்கிறது. அஹிம்ஸாதர்மத்தை வற்புறுத்தும் சாஸ்திரங்கள் யாவற்றும் அவிஹிதமாயும், அசாஸ்திரீயமாயுமுள்ள லௌகிக காமகார ஹிம்ஸையைப் பற்றியவையென்று பிராமாணிகர்கள் அறியக்கடவர்.

## ஸ்ரீபாஷ்ய தீகையிலும் பசு விஷயம்.

இவ்வாறாக யாகபசு விஷயத்தைப்பற்றி ஸ்ரீ பாஷ்யகார, ஸ்ரீ தேசிகாதிகள் மிகுந்த சாஸ்திரஸம்பந்தையுடன் விசாரித்து நிஷ்கர்ஷித்ததைப்போல் வேறு எந்த ஸம்பிரதாயத்திலும், எந்த ஆசார்யர்களும் இவ்வளவு ஸ்பஷ்டமாயும், உறுதியாயும் இங்ஙனமாயும் ஸித்தாந்தம் செய்நதில்லையென்று நிச்சயமாகக் கூறலாம். அதிலும் முக்யமாக ஸ்ரீ தேசிகன் எங்கெங்கு ஸந்தர்ப்பம் நேருகிறதோ அங்கெல்லாம் யாகபசு தர்மத்தை உபதேசிக்காமல் விடு

ர்தில்லை. ஸ்ரீ தேசிகன், தான் அருளிச் செய்திருக்கும் "ஸுபாத நீவீ" என்ற காவ்யத்தில் கூட ஸதாஸ்ரித பத்ததியில் ாஸ்தோயं त्रिदश सरिता என்கிற சுலோகத்தில் जन्तु हिंसा मखेन என்பதால் பிராணிஹிம்ஸையானது யாகத்தினால் சுத்தியடைகிறது. ன்றும் கூறியுள்ளார். இப்படி யாகபசு விஷயத்தை ஸந்தேஹத்திற்கிடமில்லாத அநந்யதாஸித்த பிரமாணங்களைக்கொண்டு ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீதேசிகாதி பூர்வாசார்யர்கள் உத்தம தர்மமாக நிச்சயித்திருப்பதை அந்த ஆசார்யர்களின் சிஷ்ய பிரசிஷ்ய பரம்பரையிலுள்ளவர் யாவரும் அறிந்து கொள்ள ப்ராப்தம்.

## பூர்வாசாரியர்களின் யாகானுஷ்டானம்.
## ஸ்ரீ பாஷ்யகார பிதா. பெரியநம்பிகள்

இவ்வாறு யாகாக்நிஹோத்ராதிகள் நித்யங்களாயும், ஆச்ரம தர்மங்களாயிருப்பதாலும், யாகபசு தர்மம் உத்தம வைதிக தர்மமாயிருப்பதாலும் பூர்வாசாரியர்களும் மற்றும் அநேக பரமைகாந்தி ஸ்ரேஷ்டர்களும், ஸ்வசாகா ஸூத்ர விதிகளின்படி அக்நிஹோத்ர-ஜ்யோதிஷ்டோமாதிகளை அநுஷ்டித்திருக்கிறார்கள். இதற்கு சரித்திர-குலபரம்பரா நிப்ரஸ்தாவங்களால் ஆங்காங்கு பஹுளமான ஆதாரங்கள் கிடைக்கின்றன. முக்யமாக நம் பூர்வாசாரியர்களில், பாஷ்யகாரர், ஸ்ரீ தேசிகன் இவர்கள் திருவம்சத்தில் யாகாநுஷ்டானம் இருந்ததென்பது மிகவும் முக்யமான விஷயமாகும். ஸ்ரீபாஷ்யகாரர் திருத்தகப்பனார் "ஆஸுரி கேசவஸோமயாஜீ" என்று திருநாமமுள்ளவர். அவர் ஸோம யாகம் செய்தருளியவரென்பது நிச்சயமாகிறது. பெரிய நம்பிகள் முதலிய வேறு பல பரமாசார்யர்களும் யக்ஞானுஷ்டானம் செய்துவர்களென்பது ஸ்ரீதேசிகன் ஸூக்தியாலேயே ஸ்திரப்படுகிறது.

ரஹஸ்யத்ரயஸாரம் ஸ்ரீமத்லோகாதிகாரத்தில் :—

> பெரியநம்பி முதலான பரமாசார்யர்களும் தம்தாம் ஸூத்ரங்களின்படியே யக்ஞாதிகள் பண்ணினார்களென்பது ஸர்வருக்கும் பிரஸித்தம்"

என்ற வாக்யத்தால் இதை ஸாதிக்கிறார். இந்த வாக்யத்தில் "முதலான" என்ற பதத்தால் பெரியநம்பிகள்போல் மற்றும் பல ஆசார்யர்கள் யக்ஞாநுஷ்டானம் பண்ணினதையும், ஸ்ரீ தேசிகன் குறிப்பிடுகிறார்.

## ஸ்ரீ தேசிகன் பிதாமஹனும், குமார, நைஞராசாரியரும் யாகாநுஷ்டானிகள்

ஸ்ரீ தேசிகனின் பிதாமஹனை ஸ்ரீ புண்டரீகாக்ஷ ஸூரி அநேக யாகாநுஷ்டானம் செய்திருப்பதை ஸ்ரீ தேசிகனே பல விடங்களில் பெருமையாகப் பேசுவதைப் பார்க்கிறோம். वैश्वा मित्रस्य पौत्रः विततमखविधेः पुण्डरीकाक्षसूरेः என்று தத்வமுக்தா கலாபத்தில் ஸ்ரீ தேசிகனே தமது பிதாமஹனை புண்டரீகாக்ஷ ஸூரி யாகாநுஷ்டானம் செய்தவரென்று குறிப்பிட்டுள்ளார். இங்கு विततमखविधेः என்பதால் அனேக யாகங்கள் செய்தவ ரென்பதும் ஏற்படுகிறது. पुण्डरीकाक्ष सोमसुत्संभवस्य என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்திலும் நிர்த்தேசிக்கிறார். ஸ்ரீ வைஷ்ணவர் யாவரும் தினமும் पुंडरीकाक्षयज्वनः—पौत्रः என்னும்ஸ்ரீ வரதகுரு ஸூக்தியை அநுஸந்தித்து வருகிறார்கள்.

இவ்வாறு ஸ்ரீ தேசிகன் பிதாமஹன் அனுஷ்டித்ததுமட்டு மின்றி ஸ்ரீ தேசிகனின் திருக்குமாரர் ஸ்ரீ நைஞராசாரியரென் கிற ஸ்ரீ குமாரவரததேசிகனும் ஸ்ரீ காஞ்சியில் அக்நிஷ்டோமாதி யாகங்களை அநுஷ்டித்ததாக ஸ்ரீ பிரம்ஹதந்திர ஸ்வதந்திரஜீயர் செய்த குரு பரம்பராப்பிரபாவ ஸ்ரீ கோசத்தில் சொல்லப் படுகிறது:—

"மீண்டும் பெருமாள் கோவிலேற எழுந்தருளி
அக்நிஷ்டோமாதி க்ரதுக்களையும் செய்தருளி
முதலிகளோடே ஸித்தாந்த ப்ரவசனம்பண்ணிக்
கொண்டெழுந்தருளியிருந்தார்"

இவ்வாறு ஸ்ரீ தேசிகன் குமாரரும் யாகாநுஷ்டானம் செய் தருளியது ஸ்பஷ்டமாகிறது. பதினெறு ரிதவிக்குகளாலும் ரிக், யஜுஸ், ஸாமாதி வேதங்களாலும், ஆபஸ்தம்ப ஸூத்ரம் ... யாதிகல்பஸூத்ரங்களாலும் அநுஷ்டிக்கப்படவேண்டிய அக் நிஷ்டோமாதி யாகங்கள் ஸ்ரீ தேசிகன் திருவம்சத்தில் அநுஷ் டிக்கப்பட்டதைக்கொண்டு பார்த்தால் ஸ்ரீ தேசிகன் காலத்திலும் அந்த திருவம்சத்திலும் மற்ற ஸ்ரீ வைஷ்ணவர்களிடையிலும் ஸ்ரௌதப் பிரயோகாதிகள் எவ்வளவு பஹுளமாக பிரசாரத்தி லிருந்தனவென்பது விளங்கும்.

இப்படி நம் ஸம்பிரதாயத்தில் முக்யர்களான ஸ்ரீ பாஷ்ய கார-ஸ்ரீ தேசிகாதிகள் திருவம்சத்தில் யாகாநுஷ்டானம் இருந்ததுபோல் மற்றும் பல ஆசார்யர்களும், பரமைகாந்தி ச்ரேஷ்டர்களும் யக்ஞாநுஷ்டானம் செய்துள்ள விவரத்தை ஆங்காங்கு அந்தந்த குல பரம்பராதி சரித்ரமூலமாக யாவரும் அறிந்திருப்பதால் அதை இங்கு நாம் விவரிக்கப்புகவில்லை.

## ஸ்ரீ தேசிகனும் அநுஷ்டித்திருக்கவேண்டும்

இங்கு சிலர் ஸ்ரீ தேசிகன் அக்நிஹோத்ராநுஷ்டானம் செய்தருளினாரா என்று ஓர் ஸந்தேஹத்தைக் கிளப்பிப் பேசுவதைப் அறிந்துள்ளோம். பிரமாணபரனான ஸ்ரீ தேசிகன் அநுஷ்டித்தாரென்றே நாம் நிச்சயிக்கிறோம். அநுஷ்டிக்கவில்லையென்று கூறுகிறவர்களுக்கு என்ன பிரமாணம்? எதைக்கொண்டு அப்படி அவர்கள் நிச்சயிக்கிறார்கள்? ஸ்ரீ தேசிகன் அனுஷ்டித்தாரென்பதற்கோ அவருடைய ஸ்ரீ ஸூக்திகளே பிரபல பிரமாணங்களாயிருக்கின்றன. யாவஜ்ஜீவ சுருதிவிஹித அக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று ஸ்ரீ தேசிகன் தமது திருவாக்காலேயே பலவிடங்களில் நிச்சயித்ததைக் கீழே உபபாதித்தோம். ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷையில் பிரபந்நனுக்கு அக்நிஹோத்ரத்தை ஸ்ரீ தேசிகன் விதித்தார். சரமச்லோகாதிகாரத்திலும் பிரபந்நனுக்கு அஹோராத்ர கிருத்யமான பகவத் ஸமாராதனத்தில் அக்நிஹோத்ரத்தை ஆவச்யகமாக நியமித்தார். விஹிதத்வாதிகரண அதிகரண ஸாராவளியில், नित्यत्वस्यापि सिद्धेः என்பதால் அக்நிஹோத்ராதிகள் நித்யங்களென்று ஸ்தாபித்தார். விஹிதத்வாதிகரணஸித்தாந்த பிரமாணத்தின்படி பிரபந்நன் வர்ணாச்ரம தர்மமுறையில் அக்நிஹோத்ராதிகளை அவச்யமனுஷ்டிக்கவேணு[illegible] சரமச்லோகாதிகாரத்தில் நிர்ணயித்தார். விநியோக[illegible]த்வம் முதலிய சர்ச்சைகளைச்செய்து நித்ய-காம்ய அக்[illegible] ஹோ[illegible]ர பேதத்தை நிஷ்கரித்தார். சாஸ்திரீய நியமநாதிகாரி[illegible] களி[illegible] நித்யாக்நிஹோத்ராதிகளைப் ப்ரபன்னனுக்கு நிய[illegible] மா[illegible]ர்.

இவ்வாறு கணக்கற்ற விடங்களில் அக்நிஹோத்ராதிக நித்யங்களென்று நி[illegible]ந்தேஹமாக நியமித்த ஸ்ரீ தேசிகன் வளவு சாஸ்திரியமர்யாதைகளையும் ஸ்வவிஷயத்தில் ஸ்வாநுஷ்

னத்தால் காட்டவில்லையென்று ஸாதிக்க நமது ஹ்ருதயம் நடுங்குகிறது. ஸ்ரீதேசிகன் அக்நிஹோத்ராதிகள் அநித்யங்களென்றோ, விகல்பிதங்களென்றோ, அதிகாரி விசேஷ வ்யவஸ்திதங்களென்றோ, எங்காவது ஒரு வரியாவது ஒரு அக்ஷரமாவது கூறியிருக்கிறாரா? அப்படியிருந்தாலாவது ஸமாதானம் கூறலாம். ஆகையால் ஸ்ரீ தேசிகன் ஸூக்திகளைக் கொண்டே அவர் அக்நிஹோத்ராதிகளை அநுஷ்டித்தாரென்று நிர்ணயிக்கத் தடையில்லை. குருபரம்பரா சரித்திராதிகளில் காணப்படவில்லையென்பது மட்டும் ஓர் காரணமாகாது. ஸ்ரீ தேசிகனின் ஸித்தாந்த ஸூக்திகளுக்கு முன்பாக இந்தக்கக்ஷி நிலைத்திருக்க முடியாது. மேலும் ஸ்ரீதேசிகன், ஸந்த்யா வந்தன, பிரம்ஹயக்ஞ, ஔபாஸன வைஶ்வதேவாதிகளான மற்ற நித்ய கர்மாக்களை தினமும் அநுஷ்டித்தது பற்றி குரு பரம்பரை கோசத்தில் குறிப்பிட்டுள்ளார்களா? அதுபோல் நித்ய கர்மாவான அக்நிஹோத்ராநுஷ்டானத்தையும் குறிப்பிடாதது ஓர் பிரமாணமாகிவிடாது.

## கலியிலும் யாகாநுஷ்டானமுண்டு.
## ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம்

கலியில் செய்வதில் ஸ்ரீதேசிகனுக்குத் திருவுள்ளமில்லையென்று சிலர் சொல்லுவதும் நிலைக்காது. ஸ்ரீ தேசிகபிதாமஹன் யாகம் செய்தது கலியில் அல்லவா? ஸ்ரீ தேசிகன் குமாரர் கலியில் யாகம் செய்யவில்லையா? ஸ்ரீ தேசிகனுக்கு இஷ்டமில்லாத ஒன்றை அவரது குமாரர் அநுஷ்டித்தாரென்று கூறுவது அடுக்குமோ? पित्रे ब्रह्मोपदेष्ट्रे मे गुरवे दैवताय च என்று அநுஸந்தித்த குமாரர், திருத்தகப்பனார் திருவுள்ளத்திற்கு விருத்தமாகச் செய்வாரோ? திருத்தகப்பனாரின் நியமனத்தாலேயே திருக்குமாரர் கலியிலும் யாகாநுஷ்டானம் செய்திருக்க, இதில் ஸ்ரீ தேசிகன் திருவுள்ளத்தை விபரீதமாகக் கூறமுடியுமோ

ஆகையால் கலியிலும் யாகாநுஷ்டானமுண்டென்பதே ஸ்ரீ தேசிகனின் திருவுள்ளம். இதை ஸ்தான விசேஷாதிகாரத்தில் ஸ்ரீதேசிகன் ஸ்பஷ்டமாகக் கூறுவதைக் காணலாம். பக்ஷத்தில் एकपादस्थिते धर्मे என்பதால் கலியில் தர்மம் குறைந்து விடுமாகையால் பகவத் பக்தர்கள் எங்கு வஸிக்கலாமென்று கேட்

தற்கு பகவான் சொன்ன பதிலான சுலோகங்களை ஸ்ரீ தேசிகன் அங்கு பிரமாணமாக எடுக்கிறார்.

यत्र वेदाश्च यज्ञाश्च तपस्सत्यं धृतिः क्षमा ।
हिंसाश्च धर्मसंयुक्ताः प्रचरेयुस्सुरोत्तमाः ॥
स वै देशोहि वस्तव्यः मा वोऽधर्मः पदा स्पृशेत् ॥ என்று

கலியில், எங்கு வேதங்களும், யக்ஞாதிகளும், தர்ம யுக்தமான ஹிம்ஸைகளும் நடக்கின்றனவோ அந்த தேசத்தில் வஸித்தால் அதர்மம் கிட்டவே வாராது. என்று இந்தசுலோகத்தில் கூறப்படுகிறது. இந்த சுலோகத்தை ஸ்ரீ தேசிகன் பிரமாணமாக் குறிப்பிட்டதிலிருந்து கலியிலும் சாஸ்திரீய ஹிம்ஸா யுக்தமான ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் நடக்கலாமென்பதை அங்கீகாரம் முக்யமான விஷயம். இவ்விஷயமான சாஸ்திர பிரமாண நிரூபணத்தை முதல் பாகத்தில் விவரமாகக்காணலாம்

இதில் ஸாராஸ்வாதினீ பிரமாணம்

இங்கு हिंसाश्च धर्म संयुक्ताः என்பதற்கு ஸாராஸ்வாதினீயில் செய்துள்ள விவரணம் வெகு முக்யமானது. அதாவது:—

धर्म संयुक्त पशुविशसन सांग ज्योतिष्टोमादि यज्ञाश्च यत्र प्रचरेयुः ॥ என்று

சாஸ்திரீயமான பசு ஹிம்ஸா தர்மத்துடன் கூடிய ஜ்யோதிஷ்டோமாதி யக்ஞங்கள் எங்கு நடக்கின்றனவோ அங்கு பிரபந்நாதிகள் வஸிக்கவேணுமென்று நிர்ணயிக்கப்பட்டது. ஆகையால் சவிபஸுகயுக்தமான ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் கலியிலும் [illegible]டென்பது ஸ்ரீதேசிகன் திருவுள்ளமாகிறதுடன் அத்தகைய ப[illegible]மான வைதிக தர்மம் நடக்குமிடத்தில் பிரபந்நாதிகள் வ[illegible]க வேணுமென்று பிரபந்நர்களுக்கு நியமனம் செய்வதும் மி[illegible]மான பிரமாணமாகும். ஆதலால் தான் கலியிலும் இன்று [illegible]ரையில் மஹாபாரமைகாந்திகளான சிஷ்டாக்ரேஸரர்கள் அநேகர் யக்ஞாநுஷ்டானம் செய்ததும் செய்துவருவதும் அத்யந்தம் ஶாஸ்திரீயமா[illegible]க்கிறது.

ஆகவே ஸ்ரீ தேசிகனுக்குக் கலியில் அக்நிஹோத்ராநுஷ்டானம் இஷ்டமில்லையென்று கூறுவது அவர் திருவுள்ளத்திற்கு விருத்தமேயாகும். இவ்வாறெல்லாம் துர்பலமான கக்ஷியைச் சொல்லியாவது ஸ்ரீ தேசிகன் அக்நிஹோத்ராநுஷ்டானம் செய்யவில்லையென்று ஸ்தாபிக்கவிரும்புகிறவர்களுக்கு அதனால் ஏற்படும் லாபமென்னவென்று தெரியவில்லை. சாஸ்திர தத்வத்தை மறைத்துவிடமுடியுமா ?

கலியில் ஸன்யாஸமும், அக்நிஹோத்ரமும் சேர்ந்தே நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் ஸன்யாஸத்தைமட்டும் ஆசரிக்கப்பிரமாணமென்ன? வேதப்பிரசாரமும், வர்ணப்பிரிவும் உள்ளவரையில் கலியிலும் இந்த இரண்டும் அநுஷ்டிக்கப்படலாமென்ற வசனபலமல்லவோ அதற்குப் பிரமாணம்? அப்படியிருக்க [illegible]தை மட்டும் தனியாகப் பேசமுடியுமா? [illegible]ல் [illegible]யில் காம்யாக்நிஹோத்ரமே நிஷேதிக்கப்பட்டதேயல்லது நித்யாக்நிஹோத்ரத்திற்கு நிஷேதமில்லை. இத்யாதி நிரூபணங்களை பூர்வபாகத்தில் விரிவாகக்காணலாம்.

இவ்வாறு ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்கள் அக்நிஹோத்ர ஜ்யோதிஷ்டோமாதிகளைப் பற்றியும், யாகபசு விஷயத்தைப்பற்றியும் இன்னும் பல விடங்களிலும் கூறியிருப்பதை விஸ்தாரபயத்தால் இங்கு விவரிக்காமல் இத்துடன் நிறுத்திக்கொள்ளுகிறோம். யக்ஞாதி விஷயமாக வேறு அநேக முக்ய சாஸ்திர நிர்ணயங்களை முதல் பாகத்தில் கண்டுகொள்வது. சுபம்!

श्रुतिस्मृतिसदाचार्य सूक्ति सन्नय शोभिनी ।
यज्ञसंरक्षिणी सेयं सदा भातु सतां मुदे ॥ १ ॥
श्रुतिपथविरुद्धजल्पैः जनितं कालुष्यमपनयन्नखिलं ।
वैतानधर्मरक्षां वैदिक सुमनोजन प्रियां सुगुणां ॥ २ ॥
नित्याग्निहोत्रिणः श्री सुन्दरतातार्य यज्वनः सुधियः ।
तार्तीयीकस्तनुजः तनुतेस्म यज्ञपूरुष प्रीत्यै ॥ ३ ॥
श्रीवासतातयाचार्य यज्वाग्रजबुधेक्षितः ।
गोपालदेशिकश्चक्रे कृतिं सद्भिः प्रचोदितः ॥ ४ ॥
अनुतिष्ठन्तुवा मा वा कलौ यज्ञक्रियां द्विजाः ।
तथापि शास्त्र तत्वंतु रक्षणीयमिति श्रुतिः ॥

S. J. P. W. Ltd., Kmu. T. E. 138 C. [illegible] J0. 20-10-45

